# சங்கத்தமிழ் மாலை

## (திருப்பாவை) பொதுநிலை ௨



ஆய்வாளர்

ப்ரபன்னா திருமதி கோதை வேங்கடபதி
(ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ)

# சங்கத்தமிழ்மாலை

## (திருப்பாவை)

### பொது நிலை ஆய்வு

திராவிடவேதத்தின் தோற்றம், ஸ்ரீஆண்டாளின் அவதாரம், வக்த்ரு, பரபந்த வைலக்ஷண்யம், திருப்பாவையில் அடங்கியுள்ள வைணவ கருத்துக்கள், மற்றைய க்ரந்தங்களுடன் ஒப்பீடு, திருப்பாவையில் உள்ள விசேஷ அர்த்தங்கள், ஆண்டாளின் கல்யாணம், அவர் அவதரித்த ஊரின் சிறப்பு, திருப்பாவையின் தாக்கம், ஆகியவை அடங்கியது.



"ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ : ஆய்வாளர்

"ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யஸ்ரீ"

**திருமதி கோதை வேங்கடபதி**

**3/20, C.P.W.D. Qtrs.**
**Indira Nagar, Adyar,**
**Chennai - 20**
**✆ : 4411091**

*First Edition 1999*

*Pages XVIII + 200 = 218*

*Price:*



This book is published with the Financial Assistance from the T.T.D. under their scheme
**'Aid to Publish Religious Books'**

**ஆய்வாளர்:**

ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யஸ்ரீ"

ப்ரபன்னா **திருமதி கோதை வேங்கடபதி**

Printed by: **Kopparam Printers**, Triplicane, Chennai-5. Phone: 8571725

# பதிப்புரை

ஸ்ரீமத்யை கோதாயை நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செய்த தமிழமுதும், தேனமுதுமான "சங்கத்தமிழ் மாலை"யென்னும் இத்திருப்பாவையை "வேதமனைத்திற்கும் வித்து" என்பர் நம் வைணவச் சான்றோர். இதற்கு தாத்பர்யம் என்ன?; கீதாசாரியன் அருளிச் செய்த பகவத் கீதையைக் காட்டிலும் இந்த கோதையின் கீதை மேம்பட்டது என்பதன் காரணமென்ன?; இது எப்படி "கோதோபநிஷத்" ஆனது?; இதில் உள்ள வைணவ ரஹஸ்யார்த்தங்கள் என்னென்ன?; இந்நூலையியற்றினவரான ஸ்ரீ ஆண்டாள் எப்படி மற்றைய ஆழ்வார்களை காட்டிலும் மேம்பட்டவர்?; சங்ககாலத் தமிழைக்காட்டிலும் எக்காலத்திற்கும் பொருந்தும்படியான தமிழில் அருளிச் செய்யப்பட்ட இத்திருப்பாவையில் "மனித நேயமும்" "வாழ்வியலும்" உலக மக்களுக்கு எவ்வாறு உரைக்கப்பட்டுள்ளன? என்பனவற்றை ஒரு புதிய கோணத்தில் ஆய்வு செய்துள்ளேன்.

இதை கண்ணுற்ற பல அறிஞர்கள் மிகவும் கொண்டாடியதுடன் இதை புத்தகவடிவில் கண்டிப்பாக வெளிவரும்படி செய்யுங்கள், இதை பள்ளி, கல்லூரி மாணாக்கர்கள் அறிந்து கொள்வதோடு, பொதுவாக அனைவரும் படித்து மகிழ ஏற்ற புத்தகமாயிருக்கும் என்று பணித்தார்கள். அப்பெரியோர்களின் வார்த்தைகளை சிரமேற்கொண்டு அனைவரும் படித்து மகிழ எளிய தமிழில் பல அறிய செய்திகளையும், ஒரே புத்தகத்தில் மிகவும் குறைந்த விலையில் பொதுமக்கள் பயனடைய மிகுந்த பிரயாசையுடன் என்னுள்ளே தோன்றாத் துணையாக நின்று என்னை இயக்கும் பகவான் ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மனின் பொன்னார் திருவடிகளை நினைந்து இதை ப்ரசுரிக்கின்றேன்.

இதில் ஸ்ரீ ஆண்டாள் ஜாதகம், சித்திரங்கள், ஆண்டாளின் வண்ணப்படங்கள், இவற்றையும் இணைத்து ஸ்ரீ ஆண்டாளின் திருவருள் உங்கள் இல்லம் தோறும் தழைக்க வேண்டும் என்று செய்துள்ளேன்.

ந்யாய வேதாந்த வித்வான் காரப்பங்காடு. உ.வே. வேங்கடாச்சாரியார் ஸ்வாமியும் அவருடைய தர்ம பத்தினியான திருவேங்கடத்தம்மாளும் ஆகிய இந்த திவ்ய தம்பதிகளின் நினைவுக்குறியாக இந்நூலை வெளியிடுகின்றேன்.

இந்நூலை புத்தகமாக வெளிவர முதன்முதலில் ஊக்கமளித்த அடியேன் சித்தப்பா டாக்டர் K.V. பார்த்தசாரதிஸ்வாமிக்கு என் அன்பு கலந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு மதிப்புரை அளித்து அடியேனை ஊக்குவித்த பேராசிரியர் ஸ்ரீமான் உ.வே. டாக்டர் K.A.மணவாள ஐயங்கார் ஸ்வாமியின் திருவடித் தாமரைகளுக்கு அனந்த கோடி நமஸ்காரங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பணியை மிகவும் சிறப்பாக குறுகிய காலத்திலும், குறித்த நேரத்திலும் செய்து முடிக்க உபகரித்த கொப்பரம் பிரிண்டர்ஸ் & "நண்பர்கள் கணிப்பொறி" உரிமையாளர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை வெளியிடுவதன் மூலம் கிடைக்கும் த்ரவ்யங்களை ஸ்ரீ ஆண்டாளின் கைங்கர்யத்திற்கே உபயோகப்படுத்த வேணும் என்று முடிவு செய்துள்ளேன். ஆகவே பல மகான்களின் மங்களாசாஸனத்தைப் பெற்ற "இச்சங்கத்தமிழ் மாலை" நூலை நீங்கள் வாங்கி படித்து இன்புறுவதோடு, அனைத்து மங்கள நிகழ்ச்சிகளுக்கும் பரிசாக இதை வாங்கிக் கொடுப்பதன் மூலம், இதன் பணியில் நீங்களும் பங்கு கொண்டு எங்களையும் மேலும் இப்பணியில் சிறக்கும்படி செய்பவர் ஆவீர்! என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அன்பர்கள் அனைவரும் செங்கன் திருமுகத்து செல்வத் திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புற ஸ்ரீ பெரிய பிராட்டியார் ஸமேத ஸ்ரீ பெரிய பெருமாள் திருவடி வாரத்தில் ப்ராத்திக்கின்றேன்.

✆ : 4411091
3/20, C.P.W.D. Qtrs.
Indira Nagar, Adyar,
Chennai - 20

இங்ஙனம்,

**கோதை வேங்கடபதி.**

(பதிப்பாசிரியர்)

# அணிந்துரை

"சங்கத்தமிழ்மாலை" என்றும் இந்நூல் "திருப்பாவை" என்ற, ஆண்டாளின் அருளிச் செயலின் பொருட்சுருக்கமாக அமைந்துள்ளது; இதன் ஆசிரியர் "கோதை" என்னும் பெயருடைய பெண்மணி. மற்றும் இவர் இதனை எழுதிய விவரங்களை நூன் முகத்தில் விவரித்துள்ளார். இவர், நம் வைணவ மதக்கோட்பாடுகளைக் கற்ற வித்யார்த்தி தசையில், திருப்பாவையின் கருத்துக்களைத் தாம் அறிந்த வரையில் ஒழுங்குபடுத்தியும், விடாமலும், சுருக்கியும், மற்றும் தம் போன்ற மாணாக்கர்களுக்குப் பயன்படும்படியும் விரிவான கட்டுரை வடிவில் எழுதியுள்ளார். சிறப்பாக திருப்பாவையின் பூருவாசார்யர்களுடைய வியாக்யானங்கள், அவற்றை யனுஸரித்து இந்நாளில் தோன்றிய "திருப்பாவை ஸாரம்" (புத்தூர் K. ஸ்ரீநிவாஸய்யங்கார் இயற்றியது) போன்ற நூல்களின் துணை கொண்டு இதனை இயற்றியுள்ளதாகத் தெரிகிறது.

பெரும்பாலும் லௌகீக விஷயங்களில் ஆடம்பரப் பிராயராக விளங்கும் இக்காலப்பெண்களில், சற்று மாறுபட்டு பகவத் விஷயத்தில் மனமார ஈடுபட்டு, அவ்வீடுபாட்டைத் தம் போன்ற பெண்களுக்கும், (ஏன்? ஆடவர்க்கும் கூட) பயன்படும்படி இக்கட்டுரையைத் தொகுத்தது மிகவும் போற்றத்தக்கதே. இத்தகைய குடும்பப் பெண்டிராலேயே நம் நாடு நல்வழியில் முன்னேற்றம் காணமுடியும் என்பது இங்கு குறிக்கொள்ளத்தக்கது. இவர்தம் போன்ற பெண்களைச் "சங்கம்" ஆக அமைத்துக் கொண்டு, வெறும் பொழுது போக்காமல் இது போன்ற நற்செயல்களில் ஈடுபடுவதும், மற்றும் திருப்பாவைக் காலங்களில் (மார்கழி மாதத்தில்) இசையோடு பாடி, சொற்பொழிவாற்றி சமயத் தொண்டாற்றி வருவதும் மிகவும் போற்றத்தக்கது. இச்செயல்களின் மூலம் தமக்குக் கிடைக்கும் பொருள் வருவாய்ப்பினையும் கூட, இவர் ஆங்காங்கு கோவில் கைங்கரியங்களிலேயே விநியோகித்து வருவதையே குறிக்கோளாகக் கொண்டிருப்பதும், இவருடைய பக்தி உள்ளத்தைப் புலப்படுத்தும்.

இக்கட்டுரை நூலைப் பொதுமக்கள் நன்முறையில் வரவேற்று, மேன்மேலும், இத்துறையில் இவரையூக்குவிப்பார்கள் என்று நம்புகிறேன்.

இவர் இது போன்ற சரணாகதி மார்க்கத்தைப் புலப்படுத்தும் பல திவ்ய க்ரந்தங்களை எழுதி இத்துறையில் மேலும் மேலும் சிறக்க கருணையே வடிவான ஸ்ரீகோதா ஸமேத ஸ்ரீராஜகோபாலஸ்வாமியின் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறேன்.

**எங்கும் திருவருள் பெற்று இன்புறுக!!**
**சுபமஸ்து**

**K. நரசிம்ம ஐயங்கார்**
**வித்வான் ஸ்ரீவில்லிபுத்தூர்.**
**(ஸ்ரீரங்கம்)**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

**Dr. K.A. MANAVALAN,** M.A., Ph.D.
(B.O.L. Vidwan Siromani Dip. in Hindu Religion)
Professor of Tamil (Retd.)
D.G. Vaishnav College, Chennai - 600 106.
Director : **Sri Ramanuja Siddhantha Centre,**
Triplicane, Madras -5

Resi. : 21, Southmada str.,
Triplicane,
Chennai - 600 005.

# மதிப்புரை

## சங்கத் தமிழ்மாலை

அந்தமிழால் நற்கலைகளை ஆய்ந்து உரைத்தவர்கள் ஆழ்வார்கள். இந்த உலகின் இருள் நீக்க வந்துதித்தவர்கள். ஆழ்வார்கள் திருவாய்மலர்ந்து அருளிய இன்னிசைப்பாடல்களுக்கு நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் என்று பெயர். இதில் முதல் ஆயிரத்தைச் சேர்ந்த நாச்சியார் திருமொழி, திருப்பாவை என்னும் ஏற்றமிகு எழுத்துக்களுக்குச் சொந்தக்காரி 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகிய சோலைப்பைங்கிளி' ஆண்டாள். பாடவல்ல நாச்சியாரான கோதை நாச்சியார் தாமருளிய திருப்பாவையைச் **"சங்கத்தமிழ்மாலை"** என்று முற்றுப் பாசுரத்தில் பெயர் சூட்டிமகிழ்ந்துள்ளாள்.

வேதமனைத்துக்கும் வித்தாய் விளங்கிய இத்திருப்பாவைக்குப் பல அறிஞர்கள் உரைநலம்கண்டு உலகுக்கு உதவியுள்ளனர். அவ்வுரையாசிரியர்களின் அடிச்சுவட்டில் இத்திருப்பாவைக்கு மேலும் புதுநலம்கண்டு, பட்டாடை உடுத்திக்களிக்க ஆசைப்பட்டவள் இந்நூலாசிரியையாகிய வேங்கடபதி கோதை. பல வண்ணநூல்களைத் தறியில் இட்டுச் சிக்கில்லாமல் சிதைவில்லாமல் பட்டாடை நெய்வது சுலபமல்ல. ஆனால் இப்பூங்கோதை சிக்கில்லாமல் சிதைவில்லாமல் மிக்க கவனத்துடன் நெய்து வெற்றிபெற்றதற்குக் காரணம் இவள் திருவம்சப் பெருமையே ஆகும். அதாவது நியாயவேதாந்த வித்வான் ஸ்ரீமான் உ.வே. காரப்பங்காடு வேங்கடாசாரியர்ஸ்வாமிகள் பேத்தி இவர். ஸ்ரீமான் உ.வே. சிங்கப்பெருமாள்ஸ்வாமி போன்ற வித்வத்ஸார்வ பௌமர்கள் தோன்றிய பெருங்குலம். புகுந்த குலமோ, மிக்க பெரும் புகழாளர், ஆராய்ச்சி வல்லுநர் மதுரைத் தமிழ்ச் சங்கம் ஸ்ரீ உ.வே. திருநாராயண ஐயங்கார் ஸ்வாமியின் திருப்பேரனார் ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான் ஸ்ரீ உ.வே. K.நரசிம்ம ஐயங்கார்ஸ்வாமி, கணவரோ வித்வான் ஸ்ரீமான் உ.வே. வேங்கடபதி ஐயங்கார்ஸ்வாமி.

இக்குலப் பெருமைகளால் இந்நூலாசிரியை ஞானப்பிரானாகிய ஸ்ரீவராஹநாயனாரையே வழிகாட்டியாகக் கொண்டு இத்திருப்பாவையாகிய ஆழ்கடலில் குளித்து மூழ்கி நன்முத்துக்களை வெளிக்கொணர்ந்திருக்கிறாள். ஆசார்யரான ஸ்ரீமான் உ.வே. கோயில் கந்தாடை அண்ணன் ஸ்வாமிகளின் நேர்முக ஆசீர்வாதத்தைப் பெற்றவர் என்ற பாக்கியமும் உண்டு. இனி இந்நூலின் சிறப்பு அம்சங்களைக் காணலாம். பக்கம் நான்கில் விசிஷ்டாத்வைதம் பற்றிய விளக்கம் ஸ்ரீநம்மாழ்வார் அருளிச்செயல் கொண்டு நன்கு விளக்கப்பட்டுள்ளது. திவ்வியப் பிரபந்தத்துக்கு தெய்வத்தன்மை உண்டு என்பதைக் கூடற்புராணச் செய்யுளாலால் நிலைநாட்டிய இடம் பக்கம் பதினைந்தில் ஜீவபரசம் பந்தத்தை விவரிக்கும் இடம்.

பக்கம் பதினெட்டில் வராஹநாயனார் வாக்கும் வாழ்வும் கூறும் இடங்கள் பல மற்றும் ராம - கிருஷ்ண கூறிய இடங்கள் திருப்பாவைப் பாசுரார்த்தங்களோடு இச்சரம ஸ்லோகார்த்தப் பொருள்கள் பொருந்தியிருக்குமாற்றை வெளிப்படுத்திக் கூறிய இடங்கள். மற்றும், இருபத்தைந்தாம் பக்கத்தில் ஆழ்வார்களின் விஞ்சிய தன்மையளாய் விளங்கி நிற்கும் ஆண்டாளின் சரம பர்வநிஷ்டையை விவரித்திருப்பது பாராட்டுக்குரியது. புதிய நோக்கிலும் இது உள்ளது. இதுபோலவே தத்வத்ரய ஸாரம், ரஹஸ்யத்ரயஸாரம், மந்திரார்த்தஸாரம் என்று இவைகளெல்லாம் திருப்பாவைப் பாசுரார்த்தங்களில் எங்கெங்கு கூறப்பட்டுள்ளன என்பதை நூல் முழுவதிலும் பூர்வாசார்யர்களின் கருத்தை தொகுத்துக் காட்டியிருப்பது ஆசிரியையின் நுண்மாண் நுழைபுலத்துக்கு எடுத்துக்காட்டாகும்.

யாழினிசை வேதத்தியலாகிய திருவாய்மொழியில் கூறப்பட்டுள்ள "அர்த்த பஞ்சகம்" திருப்பாவையில் எங்கெல்லாம் கூறப்பட்டுள்ளன என்பதனையும், எம்பெருமானே உபாயம், அவனே உபேயம் என்பதனையும், தக்க பாசுரச்சான்றுகளோடு இந்நூலில் காட்டப்பட்டுள்ளது. இது பாராட்டுதற்குரியது.

"கோதையின் சங்கத்தமிழும்" - சங்காலத்தமிழும் என்ற தலைப்பிலும் மற்றும் சங்கத்தமிழ்மாலை என்ற தலைப்பிலும் பரிபாடல் பாடல்களைக் கொண்டும் மற்றும் தொன்மையான மரபு வழிச் சான்றுகள் கொண்டும் நாராயணனாகிய திருமாலே முழுமுதற்கடவுள் என்பதனை நிலைநாட்டியவிதமும் திருப்பாவைப் பாசுரங்களோடு ஒப்புநோக்கிய விதமும் பெரிதும் ஆய்வாளர்களுக்கு அமுதூறும் செய்திகளாகும். மற்றும் கோதையின் கீதமும், கோவிந்தன் கீதையும் என்ற தலைப்பில் சுருக்கமாகத் திருப்பாவையின் ஏற்றம் விளக்கப்பட்டுள்ளது.

இவைகளைத் தவிர, வேதமனைத்தும் வித்தாகும் கோதை தமிழ் என்பதை ரிக்வேதம், சாந்தோக்யம், ஸ்வேதோபநிஷத், கடோபநிஷத் போன்ற வேத உபநிஷத் வாக்கியங்களோடு ஒப்புமை காட்டியிருக்கும் அழகு சிறப்புடைத்து முடிவாக மார்கழித் திங்கள் தொட்டு, வங்கக்கடல்கடைந்த பாசரம் முடிய முப்பது பாட்டுக்கும் பூர்வாசாரியர்களுடைய வியாக்கியானங்களைத் தழுவி எளிய தமிழில் உரை எழுதி, ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் விசேஷார்த்தங்களை நெஞ்சில் பதிய எழுதியிருப்பதும் கற்போர்க்குக் கழிபேருவகை ஊட்டும் என்பதில் ஐயமில்லை.

இயல், எட்டில் ஆண்டாள் ரங்கமன்னார் திருக்கல்யாண வைபவம், வாரணமாயிரப் பாசுரங்களோடும், மங்கள வாத்திய முழக்கங்களோடும் திருவரங்கத்திலும், ஸ்ரீவில்லிபுத்தூரிலும் ஆண்டாள் (அரங்கன்) ரங்கமன்னார், பக்ஷிராஜனான கருடாழ்வாரோடு நம், கண் முன்னே, காணும் போதெல்லாம் ஸேவை தரும்பாங்கில் சுபமாக எழுதி நூலை நிறைவு செய்துள்ளார். மேலும் இந்நூலின் கடைசியில் ஸ்ரீ ஆண்டாள் ஜாதகமும், ஒவியப் பாசுரமும், கோதை தமிழை இசையில் பரப்பிய சங்கித வித்வான்களின் விவரங்களும் மற்றும் எம்பெருமான் படங்களும் ஆசாரியர்களுடைய படங்களும் இந்நூலுக்கு அணிசெய்கின்றன.

இத்தகைய வைணவ பக்தி நெறிக் காவியக்கடலில் குளித்து நன்முத்துக்களை வெளிக்கொணர்ந்து உலகுக்கு உதவிய வேங்கடபதி கோதைக்கு நல்வாழ்த்தினைக் கூறி மகிழ்கிறேன்.

**K.A. மணவாள ஐயங்கார்,**
திருவல்லிக்கேணி.

ஸ்ரீ:

ஸ்ரீராமஜெயம்



பொன்னடியாம் செங்கமலம்

(ஸ்ரீரங்கம்)

**பெரிய ஜீயர் திருவடிகளே சரணம்**

க்ருதாஞ்சலி

ஸ்ரீரங்கராஜன், ஸ்ரீரங்கம்



நீசனேன் நிறைவொன்றுமிலேன் என் கண் பாசம் வைத்த

பரஞ்சுடர் சோதியின் பொற்றாமரையடிகளுக்கு

**எந்தன் அஞ்சலி**

# நினைவாஞ்சலி



பொருளல்லாத என்னைப் புவியில் ஒரு பொருளாக்கி, கண்ணனுக்கே
ஆமது காமம், அறம், பொருள், வீடு என்றுரைத்து, அவன் பொன்னடிக்கீழ்
குற்றேவல் புரிய வைத்த அடியேனின் பிதாமஹரும், ஞானாசார்யருமான
**காரப்பங்காடு ஸ்ரீ உ.வே.வேங்கடாச்சாரியார் ஸ்வாமியின்**
தேனே மலரும் திருப்பாதங்களை வணங்கி
இவ்வாய்வைத் துவங்குகின்றேன்.



காரப்பங்காடு
ஸ்ரீ உ.வே.சிங்கராச்சாரியர் ஸ்வாமி

# நூன்முகம்

ஸ்ரீ பெரிய பிராட்டியார் ஸமேத பெரியபெருமாளின் பேரருளால் அடியேன் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்பராதயக் குடியிலே ஜனித்து அதைப்பற்றி அறிந்து கொள்ளும் பாக்ய விசேஷத்தைப் பெற்றேன். "ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ" என்னும் இந்த வைஷ்ணவ சம்ப்ரதாய கல்வி நிறுவனத்தில் சேர்ந்து மூன்று வருட காலம் பயிலும் பாக்கியமும் அடியேனுடைய பர்த்தாவால் (ஸ்ரீவில்லிபுத்தூர் ந. வெங்கடபதி ஐயங்கார் ஸ்வாமி) கிடைக்கப் பெற்றேன். இந்தக் கல்வி திட்டத்தில் மூன்றாம் ஆண்டு முடிவில் (பல்கலைக்கழகங்களில் உள்ளது போல்) நாங்கள் படித்த பாடங்களில் இருந்து ஒரு பகுதி எடுத்து ஆய்வு செய்யவேண்டும். அதன்படி **சங்கத்தமிழ் மாலை** என்னும் தலைப்பில் ஆண்டாள் அருளிய திருப்பாவை பாசுரங்களை இந்த நிறுவனத்தின் இயக்குநர் ஸ்ரீக்ருஷ்ணமாசார்யார் ஸ்வாமி அவர்களால் ஆய்வு செய்யப் பணிக்கப்பட்டேன்.

அடியேன் தந்தைவழி பாட்டானாரான உ.வே. காரப்பங்காடு **வேங்கடாச்சார்யார்** ஸ்வாமி அடியேனிடத்தில் சிறுபிராயத்திலே ஆண்டாளையும் திருப்பாவையையும் இறுகப்பிடித்துக்கொள், உலகத்தில் இதை விட உயர்ந்தது வேறு ஒன்றுமில்லை என்று அடிக்கடி சொல்லித் தினந்தோறும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இத்திருப்பாவையை அவரவர் இல்லம் தோறும் ஓத வேண்டும் என்று நம் ஆசார்யர்கள் நமக்குப் பணித்திருப்பதிலிருந்து இதன் ஏற்றத்தை அறிந்து கொள்ளலாம் என்று சொல்லுவார். அப்போது அத்தனை விவரம் தெரியாத வயது. இருப்பினும் அவர்மூலம் (ஞானாசார்யன்) உபதேசமானபடியால் அதிலேயே அடிக்கடி ஆழங்கால் பட்டு, அதிலே ஊன்றி இருப்பதையே ஒரு வழக்கமாக ஆக்கிக் கொண்டிருந்தேன்.

அடியேனுடைய பிறந்த இடம் திருச்சேறை (Birth Place) பாகவத சம்பந்தம் ஊற்றெடுக்குமிடம். அடியேன் பிறந்த அகமோ கிடாம்பியார் வம்சத்தவர்கள் (எம்பெருமானாருக்கு அந்தரங்க கைங்கர்யபரர்கள்). அடியேன் கொள்ளு தாத்தா **காரப்பங்காடு உ.வே. சிங்கபெருமாள் ஸ்வாமி**, தந்தை வழி பாட்டனார் **ந்யாய வேதாந்த வித்வான் காரப்பங்காடு உ.வே. வேங்கடாசாரியர் ஸ்வாமி,** தகப்பனார் **கைங்கர்ய சிரோன்மணி K.V.சிங்கராசார்யார் ஸ்வாமி**; புகுந்த விடமோ ஸ்ரீவில்லிபுத்தூர் **உ.வே. K. நரஸிம்மய்யங்கார் ஸ்வாமி,**

(தமிழ்ச்சங்கம் திருநாராயண ஐயங்கார் பேரன்). இக்குலத்தின் பெருமை எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும், எம்பெருமான் தொண்டர்குலமாய் விளங்கினபடியால், அடியேனும் அதில் பங்கு கொண்டு ஏதேனும் செய்யவேணும் என்ற பாரிப்பு அடியேனுக்கு இருந்து வந்தது.

அடியேன் ஒரு முறை திருநாராயணபுரத்துக்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் **மேல் கோட்டை நரஸிம்மப் பெருமாளைச்** சேவித்து மங்களாசாஸனப் பாசுரங்களைப் பாடிக்கொண்டிருந்த வேளையில், அடியேன் தாத்தாவிடம் காலக்ஷேபம் கேட்டிருந்த ஸ்வாமி ஒருவர் நீங்கள் தாத்தாவின் ஸ்ரீகோசங்களின் துணைகொண்டு ஏதேனும் காலக்ஷேபங்களைச் செய்து கொண்டிருக்கவேணும். குறைந்தது திருப்பாவையாவது சாதித்துக் கொண்டிருங்கள் என்று கட்டளையிட்டார். திருநாராயணனின், நரஸிம்மனின் திவ்யஆணை என்று, அதைச் சிரமேற் கொண்டு ஒரு சிறு பாகவத கோஷ்டியின் துணையால் ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும், திருப்பாவையையும் சேவித்துக்கொண்டும், அதன் அர்த்த விசேஷங்களையே அநுபவித்துக் கொண்டும் இருக்கத் தலைப்பட்டேன். சிற்சில இடங்களில் காலக்ஷேபமாகவும் இசையுடன் சொல்லிக் கொண்டிருந்தேன்.

அடியேனுக்கு ஸமாச்ரயணம் செய்த ஆசார்யர் **கோயிலண்ணன் ஸ்வாமி,** அந்த ஸ்வாமி தம் வாயால் அடிக்கடி ஆண்டாள் என்று திருவாய் மலர்ந்தருளி விசேஷமாகக் கடாக்ஷித்து அருளினார். அடியேன் ஒரு காலவிசேஷத்தில் சங்கீதாசார்யரான ஸ்ரீராம பாரதி ஸ்வாமி அவர்கள் திருப்பாவை இசை நிகழ்ச்சியைக் கேட்க நேர்ந்தது, அவர் அநுபவித்துப் பாடும் போது அதில் பல அர்த்த விசேஷங்கள் தொனிப்பதை உணர்ந்தேன். இதுவும் என்மனதில் ஸ்ரீஆண்டாளின்மேல் உள்ள பக்தியை மேலும் வளர்த்தது. மேலே சொன்ன இவையனைத்தும் எம்பெருமானிடத்திலும், ஆண்டாளிடத்திலும் எனக்குள்ள ப்ரேமையையும் பக்தியையும் வளர்க்க, வழிகாட்டியாக இருந்தன.

அடியேனுக்கு இந்த சங்கத்தமிழ்மாலையை ஆய்வு செய்யும்படி அநுக்ரஹித்த ஸ்ரீக்ருஷ்ணமாசாரியார் சொல்லும் போது "உங்கள் தாத்தா மிகவும் விரும்பியும், அதிகமாகவும் உபந்யாஸம் பண்ணியது திருப்பாவை, ஆகையால் தாங்கள் அதையே ஆய்வு செய்யுங்கள்" என்று கூறினார்.

அடியேனுக்கு ஆய்வுக்கட்டுரை எழுதும் அளவிற்கு என்ன தெரியும்? என்று புரியவில்லை. சமுத்திரக்கரைக்கு யார் வேண்டுமானாலும் போகலாம், அந்த அழகைப் பார்க்கலாம், அநுபவிக்கலாம், சந்தோஷிக்கலாம், ஆனால் அதில் மூழ்கி எழுந்திருக்க முடியுமா? நான் இன்னும் அந்த ப்ரமிப்பிலிருந்து மீளவேயில்லை. இருப்பினும் இதைப் பகவத் பாகவதாஞ்யா கைங்கர்யமாக

எடுத்துக் கொண்டு இவ்வாய்வைத் துவங்குகின்றேன். பூர்வாசார்யர்களின் ஆசியின் பலத்தால் ஏதோ சிறிது மூழ்கி (துறை படிந்து என்னும் வகையில்) திணறி வெளிவந்துள்ளேன். இவ்வாய்வில் உள்ள நிறைகள் அனைத்தும் பூர்வசார்யர்களைச் சாரும். குறைகள் இருப்பின் அது அடியேனை சாரும். குறைகளை நீக்கி நிறைவு கொள்ள வேண்டுகிறேன்.

இவ்வாய்வை மேற்கொள்ள, இப்படி ஒருவாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமிக்கும், விஷயங்களைக் கோவைபடுத்தும் போது அடிக்கடி ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாய விஷயங்களை நினைவு கூர்ந்து உபகரித்த அடியேனுடைய பர்த்தாவிற்கும், தலைப்புகளைப் பகுத்துக் கொடுத்து விஷயங்களை உபகரித்த கத்திக்கிடாம்பி M.S. வேங்கடாசார்யர் ஸ்வாமிக்கும், குண்டலம் திருமலாசாரியார் ஸ்வாமிக்கும் இவைகளை தொகுத்துச் சீர்படுத்த உதவிய செல்வி. மு. ப. ச்யாமளாதேவி, வெ.விஷ்ணுபிரியா அவர்களுக்கும், என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**3/20, C.P.W.D. Qtrs.**
**Indira Nagar, Adyar, Chennai - 20.**

இங்ஙனம்,
கோதை வெங்கடபதி.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி — ஏழ்பாரும்
உய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பாதகமுள்ளவை தாமே ஒழித்துப் பரிந்தவர்க்குச்
சாதகமானதும் ஈதென்றும் கொண்டு சரண்கொடுக்கும்
மாதகவோன் மணவாள மாமுனிப்பரன் மாமலர்த்தாள்
பாதுகையைச் சரணாய் முடிமேல் கொண்டு பற்றினர்க்கே.

★ ★ ★ ★

# பொருளடக்கம்



***ஸ்வோச்சிஷ்ட மாலிகா பந்த கந்த பந்துர ஜிஷ்ணவே***
***விஷ்ணு சித்த தநூஜாயை கோதாயை நித்ய மங்கள***

## இயல் 1

# நுழை வாயில்

**ஆய்வு நோக்கம்:** ஆழ்வார்கள் வரிசையில் ஸ்ரீஆண்டாளைப் பற்றியும், அவருடைய திவ்ய ஸூக்திகளைப் பற்றியும் பலர் ஆய்வு செய்து உள்ளனர். என்னுடைய பாட்டனார் ந்யாயவேதாந்த வித்வான் காரப்பங்காடு உ.வே. வேங்கடாச்சார்யர் ஸ்வாமி திருப்பாவையையே முக்கிய உபன்யாசமாகச் செய்து கொண்டிருந்தபடியாலும், அவர் அடியோங்களுக்கு ஆண்டாளைப் பற்றிச் சொல்லும் போது "**உலகத்திலுள்ள அனைத்து சாஸ்திரங்களும் ஆண்டாளின் திருப்பாவைக்குள் அடக்கம், அனைவரும் இதைத் தெரிந்து கொண்டால் போதுமானது**" என்று சொல்லுவார். அதனாலும், மேலும் நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களில் அடியேனுக்கு அளவு கடந்த விருப்பமிருந்தபடியாலும், அதிலும் அடியேன் திருப்பாவையில் மிக அதிகமான ஊற்றமிருந்தபடியாலும், இதைப்படித்தவுடன் அதன் ஏற்றத்தைத் தெரிந்து கொண்டு ஏதேனும் செய்ய வேண்டும் என்ற அவாவில் இருந்தேன். பகவத் க்ருபையால் அடியேனுக்கு ஆண்டாள் அருளிச் செய்துள்ள சங்கத்தமிழ் மாலை என்னும் இத்தலைப்பிலேயே ஆய்வு செய்யும் ப்ராப்தம் கிடைக்கப் பெற்றேன். இஃது ஒரு பொது நிலை ஆய்வாக மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வு எல்லை :** ஆண்டாளின் திருப்பாவையான சங்கத்தமிழ் மாலை 30 பாசுரங்கள் மட்டும் இவ்வாய்வுக்குப் பொருளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. ஆண்டாளின் மேன்மையையும், பக்திச் சிறப்பையும் தெரிந்து கொள்வதோடு இதன் மூலம் வாழ்க்கை நெறியை அறிவதற்கும் இவ்வாய்வு நல்ல வாய்ப்பினைத்தரும் என்ற அடிப்படையில் செய்தது.

**ஆய்வு அடிப்படைகள் :** சங்கத்தமிழ்மாலை 30 பாசுரங்கள் இவ்வாய்வின் முதன்மையாகவும், அடிப்படை ஆதாரமாகவும் விளங்குகின்றன. ஸ்ரீஆண்டாளைப் பற்றி முழுமையாக அறியவும்,பாசுரங்களின் உட்பொருளை அறிய - குருபரம்பரா ப்ரபாவம், மூவாயிரப்படி, ஸ்ரீவைஷ்ணசுதர்சனம் வெளியீடு, திருப்பாவை வ்யாக்யானம், காரப்பங்காடு வேங்கடாசார்யர் ஸ்வாமி வ்யாக்யானம், C.ஜெகந்நாதாசார்யர் ஸ்வாமியின் திருப்பாவைப் புத்தகம், பிறநூல்கள், கட்டுரைகள் ஆகியவையும் இவ்வாய்வுக்கு மிகவும் அருந்துணையாக இருந்தன.

**அணுகு முறைகள் :** ஆண்டாளின் அவதாரம் வரலாற்று நோக்கிலும், பகுப்பாய்வுச் சமுதாய நோக்கிலும் ஆராயப்பட்டுள்ளது. ஆண்டாளின் மனக்குறிப்பைக் கொண்டு பாசுரங்களில் வெளியிட்ட

உளவியல் பாங்கு எடுத்துக்காட்டி ஆராயப்படுகின்றது. மற்றும் மற்றைய கீதாசார்யனின் வார்த்தை, ஆழ்வார்கள், கவிஞர்கள் இவர்களின் ஸ்ரீஸூக்திகளைக் காட்டிலும் ஆண்டாளின் சங்கத்தமிழ் மாலை எங்ஙனம் மேன்மை பெற்றுள்ளது என்றும் பகுத்தாராயப்பட்டுள்ளது. இதனால் எளிமையான இத்திருப்பாவை எங்ஙனம் தன்னிடத்தில் பல ரஹஸ்யங்களை அடக்கியுள்ளது என்றும், அது எப்படி மற்றையவைகளைக் காட்டிலும் ஏற்றமுடையதென்றும் அறிய உதவுமென்பதால், இவ்வாய்வில் அந்நிலை மேற்கொள்ளப்படுகிறது.

இத்திருப்பாவையை , சிறந்த கவி, சிறந்த பாமாலை, செந்தமிழ் என்று இபபடிப் பல கோணங்களில் ஆய்வு மேற்கொள்ளலாம். பலர் மேற்கொண்டும் உள்ளனர். இருப்பினும் ஆண்டாள் இத்திருப்பாவையை இந்த நித்ய- லீலாவிபூதியின் நாயகன்-ஸ்ரீமந்நாராயணன் (ஸ்ரீக்ருஷ்ணனை); என்றும், இதில் உள்ள ஜீவாத்மாக்கள் அவன் ப்ரஜைகள் எல்லோரையும்; இந்த லீலாவிபூதியில் இருக்கும் காலத்தில் க்ருஷ்ணானுபவமும், அவன் கைங்கர்யமுமே காலக்ஷேபமாய்க் கொள்ளவேண்டும் என்றும், அவர்கள் வாழ்க்கை நெறியை அறிந்து கொண்டு உய்வு பெறவேண்டும் என்ற நோக்கிலேதான் அருளிச் செய்திருக்கிறார். இதுதான் அவருடைய அவதாரத்தின் நோக்கமும் கூட என்பதால், ஆண்டாள் திருப்பாவையை **"வேதமனைத்திற்கும் வித்து"** என்றருளப்படும் ஏற்றத்தையும், அதில் அவர் அருளிச் செய்திருக்கும் **"வாழ்வியல்"** பற்றியும், இது ஒரு பொது ஆய்வாக மேற்கொள்ளப்படுகிறது.



## இயல் பாகுபாடு

நுழை வாயிலுடனும், முடிவுரையுடனும் சேர்த்து பத்து இயல்களாக இவ்வாய்வு ஏடுபடுத்தப்பட்டுள்ளது.

**முதல் இயல்** : நுழைவாயிலாக அமைகிறது.

**2 ஆவது இயல்** : சங்கத்தமிழ்மாலை அறிமுகம், தமிழ் மறையான திராவிட வேதத்தின் தோற்றமும் அதன் தன்னேற்றமும், இதில் வைணவ சமயம் பற்றி ஒரு அறிமுகம், எம்பெருமானார் தரிசனக் குறிப்பு, அருளிச் செயல்களின் விவரம், ஆழ்வார்களின் சங்கத்தமிழ் மாலை ஆகியவை இவ்வியலில் தொகுக்கப் பட்டுள்ளன.

**3 ஆவது இயல்** : ஸ்ரீ ஆண்டாள் அவதாரமும்- வராஹ அவதாரமும்; ஆண்டாளின் ஆசார்ய ப்ரபாவமும் அதன் தன்னேற்றமும் இவற்றைப் பூர்வாசார்யர்களின் தனியன்களைக் கொண்டு அதனடைவில் விவரிக்கப் பெறுகின்றன.

**4 ஆவது இயல் :** ஆண்டாளின் (வக்த்ரு) வைலக்ஷண்யமும், ப்ரபந்த வைலக்ஷண்யமும். இதில் மற்றைய ஆழ்வார்களை இருபடியிலும் விஞ்சியிருக்கும் தன்மைகளைப் பூர்வாசார்யர்களின் தனியன்களை கொண்டு ஆய்வு செய்து விளக்கப்படுகின்றன.

**5 ஆவது இயல் :** சங்கத்தமிழ்மாலையில் உள்ளடங்கியுள்ள, வைணவ தத்துவங்கள், ரஹஸ்யங்கள், அர்த்த பஞ்சக ஜ்ஞானம் ஆகியவை பூர்வர்களின் க்ரந்தங்களைத் துணை கொண்டு ஆராய்ந்து விளக்கப்படுகின்றன.

**6 ஆவது இயல் :** சங்கத்தமிழின் விளக்கமும் தமிழ் அறிஞர்கள் ஆராச்சியாளர்கள் சொல்லும் சங்கத்தமிழும் ஆண்டாளின் சங்கத்தமிழ்மாலையும் ஒரு ஒப்பீடு இத்துடன் கோதையின் கீதமும் கோவிந்தனின் கீதமும் வேதமனைத்துக்கும் வித்தான கோதை தமிழும் -வேதமும் ஆகியன ஒப்பீடு செய்யப் பெற்று இவையனைத்தும் கோதையின் தமிழில் சாரமாக உள்ளதால் இது "**வேதமனைத்திற்கும் வித்தாயிற்று**" என்று ஆய்வில் தெளிவு படுத்தப்படுகின்றன.

**7 ஆவது இயல் :** சங்கத்தமிழ் மாலையான திருப்பாவையில் உள்ள மேலெழுந்த அர்த்தங்களும், மேலான ஸ்வாபதேச ரஹஸ்யார்த்தங்களும் கோடிட்டுக் காட்டப் பெறுகின்றன. இதன் மூலம் ஆண்டாள், இப்பூமியையும், இப்பூமியில் வாழும் உயிரினங்களையும் எப்படி நேசித்தார் என்றும், அவர்களை இவ்வாத்ம வஸ்துவிற்குச் சொந்தமான ஈச்வரனிடத்தில் அவற்றை எப்படி சேர்ப்பிக்கத் துடித்தார் என்றும், எப்படி வாழ்க்கை நெறியைக் காட்டினார் என்றும், சொத்தைத் தொலைத்த ஈச்வரனை எப்படி உணர்த்தி அதில் வெற்றி பெற்றார் என்றும், பூர்வர்களுடைய ஸ்ரீஸூக்திகளின் துணை கொண்டு யதா சக்தி விளக்கப்பட்டுள்ளன.

**8 ஆவது இயல் :** ஆண்டாள் திருக்கல்யாணம்; ஆண்டாளின் பிறப்பு குறிப்பு; ஸ்ரீவில்லிபுத்தூரின் பெருமை; ஐதிகங்கள்.

**9ஆவது இயல் :** சங்கத்தமிழ் மாலையும் - வாழ்வியல் புலவர்களான கம்பன், திருவள்ளுவர், ஔவையார் இவர்களுடன் ஒரு சிறு கண்ணோட்டமும், கோதை தமிழின் மூலம் ஒரு சிறு கணக்கோட்டமும்.

**10ஆவது இயல்:** சங்கத்தமிழ்மாலையும்- அதன் தாக்கமும் (Influence); தற்காலத்தில் சங்கத்தமிழ் மாலையின் வளர்ச்சியில் கலைஞர்கள், பொதுமக்கள் இவர்களின் பங்கு. ஆய்வாளரின் கருத்து; ஆய்வின் முடிவு, இதுவும் ஒரு தாக்கமே.

★ ★ ★

## ஸ்ரீராமாநுஜ சதுஸ்லோகீ

**(ஸ்ரீ ஆநந்தாழ்வான் அருளிச் செய்தது)**

அநிசம் பஜதா மநந்யபாஜாம்
சரணாம்போருஹ மாதரேண பும்ஸாம்
விதரந்நிப்ருதம் விபூதி மிஷ்டாம்
ஜய ராமாநுஜ! ரங்க தாம்நி நித்யம். 1

புவி நோ விமதாம்ஸ்த்வதீயஸூக்தி:
குலிசீபூய — குத்ருஷ்டிபீஸ் ஸமேதாந்
சகலீகுருதே விபஸ்சிதீட்யா
ஜய ராமாநுஜ! சேஷசைலச்ருங்கே 2

ச்ருதிஷு ஸ்ம்ருதிஷு ப்ரமாணதத்வம்
க்ருபயாலோக்ய விசுத்தயா ஹி புத்த்யா
அக்ருத ஸ்வத ஏவ பாஷ்ய ரத்நம்
ஜயராமாநுஜ! ஹஸ்தி தாம்நி நித்யம் 3

ஜய மாயி மதாந்தகார பாநோ!
ஜய பாஹ்ய ப்ரமுகாடவீக்ருசாநோ
ஜயஸம்ச்ரித ஸிந்து சீதபாநோ!
ஜயராமாநுஜ! யாதவாத்ரி ச்ருங்கே 4

ராமாநுஜ சதுச்ச்லோகீம் ய: படேந்நியதஸ் ஸதா
ப்ராப்நுயாத் பரமாம் பக்திம் யதிராஜ பதாப்ஜயோ:

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# சமர்ப்பணம்

அரங்கர்மொலி சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள்
தொல்ல்ருளால் வாழ்கின்ற வள்ளல்

**ஸ்ரீ பெரும்புதூர் மாமுனியான பகவத் இராமானுஜரின்**
தேனே மலரும் திருப்பாதங்களுக்கு இச்சங்கத்
தமிழ்மாலை ஆய்வை சமர்ப்பிக்கின்றேன்.



ஸ்வாமி நம்மாழ்வார், காஞ்சீபுரம்

# இயல் - 2

ஸ்ரீமத்யை கோதாயை நம:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# சங்கத் தமிழ் மாலை- அறிமுகம்
# திராவிட வேதத்தின் தோற்றம்

***ஸ்ரீ***ய: பதியான ஸ்ரீமந் நாராயணனே மேலான தெய்வம், அதாவது பரம் பொருள், பரதத்துவம், திருமகள் கேள்வனான அவனிடம் அன்பு கலந்த பக்தி செய்தும், அவனுக்குத் தொண்டு செய்து கிடப்பதுமே உலகில் உள்ள அனைத்து ஜீவாத்மாக்களுக்கும் ஒரே புருஷார்த்தம் (மேலான பலன்), இப்படிப்பட்ட பக்தியுடன் ஸ்ரீமந் நாராயணனுக்குத் தொண்டு செய்து உய்வு பெற்ற ஆழ்வார்களின் வழித் தோன்றலே "***சூடிக் கொடுத்த நாச்சியார்***" என்னும் ஆண்டாள் பெருமாட்டியார். அதாவது, கான மார்க்கத்தில் பக்தி செய்வதே சேதனர்களுக்குச் சுலபமான உபாயம் என்பதைத் தன் உபதேசத்தால், வாழ்க்கை நெறிகளை உள்ளடக்கிய, ஆழ்ந்த பொருள்களையும், சிறந்த தத்துவங்களையும் கொண்ட உயர்ந்த ரத்தினங்களாகக் கவித்துவம் நிறைந்த திருப்பாவை என்னும் திவ்ய க்ரந்தமான தேவகானத்தை 30 பாட்டுக்கள் மூலம் பாடியும், தான் பாடிய பாட்டின் கருத்துக்களை அனுசரித்தும் காட்டி, அதன் மூலம் தான் விரும்பிய புருஷார்த்தத்தை அடைந்தும் காண்பித்தவர், ஸ்ரீபூமி பிராட்டியின் அம்சமாய் அவதரித்த **ஸ்ரீஆண்டாள்.** இதன்மூலம் இப்புவியில் ஸநாதன தர்மத்தையும், ஸாத்ய பக்தியையும் பாமரனும் புரிந்து உய்யும்படி பரப்பினர்.

***" கற்றதனால் ஆய பயனென் கொல்? வாலறிவன்***
***நற்றாள் தொழாஅர் எனின்."*** - குறள் 2

தெய்வப்புலவனின், இக்குறளின் முழு வடிவமே தெய்வ நங்கையான ஸ்ரீஆண்டாள்தான். வாழ்க்கை இயல்பை, நெறியை அதன் போக்குமாறாமல் இனிமை சேர்க்கும் வகையில் புருஷார்த்தத்தை அடையத் தனி முயற்சியில்லாமல் வாழ்க்கை இயல்போடு சேர்த்து அனுபவிக்கும் பொருட்டு ஒரு சிறந்த பாமாலையை ஒரு நெறி நூலாகவும், ஒரு உலகப்பொதுமறை வித்து ஆகவும், இனிமையும், மென்மையும் தன்னிடத்தே கொண்ட தேன் தமிழிலே வாரி வழங்கியிருக்கும் இப்பிரபந்தத்திற்குச் சங்கத் தமிழ் மாலை என்று அவரே பெயர் சூட்டியுள்ளார். இந்தத் தமிழ் மாலையான திருப்பாவை (30) முப்பது பாட்டையும் தப்பாமல் உரைப்பவர்கள் செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புற்று இருப்பர் என்று வாழ்த்துகிறார். திருமகளின் அருள் கூட செல்வத் திருமாலின் க்ருபையினால் மட்டுமே கிட்டும், ***அதுவும் அவனது இன்னருளே*** என்று அருளுகிறார்.

***ஸ்ரீமத்யை விஷ்ணு சித்தார்ய மனோநந்தன ஹேதவே***
***நந்த நந்தன சுந்தர்யை கோதாயை நித்ய மங்களம்.***

# தமிழ் மறையான திராவிட வேதத்தின் தோற்றம் (நாலாயிர திவ்யப்ரபந்தம்)

## வைஷ்ணவம்

ஸ்ரிய: பதியான ஸ்ரீமந்நாராயணனையே (விஷ்ணு) தெய்வமாகக் கொண்டு வழிபடுபவர்கள், விஷ்ணு பக்தர்கள் "***வைணவர்கள்***" ஆவர். அவர்கள் பல தெய்வங்களுடனும் விஷ்ணுவைக் குலதெய்வமாகவும், தங்களை விஷ்ணு குலமாகக் கொண்டவர்களாகவும் இருப்பர். சிலர் விஷ்ணு க்ஷேத்ர வாசிகளாகவும், இதிஹாச புராணாதிகளைக் கேட்டு அதனால் விஷ்ணுவிடம் அன்பு ஏற்பட்டு விஷ்ணு பக்தரானவர்களாகவும் இருப்பர். இப்படிப்பட்ட இவர்கள் அனைவரும் வைஷ்ணவர்கள் என்றே போற்றப்படுகிறார்கள். இந்த வைஷ்ணவ மதமானது அனாதியானது. ஸநாதன தர்மத்தையே ப்ரதானமாகக் கொண்டது.

வைணவமதத்தின் தெய்வமான ஸ்ரீமஹாவிஷ்ணு பல அவதாரங்களை எடுத்து இவ்வுலகை ரக்ஷித்துள்ளார். அதில் பூர்ணாவதாரமான ராம, க்ருஷ்ணாதி அவதாரங்களிலே ஈடுபடாத ப்ரஜைகள் மிகக் குறைவு. அதிலும் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனிடம் அவனுடைய அவதார காலத்திலேயே முனிவர்களும், அரசர்களும், புலவர்களும், பேரன்பு கொண்டு அவன் புகழைப் போற்றிப் பாடி வாழ்ந்து வந்தனர். பிற்காலத்தில் அவர்கள் அநுபவித்த ஸ்ரீக்ருஷ்ண ஜீவாம்ருதத்தைப் பலரும், நம்நாட்டிலும், வெளிநாடுகளிலும் பல அவதாரபுருஷர்களும், ஆன்மிகப் பெரியோர்களும், பக்தர்களும் பலரும் அநுபவிக்கும்படி பெரும் தொண்டாற்றிக் கொண்டிருக்கின்றனர். இப்படி அந்தக் கண்ணனுடைய லீலா ரஸங்களில் மூழ்கி, நம்மையும் அதில் மூழ்கடித்து அந்தப் பேரானந்தத்தின் பெருக்காறாய்ப் பல கவிகளைப் பொழிந்து மக்களுக்கு பக்தி வழி காட்டிய வைணவர்கள் பலர் இவ்வுலகிலே வாழ்ந்து, தம் காலடிகளை நம் நெஞ்சில் பதிய வைத்துச் சென்றுள்ளனர்.

ஸ்ரீ மத்வாசார்யர் போன்ற ஆசார்யர்கள் த்வைத சம்ப்ரதாய வழியிலும், ஸ்ரீவல்லபர், ஸ்ரீ சைதன்யர் போன்ற மகான்கள் த்வைதாத்வைத சம்ப்ரதாய வழியிலும் (பஜன சம்ப்ரதாயம்) விஷ்ணுவை ஆராதித்து வந்தவர்கள் (உ.ம்.) பக்த துக்காராம், கபீர் தாஸ், சூர்தாஸ், துளசி தாஸ் மற்றும் புரந்தர தாஸர், பக்த மீரா, ப்ரபுபாதா மற்றும் பலரும் வைணவரே ஆவர்.

# ஸ்ரீ வைஷ்ணவம்

## (ஸ்ரீராமானுஜ தர்சனம்)

**வை**ஷ்ணவம் என்பது பொதுவாக விஷ்ணு பக்தியுள்ளவர்களின் மதத்தைக் குறிக்கின்றது. ஸ்ரீவைஷ்ணவம் என்பது ஒருவனுக்கு ஒருத்தி என்ற கொள்கையில் ***மறந்தும் புறம் தொழா மாந்தர்*** என்று விஷ்ணுவைத் (ஸ்ரீமந்நாராயணனை) தவிர வேறு தெய்வத்தைத் தொழாத உறுதியான, வைராக்யமான பக்தியைக் குறிக்கோளாய்க் கொண்டது. அப்படி இருப்பவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். இப்படி இருக்கும் நிலை சாஸ்த்திர சம்மதமான உயர்ந்த நிலை. இந்நிலையை ஸ்ரீவிஷ்ணு புராணத்திலே மிக விசேஷமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இவ்வுலகமானது ***வசுதேவ குடும்பம்*** என்று உணர்ந்து பரவாசுதேவனான ஸ்ரீமந்நாராயணனின் லீலாவிபூதி, இது அவனுடைய போக்யத்திற்காக ஏற்பட்டது. இதில் சேதன அசேதனவாசியற ஒவ்வொன்றிலும் ஈச்வர வ்யாப்தியைக் ***"கரந்தெங்கும் பரந்துளன்"*** [2] என்றறிந்து ஒருவருக்கொருவர் அன்புடன் வேற்றுமையில் ஒற்றுமையை உணர்ந்து இறைவனுள்ளம் உகக்கும் வண்ணம் அவரவர் கடமைகளைப் பகவத் கைங்கர்யமாகச் செய்து கொண்டு வாழும் நெறியை உள்ளடக்கியது ஸ்ரீவைஷ்ணவ மதமாகும்.

ரிஷிகள் போல தாமே முயன்று அறியாமல், எம்பெருமான் தன்னைக்காட்ட ஜ்ஞான பக்தி வைராக்யங்களை எளிதில் பெற்று, வேதத்தின் உட்பொருள்களைத் தேனினும் இனியத் தமிழிலே (வேதத்தைப் போல் சிலருக்கு மட்டுமின்றி) அனைவரும் எடுத்து அள்ளிப் பருகும்படி பகவத் குணானுபவமான அமிர்தக்கடலில் மூழ்கித் தாம் அனுபவித்த ரஸங்களையும், ரஹஸ்யங்களையும் பக்தாம்ருதமாக நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களாக அனுக்ரஹித்து அருளியவர்கள் ஆழ்வார்கள். இவ்வாழ்வார்கள் நம்மாழ்வார் துவக்கமாக கலியன் ஈறாக, நம்மாழ்வார் திருவடியான மதுரகவி, பெரியாழ்வாருடைய திருமகளாரான சூடிக் கொடுத்த நாச்சியார் இவர்கள் உள்ளிட்ட பன்னிருவர் ஆவர். பெரிய பெருமாள் துவக்கமாக எம்பெருமானார் நடுவாக மாமுனிகள் ஈறாக 18 பூர்வாசார்யர்கள் ஓராண்வழி க்ரமமாய் எழுந்தருளி, சேதனர்களுக்கு ஜ்ஞாந, பக்தி, விரக்திகளை க்ரமேண உபதேசித்தும், ஸ்ரீவைஷ்ணவத்தை வளர்த்தும் உபகரித்த சிஷ்டாசாரியர்கள் ஆவர்.

*******

# ஸ்ரீவைஷ்ணவத்திற்கு ப்ரமாணங்கள்

ஸ்ரீவைஷ்ணவத்திற்கு ப்ரமாணமாய் உள்ளவை, வேதம் உபநிஷத்துக்கள், பாஞ்சராத்ரம், இதிஹாசபுராணங்கள், பகவத் கீதை, திராவிட வேதமான ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்யப்ரபந்தங்கள் ஆகியவை.

## வேதம், உபநிஷத்துக்கள், பாஞ்சராத்ரம்

நந்தாவிளக்கான ஸ்ரீமந்நாராயணன் அநாதிகாலமாக அஞ்ஞானமென்னும் அந்தகாரத்திலே மூழ்கி ஒருவிதமான விவேகமும் இல்லாமல் ஸம்சாரத்தில் உழன்று கொண்டிருக்கும் சேதனர்கள் உய்யும் பொருட்டும், அஞ்ஞான இருள் நீங்கப் பெற்று தக்க ஞானத்தை அடைந்து வேதத்தின் உச்சி மிக்க சோதியான தன்னை அறிந்து கொள்வதற்காகவும், நன்மை தீமைகளைப் பகுத்துணர்வதற்காகவும் வேதங்களையும், வேதாங்கங்களையும், உபநிஷத்துக்களையும், பாஞ்சராத்ர சாஸ்த்திரத்தையும் தன்னுடைய கருணையினால் அருளிச்செய்தான். இது நாராயணன், நான்முகனுக்கு உபதேசிக்க, அவர் தொடக்கமாய் சிஷ்ய க்ரமத்தில் வழி வழியாக உபதேசக்ரமத்தில் உபதேசிக்கப்பட்டு வளர்ந்து வந்துள்ளது.

## இதிஹாசம், புராணங்கள்

பின்பு வேதங்களையும் சாஸ்திரங்களையும் சரியான முறையில் அனுஷ்டிக்க இயலாதபடி அதை ஓதி வரும் சாதுக்களுக்கும், வேதியர்களுக்கும் துஷ்டர்களால் பல இன்னல்கள் ஏற்பட்ட காலங்களில் பகவான் தானே அவதரித்து சாஸ்திரங்களில் சொன்னவைகளை அனுஷ்டித்துக் காண்பித்தும், தர்ம சாஸ்திரங்களைக் காத்து நிற்கும் சிஷ்டர்களுக்கு இன்னல்களை விளைவிக்கும் துஷ்டர்களை அழித்தும், மெய்ஞான தீபப்ரகாசங்களாகிற வேத சாஸ்திரங்களை மீட்டும், பாதுகாத்தும் ஆகிற பல உபகாரங்களைச் செய்து தர்ம ஸம்ஸ்தாபனம் செய்து பூமியில் சாதுக்கள் காணும் வண்ணம் பல அவதாரங்களைச் செய்தான். பகவான் செய்த பல அவதாரங்களில் தசாவதாரங்களை முக்கியமாக எடுத்துள்ளனர்.

## பகவத் கீதை

கீழேச் சொல்லப் பட்ட அவதாரங்களில் ராம, க்ருஷ்ணாதி அவதாரமே பூர்ணாவதாரம் எனப்படும். ஸ்ரீராமாவதாரத்தில் தர்மத்தை நடத்தியும், நடந்து காண்பித்தும்; கிருஷ்ணாவதாரத்தில் சிக்ஷித்தும், உபதேசித்தும் காண்பிக்கிறார். க்ருஷ்ணாவதாரத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுக்குச் செய்த உபதேசமே பகவத் கீதையென்றும் கீதோபதேசம் இது

குருக்ஷேத்திரத்தில் அர்ஜுனனை சேதனர்களின் ப்ரதிநிதியாய்க் கொண்டு பகவான் அவனுக்கு உபதேசிப்பதன் மூலம் நமக்கு சாஸ்திர நெறியைத் தெரியப்படுத்துகிறார்.

## திராவிட வேதம்

எம்பெருமான் ராம க்ருஷ்ணாதி அவதாரங்களிலே தன்னுடைய மேன்மை பாராதே தன்னுடைய ஸௌசீல்யம் என்னும். சீலகுணத்தால் நம்மோடொக்க புரையற கலந்தும், தன் கல்யாண குணங்கள் அனைத்தும் தோற்ற நின்றும், நடந்தும் காண்பித்தும் அதை புரிந்து கொள்ளாமல் இப்புவியார் அவரை ஸஜாதீயனாய் எண்ணி அவரையும் தன்னோடொக்க நினைத்ததைக் கண்டு வருந்தி இவர்களை நம் ஸௌந்தர்யத்தாலோ, வாத்ஸல்யத்தாலோ, ஐஸ்வர்யத்தாலோ திருத்த முடியவில்லையே என்று வருந்தி, இதற்கு ஓர் உபாயம் செய்ய வேணும் என்று ஸம்சாரிகளைக் கொண்டே ஸம்சாரிகளைத் திருத்த வேண்டும் என்று சங்கல்பித்து இந்நிலவுலகில் சில வ்யக்தி விசேஷங்களிடத்திலே விசேஷ கடாக்ஷம் செய்தருளினான். அவர்களே ***ஆழ்வார்கள்*** எனப்படுகிறார்கள்.

ஒரு பிதாவானவன் தன் பிள்ளையை நல்வழிப் படுத்த எப்படி அயராமல் முயற்சிப்பானோ அதே நிலையில் எம்பெருமானும் சேதனர்களை (ஜீவாத்மா) உய்விக்கும் பொருட்டு முதலில் நான்கு வேதங்கள், சாஸ்திரங்கள் இவற்றைப் பிறப்பித்து. பின்பு தானே அவதரித்து, சேதனர்களுக்கு நல்வழிகாட்டி, அன்புவழி, அறவழி அனைத்தையும் காட்டும் முகேன உபதேசம் செய்ய நிச்சயித்து, தானே கீதாசார்யனாய்ப் பார்த்தனுக்கு உபதேசிக்கும் முகேன கீதாசாஸ்திரத்தை (கண்ணனின் வாய் மொழி) வெளியிட்டு அதன் மூலம் சேதனர்கள் இவ்வுலகில் வாழவேண்டிய அறவழியை வகுத்துரைத்தான்.

காலக்ரமத்தில் வேதம், உபநிஷத்து, தேவபாஷையில் அமைந்துள்ள கீதை இவை அனைத்தும் ***"தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி"***[4] என்றாற்போல் பலர் பலவழியில் தான் புரிந்து கொண்ட அளவிலே அர்த்தம் பண்ணி எடுப்பார் கைப் பிள்ளைப்போல ஆயின. இதற்கிடையில் பகவான் சாஸ்திரங்களும் லீலாவிபூதியும் ஜீவிக்கைக்காக, ராஜஸ தாமஸ ப்ரக்ருதிகள் மயங்கும் படி ***"வணங்கும் துறைகள் பலபல வாக்கி, மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபல வாக்கி வைத்தானேலும்"***[5] பத்தாத்மாக்கள் உண்மையறியாது சம்சாரமாகிற பெருங்கடலுள் அழுந்திப் படும்அநர்த்த பரம்பரைகளைக் கண்டு மிகவும் துக்கித்தான். இதனால் வைணவமதம் என்பது குறைந்து பல மதம் வர காரணமானது விபரீத ஞானத்தின் விளைவால் குத்திருஷ்டிகளின் விஷ்ணு த்வேஷமும் அதிகமானது.

நாரயணனைக் காட்டிய வேதமானது தன்னை சுதந்திரமாகக் கையாண்டு விபரீத அர்த்தங்களை விளைவிக்கும் குத்திருஷ்டிகளைக் கண்டு அஞ்சியது. இத்தனை செய்தும் தன் எண்ணம் பலிக்காததைக் கண்ட எம்பெருமான் தன் திருவுள்ளத்தில் கருணை உண்டாகி

சம்ஸாரிகளைத் திருத்திக் கரை மரம்சேர்க்கைக்காக நித்ய ஸூரிகள் சிலரை பூமியிலே அவதரிக்கச் செய்து அவர்களுக்கு மயர்வற மதிநலம் அருளி (அறியாமை, மறதி, விபரீதஞானம் முதலியவை அறும்படி ஞான பக்தி வைராக்கியங்களைக் கொடுத்து) ஆழ்வார்களாக்கினான். இந்த ஆழ்வார்கள் 12 பேர்கள் ஆவர். அவர்களுக்குத் தலைவர் சடகோபரான ஸ்வாமி நம்மாழ்வார்.

ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்தில் ஸ்ரீரங்கநாதன் துவக்கமாய் பிராட்டி, சேனைமுதலியார், நம்மாழ்வாரிலிருந்து க்ரமேண நாதமுனி, யாமுனமுனி, ராமானுஜமுனி நடுவாக, மணவாளமாமுனி மறுபடியும் ரங்கநாதன் ஈறாக ஆசார்ய பரம்பரை வந்துள்ளது. ஸ்ரீபகவத் ராமானுஜர் காலத்திற்கு முன் வரை அவர் (ஓராண் வழியாய் தங்களிடம் உபதேசம் பெற்று வந்த சிஷ்யர்களை பலபடியாலும் பரீக்ஷித்து தகுதியுள்ளவர்களுக்கு மட்டும் உபதேசம் செய்து வந்தனர்) திருமந்திர ரஹஸ்யார்த்தங்களின் விஷய கௌரவத்தை மட்டும் ப்பார்த்து உபதேசித்து வந்த நிலையைக் கண்டு அர்த்தத்தின் சீர்மையை விட சம்ஸாரிகளின் துர்க்கதியை மாற்றுவதே முக்யம் எனக் கருதி, அவர்களின் அநர்த்தத்தைப் பொறுக்கமாட்டாமல் பரம காருண்யத்தால் ***"ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறும்"*** என்று பேசி அந்த வரம்பினை அறுத்து அனைவருக்கும் திருமந்திரத்தை உபதேசித்தார்.

இதனால் இனிதுகந்த நம்பெருமாள் இது தொடக்கமாக ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்திற்கு ***எம்பெருமானர் தரிசனம்*** என்று பெயரிட்டு நாட்டினார். எம்பெருமானாரும், ரிஷிகள் வழி பாரம்பர்யமான வேதத்திற்கு (***" தெளியாத மறை நிலங்கள் தெளிய ஓதி"***, என்னும் வேதாந்தாசார்யரின் வார்த்தைப் படி) திராவிட வேதத்தின் துணை கொண்டு ஸ்ரீபாஷ்யங்கள் செய்தருளியும், பகவத் விஷயமான திராவிட வேதத்திற்குத் தக்க அதிகாரிகளைக் கொண்டு வ்யாக்யானங்களைச் செய்வித்தும், இப்படி வடமறையையும், தென்மறையையும் இரு கண்களாய்க்கொண்டு இரண்டு நதிகளை உடைய உபய காவேரிபூதனான நம்பெருமாள் பக்கலிலே செழிப்பாக வளர்த்து வந்தார்.

எம்பெருமானார் வளர்த்த ஸ்ரீவைஷ்ணவ தர்சனம் (விசிஷ்டாத்வைத ஸித்தாந்த க்ரமம்) ஆழ்வார்களின் ஈரச் சொற்களான திவ்ய ப்ரபந்தங்களின் ஆழ்ந்த உள்ளர்த்தங்களையே கொண்டதாகும்.

ஸ்வாமி எம்பெருமானார் இந்த திவ்ய ப்ரந்தங்களின் மேன்மையறிந்து இதைக் கொண்டு மற்றைய மதாந்தரஸ்தர்களின் விபரீத அர்த்தங்களையும், குத்ருஷ்டிகளின் குதர்க்க வாதங்களையும் அழித்து விசிஷ்டாத்வைத மத ஸித்தாந்தத்தை ***"உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன் சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரேனே"*** (திருவாய்மொழி 1.1.7.) என்ற ஆழ்வாரின் வார்த்தையுள் அடங்கிய கருத்தாகிய தத்வங்கள் சித்தும், அசித்தும், ஈசுவரனும் என்ற மூன்று என்றும். இம்மூன்றும் ஒன்றை விட்டு ஒன்று பிரியாமல் ஒன்றுக்கொன்று சரீர சரீரி சம்பந்தம் உடையதாய் அதாவது, அசேதனம் ஆத்மாவிற்கு சரீரமாய் இருப்பது போல் சேதனா சேதனங்கள் இரண்டும் பரமாத்மாவிற்கு சரீரமாய் இருக்கையாலே **தத்வம்** ஒன்று என்றும், அதாவது சேதன அசேதனங்களாகிய விசேஷணங்களோடு கூடிய ப்ரஹ்மம் ஒன்றே. அதுவே ***விசிஷ்டமான அத்வைதம்*** **(விசிஷ்டாத்வைதம்)** என்று வேதங்களுக்கு முறையான அர்த்தங்களை ஆழ்வார்களின் ஈரச்சொற்களைக் கொண்டு நிலைநாட்டினார். இப்படி ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தைப் பூரணமாகத் தன்னுள் கொண்ட இந்த நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களை எளியவர்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் இயல், இசை, நாட்யநாடகம், வியாக்யானம் அருளிச்செய்தல் (சொற்பொழிவின் மூலம் பரப்புதல்) ஆகிய பல வழிகளில் வளர்த்து ஏழைப்பாமரனும் புரிந்து கொண்டு ஸ்ரீமந் நாராயணனின் திருவடி வாரத்தில் உகந்து தொண்டு செய்து தொழுது வழியொழுகி பண்டே பரமன் பணித்த பணிவகைகளை தலைமேல் கொண்டு செயல் பெற்று சம்சாரப் பெருங்கடலிலிருந்து கரைமரம் சேரும்படி பேருபகாரம் செய்தருளினர்.

# ஆழ்வார்களும் சங்கத் தமிழும்

**ஆ**ழ்வார்கள் (12) பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார், நம்மாழ்வார், குலசேகரர், பெரியாழ்வார், தொண்டர் அடிப்பொடி, திருப்பாண்பெருமாள், திருமங்கைமன்னன், மதுரகவி, ஆண்டாள், ஆகப் பன்னிருவர்.

இவர்கள் அருளிச் செய்த திவ்யப்ரபந்தங்கள் நம்மாழ்வாரால் ஞானசாக்ஷாத்காரம் பெற்ற ஸ்ரீமந் நாதமுனிகள் அருளிச் செய்த படி முதலாயிரம் என்றும், பெரியதிருமொழியாயிரம் என்றும், இயற்பா ஆயிரம் என்றும், திருவாய்மொழியாயிரம் என்றும் நான்கு ஆயிரங்களாக அமையப்பெற்றுள்ளன.

1. நம்மாழ்வார் பாசுரமான திருவாய்மொழியில் "***கண்ணன் கழலிணை***" என்ற பாசுரம் மதுரகவியாரால் சங்கப்பலகை ஏற்றப்பட்டு சங்கத்தமிழர்களால் கொண்டாடப்பட்டு சங்கத்தமிழ் ஆனது,

2. திருமங்கை மன்னன் தன் பாசுரங்கள் சங்கத்தமிழ்ற்கு இணையானது என்பதை பெரிய (திருமொழி 3-4-10ல்) "***சங்கமுகத் தமிழ்மாலை***" என்றும்; 3-9-10 "***சங்கமலி தமிழ் மாலை***" என்றும் தானே முழுங்கியிருக்கிறார்.

இத்திவ்வியப்பிரபந்தத்தின் தெய்வத் தன்மையை உணராது மறுத்த தமிழ்ச் சங்கத்தாரை, ஓர் அரிய பாடலால் நம்மாழ்வார் வெற்றி கொண்ட செய்தியும் உள்ளது. இச்செய்தி "***அண்டகோளத்தாரென்ற ஆரியத் தமிழாலன்று - தண்டமிழ்ச் சங்கம் வென்ற சடகோபர்***" என்று கூடற் புராணச் செய்யுளால் அறியப்பட்டது.

இருப்பினும் இந்த பன்னிருவரில் ஒரே ஒரு ஆரணங்கு, ஒரு இளங்கிளி, சோலைக்கிளி அரங்கனின் தோட்டத்தைச் சுற்றி வந்து அவனுக்கே மாலையிட்டு தன் மணாளனாக்கிக் கொண்டு சூடிக் கொடுத்த சுடர் கொடி என்று பட்டமும் பெற்று விட்டார். அவரே நம் ஆண்டாளான பெண் அணங்கு, ஆகையால் அவருடைய பாமாலை மாதவனின் வனமாலையாயிற்று, ஆகவே அவர் இயற்றிய திருப்பாவையும் சங்கத் தமிழ் மாலையானது. அப்பேர்பட்ட ஆரணங்கின் திவ்ய சரிதமும், திவ்ய காவியமும் இனி விவரிக்கப்பெறுகிறது. ஆண்டாளின் அவதாரமும், பெருமாளின் அவதாரமும், ஆண்டாளின் பெருமையும், அவருடைய ஸ்ரீஸூக்திகளின் பெருமையும் இனி வரும் ஆய்வில் எடுத்துரைக்கப்படுகிறது.

## பூமிபிராட்டியின் அம்சபூதையான
## ஸ்ரீ ஆண்டாளின் திருஅவதாரம்



# பூமிபிராட்டியின் அம்ச-பூதையான ஸ்ரீஆண்டாளின் திருஅவதாரம்

*"இன்றோ திருவாடிப்பூரம் * எமக்காக
வன்றோ இங்காண்டாளவதரித்தாள் * - குன்றாத
வாழ்வான வைகுந்தவான் போகந்த(ன்)னையிகழ்ந்து*
ஆழ்வார் திருமகளாராய்.* (மணவாள மாமுனிகள்)
உபதேசரத்தினமாலை - 22

ஸ்ரீபூமி பிராட்டியார் பாரததேசத்திலே தமிழகத்தில் பாண்டிய நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் திவ்ய க்ஷேத்திரத்திலே, நந்தவனம் அமைத்து புஷ்ப கைங்கர்யத்தை செய்து கொண்டு திரு வடபத்திரசாயி பெருமாளுக்கு மாலைதொடுத்துச் சாற்றும் தொண்டினை (மாலாகாரராய்) செய்து வரும் விஷ்ணுசித்தர் என்ற வேதியர்குலத்துதித்த பாகவதோத்தமரான பெரியாழ்வாருக்கு பெண் பிள்ளையாய், அவருடைய நந்தவனத்தில் உள்ள துளஸிச் செடியின் அடிவாரத்தில் கலியுகத்தில் 97 வருஷங்கள் கழிந்த அளவில் நளவருஷம், ஆடிமாதம், சுக்ல பக்ஷம் , 6ஆம்நாள் பூரம் நக்ஷத்திரத்தில் செவ்வாய் கிழமை, சதுர்த்தி திதியில் எண்ணமுடியாத பெருமையையுடைய ஸ்ரீகோதை என்னும் திருநாமத்துடன் அயோநிஜையாய் அவதரித்தார்.

தரித்திரனுக்கு பெருநிதி கிடைத்தாற்போல் பெரியாழ்வார் கோதா தேவியை மிகவும் அன்புடனும் ஆதுரத்துடனும் வளர்ப்பதுடன் ஸ்ரீக்ருஷ்ண பக்தியையும் ஊட்டியும் வளர்த்து வந்தார்.

## வேயர் பயந்த விளக்கு

***"எயிற்றிடை..... என்னை பயிற்றிப் பணி செய்யக் கொண்டான்"*** (6) என்றார் போல் குருமுகமாக அத்யயனம் பண்ணாமல் பகவதனுக்ரஹத்தால் மயர்வற மதி நலம் அருளப் பெற்று. பாண்டிய மன்னனின் (ஸ்ரீவல்லபதேவன்) புரோஹிதரான செல்வநம்பியின் ப்ரார்த்தனைக்கிணங்க அந்த ராஜனின் பரம் பொருளின் நிர்ணயம் பற்றியதான (அதாவது எந்த தெய்வம் மேலான பரம்பொருள் என்கிற) சந்தேகத்தை பல வித்வான்கள் எழுந்தருளியிருக்கும் ராஜ சபையில் **"வேண்டிய வேதங்கள் ஓதி விரைந்து கிழியறுத்தான்"**[7], என்னும் படியாக சார்ங்கம் உதைத்தசரமழைப்போல் ஆழ்வார் அனைத்து வித்வான்களையும் வெற்றிகண்டு பரத்வ நிர்ணயம் செய்து ( ஸ்ரீமந் நாராயணனே மேலான பரம் பொருள் என்று நிரூபித்து) மன்னனின் சந்தேகத்தைத் தெளிய வைத்தார். இதனால் சந்தோஷமடைந்த ராஜா

ஆழ்வாரை பட்டத்துயானை மேல் உட்காரவைத்து பட்டணப்ரவேசம் செய்விக்கும் போது எம்பெருமான் ஆழ்வாருக்கு கருடாரூடனாக ஆகாசத்தில் சேவை சாதித்தார். எம்பெருமானின் பேரழகையும், திவ்ய ரூபத்தையும் கண்ட ஆழ்வார் (ஓர் அழகான குழந்தையை உலகத்தார் பார்த்தால், ஐயோ குழந்தைக்கு கண்ணேறு (திருஷ்டி) பட்டுவிடுமே என்று அக்குழந்தையைப் பெற்றதாய் கலக்கமுறுமாப் போலே) வயிறு பிடித்துக் கலங்கி ஐயோ இவ்வழகுக்கு கண்ணேறு பட்டுவிடப்போகிறதே என்று இவ்வெம்பெருமானுக்கு காப்பிடுகிறார். அதுவே திருப்பல்லாண்டாய் அவதரித்த 12 பாசுரங்கள்.

"***பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர்***"[8] இப்படி ஒருதாயார் போல் பரிவுடன் தட்டுமாறி கிடக்கும் நிலையினரான ஆழ்வார்களுள் இவர் பெரியாழ்வாரானார். (இதைக் கொண்டே பெருமாளும் இவருக்கு க்ருஷ்ணாவதாரம் முழுவதையும் ஞான தசையில் காட்ட, அவதரித்ததே ஆழ்வார் அருளிச்செய்த பெரியாழ்வார் திருமொழி).

இப்படிப்பட்ட பெருமைகளையுடைய வேயர்குலத்திலகமான பெரியாழ்வாருக்கன்றோ ஸ்ரீஆண்டாள் மகளாக அவதரித்தார். பெரியாழ்வார் பெருமை மேலும் சிறக்கும் படியும், அவரைக் காட்டிலும் மேன்மையாக "**இவரை பெற்ற வயிருடையாள் என்னநோன்பு நோற்றாள் கொலோ**" என்னும் படியாக விளங்கினார், பக்தியில் ஸ்ரீஆண்டாள்.

## மல்லிநாடாண்ட மடமயில் மெல்லியலாள் ஆயர்குல வேந்தனாகத்தாள்

பெரியாழ்வார் தன் மகளான கோதைக்கு ஸ்ரீக்ருஷ்ணாவதாரப் பெருமைகளைச் சொல்லி க்ருஷ்ண பக்தியை ஊட்டி வளர்த்தார். ஆண்டாளின் பகவத் பக்தி பெரியாழ்வாரிலும் விஞ்சியது. குழந்தைப்பருவம் முதல் ஆண்டாளுக்கு பகவத் பக்தி தானகவே (லஷ்மணனுக்கு ராமபக்தியிருந்தது போலே) இருந்து வந்தது. முளைக்கும் போதே பரிமளத்துடன் முளைக்கும் திருத்துழாய் போல ஸ்ரீஆண்டாள் சிறுவயதிலிருந்தே (பல் முளைக்கும் காலம் முதல்) (க்ருஷ்ணபக்தியால்) வளரும்போதே பக்தி பரிமளம் மிகுந்த ஞான பக்தி வைராக்ய சிந்தையராய் பகவத் பாகவத தர்மங்களில் மிகுந்த ப்ரீதியுடையவராய் விளங்கினார்.

## சூடிக்கொடுத்த நாச்சியார்: "பூமாலை சூடிக்கொடுத்தாளைச் சொல்லு"

ஒரு நாள் பெரியாழ்வார் பகவானுக்காக தொடுத்து வைத்திருந்த பூமாலையை ஆண்டாள்தான் அணிந்து கொண்டு பகவானுக்கு தகுந்த ஒப்பனை அழகு தனக்கு இருக்கிறதா எனக் கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். இதைக்கண்ட பெரியாழ்வார் இப்படி பகவத் அபசாரம் ஏற்பட்டுவிட்டதே என்று மிகவும் மனம் நொந்து அன்று பகவானுக்கு மாலை சமர்ப்பிக்காமலும் ஆஹாரம் உட்கொள்ளாமலும் உறங்கிவிட்டார். பகவான் அவருடைய கனவில் தோன்றி, கோதை சூடிக்கொடுத்த மாலையையே தான் மிகவும் உகப்பதாகவும் அவள் தனக்கு மிகவும் பிரியமான பூமிதேவியின் அம்சமானவள், என்னை ஆளவந்தவள் என்றும் சொல்லி மறைந்தார். அன்று முதல் கோதைக்கு "***ஆண்டாள்***" என்றும், "**சூடிக்கொடுத்த நாச்சியார்** " என்றும் திருநாமம் ஏற்பட்டது.

## இன்னிசையால் பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை

இப்படி நாளுக்கு நாள் ஆண்டாளுக்கு பகவத் பக்தி ப்ரவாகமாக அதிகரித்து வந்தது . ஒரு கொடி கொள் கொம்பில் ஏற்றிவிடும் பருவமாய் "***கோல் தேடியோடும் கொழுந்ததே போல் மால் தேடியோடும் மனம்***" என்று பகவானையே தனக்கு நாயகனாக இச்சித்து "***மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழகில்லேன்***" என்று கண்ணனைத் தவிர வேறு சிந்தனை இல்லாதவராய் உறுதியுடனும் வைராக்கியத்துடனும் இருந்தார்.

ஒருநாள் ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் வடபத்திரசாயிப் பெருமாளைச் சென்று சேவித்தார். பெருமாள் ஏதேனும் தன்னிடம் பேசுவார் என்று எண்ணி அவரையே பாரத்துக்கொண்டு நின்றார். ஆனால் அர்ச்சையில் வாய் திறந்து பேசுவதில்லை என்பது பகவானின் சங்கல்பமாகையால் ஆண்டாள் நினைத்தபடி பெருமாள் வாய் திறந்து பேசவில்லை. இதனால் துக்கம் அதிகமாகி ஒருகால் பெண்களிடம் வாய் திறந்து பேசமாட்டானோ என சிந்தித்து, தன் தகப்பனாரிடம் கேட்ட க்ருஷ்ணாவதாரச் சிறப்பைச் சொல்லும் ஸ்ரீபாகவதத்தை நினைத்துப்பார்த்தார்.

கிருஷ்ணாவதாரத்தில் க்ருஷ்ணன் கோபிகைகளைவிட்டு மறைந்து போனபோது அவர்கள் க்ருஷ்ண சேஷ்டிதங்களைத் தாங்களே கண்ணன் மாதிரி அநுகரித்து (வேடமிட்டுக் கொண்டு. பாவனையை ஏறிட்டுக் கொண்டு) தரித்திருந்தார்கள் என்றும்; மேலும் சிலகாலம் க்ருஷ்ணனுடன் கோபிகைகளை கோபாலர்கள் சேர விடாமல் தடுத்தார்கள். இந்த அபசாரத்தால் நாட்டில் மழை பொய்த்தது (பாகவதோத்தமர்களுக்கு மனம் வருந்தும்படி தவறு இழைக்கப்பட்டால் இயற்கையானது பொய்த்துப் போகும்). பிறகு,

மழைக்காக கோப கன்னிகைகள் நோன்பு நோற்கும் படியும், அதற்கு வேண்டிய உதவியை க்ருஷ்ணன் அவர்களுக்கு செய்து காக்க வேணும் என்று அந்த கோபாலர்களே ஏற்பாடு செய்தனர் என்றும் ஸ்ரீஆண்டாள் கூறப்பட்டுள்ளதே! என்று இந்த இரண்டு வ்ருத்தாந்தங்களும் வெறும் கதைதானா? என்பதை சிந்தனை செய்து பார்த்தார். எம்பெருமான் சத்யம், அவன் சொன்ன வார்த்தையும் சத்யம், என்று அவனிடத்தில் நம்பிக்கையும், மஹா விச்வாசத்தையும் வைக்கவேணும் என்று தகப்பனார் சொன்னதைக் கொண்டு க்ருஷ்ணன் சொன்ன மெய்ம்மைப் பெருவார்த்தையை நினைக்கிறாள். கீதையில் அவன் "***யே யதா மாம்....***" (கீதா சுலோகம் 4.11) சொன்னதையும் பார்த்து, இப்போது காலமும் தேசமும் தானே வேறு, உலாவும் பெருமாள் இல்லை (விபவம்) உறங்கும் பெருமாள் இருக்கிறார் (அர்ச்சையில்) இருப்பினும் இவரும் அனைத்துக் கல்யாணகுணங்களும் தோற்ற இதில் எழுந்தருளியிருப்பதாக பகவானே சொல்லியிருக்கிறார். ஆகையால் நாமும் கோபிகைகளைப் போல் நோன்பு நோற்று அவனை அடையலாம்' என்று நோன்பு நோற்க முற்பட்டாள். ஸ்ரீஆண்டாள் ஆழ்வார்களைப் போல் காதலனான கண்ணனை அடைய மடலூராமல் ஸ்வரூபவிருத்தமான நோன்பிலே கைவைப்பானேன்! என்ன இவன், சக்கரவர்த்தித் திருமகன் போலன்றிக்கே சுணைக் கேடனன்றோ, ஆகையால் இவனிடத்தில் மடலூரும் விஷயம் பலியாது என்று எண்ணி நோன்பிலே முற்பட்டாள்.

ஸ்ரீவில்லிபுத்தூரையே ஆய்ப்பாடியாகவும், வடபெருங்கோயிலையே நந்தகோபர் திருமாளிகையாகவும், அதில் படுத்துறங்குபவனையே க்ருஷ்ணனாகவும், அவ்வூரில் உள்ள தன்னோடொத்த பெண்களையே கோபகன்னிகைகளாகவும் தன்னை அவர்களிலே ஒருத்தியாகவும் பாவித்து கோபிகைகளின் இடைநடை, இடைமுடி, இடைப்பேச்சு, முடைநாற்றம் இவற்றை எல்லாம் தன்னிடையே ஏறிட்டுக்கொண்டு தான் க்ருஷ்ணாவதார காலத்தில் இருப்பதாகவே பாவித்துக் கொண்டு இந்த நோன்பினைத் துவங்குகிறார்.

ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்திலே ஒருவனுக்கு ஜாதி, குலம் இவற்றைப் பற்றி ஏற்றம் சொல்வதென்பதில்லை. ஒருவருக்கு இருக்கும் பக்தியை (விஷ்ணு பக்தி ) கொண்டே பெருமை சொல்லப்படும். பெரியாழ்வாரும், கோதையும் கோப ஜந்மாவை ஏறிட்டுக்கொண்டார்கள். (ஒரு வஸ்து அங்கு இல்லாத போது அதை அங்கு இருப்பதாகப் பார்ப்பதுதான் ஏறிட்டுக் கொள்வதென்பது.)

"***பெரியாழ்வார் சிறந்த ஞானி***" அவர் க்ருஷ்ண பக்தியே அலாதி இவர் கோபிகைத் தன்மையை அடைந்து தேவகி, யசோதை, கோபிகைகள் இம்மூவருடைய க்ருஷ்ணானுபவமெல்லாம் இவர் ஒருவரே பெற்றுள்ளார், என்பது இவருக்கு தனிச்சிறப்பு.

ஸ்ரீ ஆண்டாள் கோப கன்னிகையாகவே தன்னை ஏறிட்டுக்கொண்டுதான் திருப்பாவை என்னும் க்ரந்தத்தை அருளிச்செய்தார். ப்ராமணோத்தமரான பெரியாழ்வாரும், ஆண்டாளும் தாழ்ந்த ஜாதியை ஏறிட்டுக் கொள்வது உசிதமா? என்னில் கோபிகைகள் உத்தம அதிகாரிகள், ரிஷிகளைக் காட்டிலும் மேலான பகவத் பக்தி உள்ளவர்கள். க்ருஷ்ணனை பகவான் என்றறிந்தே அவனிடம் அன்பைச் செய்தவர்கள். எனவே அவர்கள் பக்தியே போற்றத்தகுந்ததாய்க் கருதினார்கள்.

கண்ணன் ஓரிரவு பௌர்ணமியன்று யமுனைக் கரையில் புல்லாங்குழல் ஊத கோபியர்கள் அனைவரும் தம்தம் நிலை மறந்து அவனருகே ஓடி வந்து சேருகிறார்கள். இதைப் பார்த்த கண்ணன் அவர்களை நோக்கி "**இவ்விரவு வேளையில் உங்கள் உற்றார், உறவினர், குடும்பம், கணவன், இவர்களை விட்டு இங்கு வந்தது உங்கள் பதிவ்ரதா தர்மத்திற்கு உகந்ததல்ல**" என்கிறான். உடன் கோபிகைகள் "**க்ருஷ்ணா! நீ சொன்ன பதிவ்ரதா தர்மம் எங்களுக்குத் தெரியும் லோகத்தில் சரீரம், ஆத்மா என்று இரண்டு தத்துவங்கள் உள்ளன. சரீரம் அறிவில்லாதது அப்படி இருந்தும் தன்னை தரித்திருக்கும் ஆத்மாவிற்கு பணிசெய்து போருகிறது. எங்கள் ஜீவன்களெல்லாம் உனக்குச் சரீரம். நீ எங்களுக்கு எல்லாம் ஆத்மாவாக இருப்பவன். நாங்கள் அறிவு பெற்றிருந்தும், எங்கள் ஆத்மாவான உன் முகமலர்ச்சிகாக பணி செய்து போவதில் என்ன தவறு?**" என்று மிகவும் அழகாக பதில் கூறினார்கள். அழியும் சரீர சம்பந்தத்தைக் காட்டிலும் அழியாத ஜீவபர சம்பந்தத்தையே இச்சிக்கிறார்கள் என்ற கோபிகைகளின் பக்தி யோகிகளின் பக்தியைக் காட்டிலும் மேலானது, பகவானால் விரும்பப்பட்டது.

அப்படி பகவான் விரும்பிய கோப கன்னியாகவே தன்னை ஏறிட்டுக் கொண்ட ஆண்டாள் மற்ற கோபகன்னிகைகளை எழுப்பிக் கொண்டு, நந்த கோபன் திருமாளிகைக்குப் போய் அங்குள்ள வாயில் காப்போனிடம், அனுமதி பெற்று நந்தகோபன், யசோதை, நம்பிமூத்தபிரான் (பலராமன்) நப்பின்னைப் பிராட்டி ஆகியோரை முறையாக எழுப்பி பின்பு கண்ணனையும் எழுப்பி, (பரமாத்மாவிற்கும், ஜீவாத்மாவிற்கும்) உள்ள ஒழிக்க ஒழியாத சம்பந்தத்திற்குச் சேர அவனிடம் நித்ய கைங்கர்யத்தை ப்ரார்த்தித்துப் பெற்று, ஆத்மசிரேயஸை அடைந்திருக்கிறார் என்பதே இந்த திருப்பாவையின் ஸாரமாகும்.

## ஆண்டாளின் பெருமையும் ஆண்டாளின் அவதாரப்பெருமையும்

"***ஹ்ரீஸ்சதே லக்ஷமீஸ்ச பத்ந்யௌ***" என்கிற புருஷஸூக்த வாக்யத்தில் "***ஹ்ரீ***" என்று பூமிப் பிராட்டியை மேன்மை தோன்ற முதலில் சொல்லப்பட்டிருக்கிறது. "***பூகர்போ***", என்று விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் பூதேவியைச் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படி ஒரு ஸ்திரீ தன் கர்ப்பத்தை அதிக ஆசையோடும் ஆதரவோடும் அன்போடும் காப்பாற்றுவாளோ, அதேபோல பூதேவி இந்த பூமியில் உள்ள அனைத்து ஜீவாத்மாக்களிடமும் அதிக அன்பும் ஆதரவும் கொண்டவள் என்று பெரியோர் பணிப்பர்.

### ஸ்ரீவராஹ அவதாரம்

பூமிப்பிராட்டியின் சங்கல்பம்

"***க்ஷமயா ப்ரதிவீ ஸம:***" என்பதற்கு ஏற்ப, சேதனர்களிடம் பூதேவி க்ஷமையும், கருணையும் மிக்கவள். பகவான் வராக அவதாரம் எடுத்து பூதேவியை மீட்ட போது அவளுக்கு மனசந்துஷ்டியில்லை. "**என் குழந்தை துன்பப்படும்போது தாயான எனக்கு சந்துஷ்டி எப்படியிருக்கும்? பூமியில் வாழும் என்னுடைய குழந்தைகள் (ஜீவாத்மாக்கள்) உய்யும் வகையாது**"? என்று தன்னைக் காப்பாற்றிய வராகப் பெருமாளிடம் கேட்டிருக்கிறாள். வராகப் பெருமாளும் பல தர்மங்களைச் சொல்லி கடைசியில் திருநாமசங்கீர்த்தனமே சுலபமாக என்னை அடையக்கூடிய உபாயம் (வழி) என்று 3 விஷயங்களைச் சொன்னார். உடனே பூதேவி ஸ்ரீவராகப் பெருமாள் சொன்ன 3 விஷயங்களையும் தன் புடவைத் தலைப்பில் நினைவிற்காக முடிந்து வைத்துக் கொள்கிறார்.அதாவது,

1. தூ மலர் தூவுதல் (புஷ்பம் சமர்ப்பித்தல்) 2. தொழுதல் (வணங்குதல்) 3. வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்தல் (மனம் ஒன்றுபட்டு எம்பெருமானை நினைத்து மனமுருகிப் பாடுதல்) ஆகியன இவற்றை ஸ்ரீதேவி இந்த அவதாரத்தில் ஸ்ரீஆண்டாளாய் வந்து கடைப்பிடித்தும், அநுசரித்தும் காட்டினாள்.

இம்மூன்றையும் ஆண்டாள் தன் அவதார காலத்தில் சேதனர்கள் உய்யும் வழியாக அறிவித்ததோடு தானும் அநுசரித்துக் காட்டினாள். அதை நினைவுப்படுத்தும் வகையில் நாச்சியார் திருமொழியில்,

**பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்கு* பண்டொருநாள்**
**மாகூடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்***
**தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்***
**பேசி யிருப்பனகள் பேர்க்கவும் பேராவே**".

# ஸ்ரீவராஹ அவதாரம்

"பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்கு* பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்*
தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்
பேசி யிருப்பனகள் பேர்க்கவும் பேராவே"



என்னும் பாசுரத்தில் தன் அவதார ரஹஸ்யத்தை கோடிட்டுக் காட்டுகிறார். தற்போது இங்கு எழுந்தருளியிருக்கும் திருவரங்கன், அன்று ஒருநாள் வராக அவதாரம் எடுத்தபோது பூதேவியினிடத்தில் (ஆண்டாள்) உபதேசம் செய்தவைகள், இன்னும் தன்நெஞ்சில் பசுமரத்தாணி போல் இருக்கிறது, (அதை நினைவுப்படுத்தியே இந்த க்ரந்தங்களை அருளிச்செய்திருப்பதாகத் தெரிகிறது) என்று தெரிவிக்கிறார்.

இந்த திருப்பாவை என்னும் க்ரந்தத்தை அருளிச் செய்யும் போது நமக்கு கானமார்க்க உபதேசத்தையும், அதில் பல வேத சாரங்களையும், தர்மங்களையும் உதாஹரித்து நல்வழிகாட்டி சம்ப்ரதாய பரிசுத்தியுடன், விதிரூபமாய் இல்லாமல் அநுட்டான ரூபமாய் தானே ஆசரித்துக் காட்டி, மானுடனாய் பிறந்த ஒவ்வொரு ஜீவனும் இவர் காட்டிய இவ்வழியில் பக்தி செய்தால் அதன் பலனாக நித்ய கைங்கர்யத்தை (அவரவர் விரும்பும் பலனையும்) நிச்சயமாய் அடையலாம் என்பதை உணர்த்துகிறார்.

## ஆசார்ய பெருமையும், அதன் ஏற்றமும், அதன் பலனும்

### ஆண்டாளும் - பெரியாழ்வாரும், வராஹநாயனாரும்

ஸ்ரீபராசுர பட்டர் கைசிக மஹாத்ம்யத்திலும் ஸ்ரீவேதாந்தாச்சார்யர் ரஹஸ்ய ஸிகாமனியிலும், ஸ்ரீ வராஹ பெருமானின் பெருமையையும், சிறப்பையும் அருளிச் செய்திருக்கிறார்கள். வராஹ பெருமாள் ஹிரண்யாக்ஷனை சம்ஹாரம் செய்து பூதேவியை உத்தரணம் செய்து மேலே கொண்டு வர, அவ்வமயம் சகலலோக பிதாவான ஸ்ரீபூமிப் பிராட்டியார் "***என்னை இந்த ப்ரளய சேற்றிலிருந்து காப்பாற்றி என் துன்பத்தை போக்கினீர், ஆனால் எனக்கே இந்த துன்பத்திலிருந்து வெளிவர இத்துணை காலமாயிற்று. அப்படியிருக்கும் போது என் குழந்தைளான பூமியிலிருக்கும் ஜீவாத்மாக்கள் தன் சம்ஸார சாகரத்திலிருந்தும், அஞ்ஞானத்திலிருந்தும் மீண்டு வந்து இன்பத்தை அடைவது எப்படி என்று என் மனம் கலங்கி நிற்கின்றது. ஸ்வாமி தாங்கள் இதற்கு சிறந்த, சுலபமான உபாயம் அருளவேணும்***" என்று

"***அஹம் சிஷ்யாச தாஸீச பக்தாச த்வயி மாதவ***
***மத்க்ருதே ஸர்வ பூதாநாம் லகூபாயம் வத ப்ரபோ***"

அடியேன் சிஷ்யையுமாய், தாஸியுமாய், பக்தையுமாயிருக்கிறபடியாலே, ஸகல ப்ராணிகளும் ஈடேற லகுவாயிருக்கிற உபாயம் அருளிச் செய்ய வேணும் என்று ப்ரார்த்திக்க வராக நாயனாரும், தேவி! இப்படி நீ கேட்டது பற்றி மிக்க சந்தோஷம், பெற்ற தாயானவள் தன் குழந்தை மிகவும் சந்தோஷமாக இருக்கவேணும் என்பதையே ப்ரார்த்தனையாகக் கொண்டிருப்பாள். ஒருவிதத்தில் நீயும் நானும் தாய் தான் நான் பூமியை உண்டு உமிழ்ந்து ஈன்றிருக்கிறேன். நீ பூமிக்கு அபிமானியாய், தாயாய்

இருக்கிறாய். மேலும் என் உள்மனதில் இருக்கும் ஆசையின் ரஹஸ்யம் அறிந்து கேட்டிருக்கிறாய். என்னுடைய ஆசை என் குழந்தைகளை எனக்கே சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்பது. உன்னுடைய ஆசையும் அதுவே. இது மிக உயர்ந்த எண்ணம். இதை விட எனக்கு என்ன வேண்டும். எனக்கே மிகவும் உத்தேச்யமாய் இருக்கின்ற விஷயத்தை நீ கேட்டபடியால் அதற்கான சிறந்த சுலபமான மார்க்கத்தை உனக்கு உபதேசிக்கிறேன். கலியுகத்தில் நாமஸங்கீர்த்தனம் மூலம் என்னிடத்தில் பக்தி பண்ணி உஜ்ஜீவிக்கலாம். யுகங்களிலேயே கலியுகத்தில் மட்டுமே சுலபமான மார்க்த்தில் என்னை அடைய இயலும், மேலும் மற்றைய யுகங்களில் நானே வந்து உபதேசம் செய்தும், நடந்தும் காண்பிப்பேன். ஆனால் கலியுகத்தில் நான் வாய்திறக்காத சங்கல்பத்துடன் அர்ச்சையில் பூர்ண கல்யாணகுணங்களுடன் எழுந்தருளி அருள்பாலிப்பேன். அந்தக் காலத்தில் என்னுடைய பக்தர்கள் மட்டுமே என் புகழையும் பெருமையையும் பரப்புவார்கள்.

ஆகையால் அக்காலத்தில் புஷ்பங்களால் என்னை அர்ச்சித்தும் (அர்ச்சனம்) கைகளினால் தொழுதும் (தொழுகை), வாயினால் பாடியும் (திருநாமஸங்கீர்த்தனம் செய்தும்) வழிபடும் போது நிஷ்களங்க புத்தியுடன் என்னை பக்தி செய்தால் நான் அவர்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் இன்பத்தைக் கொடுத்து வாழ்விப்பேன் என்றார்.

இந்த குரு-சிஷ்ய ஸம்வாதத்தில் நடந்தவைகளை ஆண்டாள் மனதில் கொண்டு கலியில் திருவவதாரம் செய்து பகவான் உபதேசித்ததை நடத்திக் காட்டுகிறாள். மேலும் பகவானே இவருக்கு குருவான படியால் பகவானுக்கும், ஆழ்வாருக்கும் கிடைக்காத வெற்றி இவருக்குக் கிட்டியது. (ஸ்ரீவராஹ புராணம்)

பூமிப்பிராட்டியார் தன் அவதாரகாலத்திலும், எல்லா ஆழ்வார்களைக் காட்டிலும் ஏற்றம் பெற்று கண்ணனிடத்தில் பொங்கும் பரிவு கொண்ட பெரியாழ்வாரைத் தனக்கு தகப்பனாராகவும், ஆசார்யனாகவும் தேர்ந்தெடுக்கிறார், காரணம் இவரும் குருமுகமாக அத்யயனம் செய்யாதவர் "***எயிற்றிடை மண் கொண்ட எந்தை இராப்பகல் ஓதுவித்து என்னைப் பயிற்றிப் பணி செய்யக் கொண்டான்.***" என்று ஆழ்வாரே சொல்லியிருப்பதிலிருந்து அவருக்கும் வராஹ நாயனார் தான் குரு என்பது தெரிகிறது.

ஆகையால் பிராட்டி, "என்ன தான் நாம் தீர்மானமாக உபதேசிக்க இப்பூமிக்கு வந்தாலும் மாயனான இந்தப் பெருமாள் நம்மை மறந்தாலும் மறந்து விடுவான். ஆகையால் இவன் யாருக்குக் கட்டுப்பட்டிருப்பானோ அவர்களுடைய திருவடி வாரத்தில் ஒதுங்கி இவனுடைய மாயையான கலி நம்மைத் தீண்டாவண்ணம் செய்து கொண்டு, பிறகு உலகத்தாருக்கும் இதை நிரூபிக்க வேணும்' என்று பெரியாழ்வாரை இந்த அவதாரத்தில் ஆசார்யனாய்க் கொண்டு பாகவத தர்மத்தையும் பகவத் தர்மத்தையும்

அமர்ந்து ஓங்கி உலகு அளந்த*

* அன்று இவ்வுலகம் அளந்தாய் ! அடி போற்றி



* ஓங்கி உலகு அளந்த உத்தமன் பேர் பாடி"

லோகத்தாருக்கு உபதேசித்தபடியால் அவருடைய எண்ணம் பலித்தது. தன்னுடைய பாசுரங்களின் பல சுருதியில் ஒவ்வொன்றிலும் ஆண்டாள் அவருடைய ஆசார்யரான (திருத்தகப்பனார்) பெரியாழ்வாரை முன்னிட்டே தன்னைச்சொல்லிக் கொண்டு ஆசார்ய ப்ரதிபத்தியைத் தெரிவிப்பதில் தனி முத்திரை பதித்துள்ளார் (தாஸ்ய நாமமுத்திரை) (உ.ம்) "பட்டர்பிரான் கோதை சொன்ன".

வராஹநாயனாரிடம் உபதேசிக்கப் பெற்ற பூமிப் பிராட்டி இப்புவியில் அவதரிக்கும் காலத்திலே பகவானை அதிககாலம் பிரிந்து இருக்க இயலாது என்னும் முகத்தாலே பிறக்கும் போதே ஞான பக்தியுடையவராய், வாய் திறந்து பேசும் காலத்திலேயே சொல்ல வேண்டியவைகளைச் சொல்லி அதிமானுஷ சேஷ்டிதங்கள் புரிந்த கண்ணனுக்கு, இணையாய் தானும் காரியம் செய்து, அர்ச்சையிலே எம்பெருமானை, தான் விரும்பிய பலனைத் தலைக்கட்டிக் கொடுக்கும் படி செய்து தன்னுடைய அவதார ப்ரயோஜனத்தை வெற்றியுடன் முடித்தார். இதன் மூலம் எந்த சங்கல்பமும், காரியமும் வெற்றி பெறவேணுமென்றால் ஆசார்ய ப்ரதிபத்தி முக்யம் என்பதை நிரூபித்துக் காட்டினார் ஸ்ரீ ஆண்டாள்.

## பகவானின் அவதாரமும் - பிராட்டியின் அவதாரமும்

பொதுவாக ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்திலே 3 என்பது விசேஷமானது. தத்வத்ரயம் - சித், அசித், ஈசுவரன்; ரஹஸ்ய த்ரயம்- திருமந்த்ரம், த்வயம், சரமசுலோகம்; அக்ஷரத்ரயம்- கோவிந்தா; குணத்ரயம்- ஸத்வம், ரஜஸ், தாமஸம்; ஸ்லோகத்ரயம்- வராக, ராம, க்ருஷ்ண சரம சுலோகங்கள்; ப்ரஸ்தான த்ரயம் - உபநிஷத், ப்ரம்ம சூத்திரம், பகவத் கீதை இன்னும் பல மூன்றுகள், ஆனால் ஆண்டாள் இங்கே எடுத்துக் கொண்டது 3 சரம சுலோக சாரங்கள், அதை அருளிச் செய்த பகவதவதாரங்கள், இதில் மட்டுமே ஆழங்கால் படுகிறார் என்று அவருடைய பாசுரங்களிலிருந்து விளங்குகிறது.

ஸ்ரீ ஆண்டாள் தன் தகப்பனாரிடம் கேட்ட இதிகாசபுராண சாஸ்த்ரங்களின் சாரம் திருப்பாவையில் பிரதிப்பலிக்கின்றது. இவர் முக்கியமாக திருப்பாவையில் பகவத் அவதாரங்களில் மூன்று அவதாரங்களையே பிரதானமாகக் கொள்கிறார். அவை திருவிக்ரமன், இராமன், க்ருஷ்ணன் (ஸ்ரீவராகனை நாச்சியார் திருமொழியில் மட்டுமே எடுக்கிறார்). இம்மூன்று அவதாரங்களையும் எம்பெருமானின் சீலகுணத்தைக் கொண்டே எடுத்துள்ளார்.

"***ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே***
***அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமி ஏதத் வரதம் மம***"

-(ஸ்ரீராமசரமஸ்லோகம்)

ஸ்ரீராமன் - என் திருவடியை (என்னை வந்து சரணடைந்தவர்களை) ஆஸ்ரயித்தவர்களை நான் கைவிடேன் என்று அருளுகிறார்.

"***ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ***
***அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:***"

-(ஸ்ரீக்ருஷ்ணசரமஸ்லோகம்)

ஸ்ரீக்ருஷ்ணன் - எல்லா தர்மங்களையும் விட்டு என்னைச் சரணமடை நான் உன்னைக் காப்பாற்றுகிறேன் என்று.

**திருவிக்ரமன்** - ஆண்டாள் இவரை எல்லா அவதாரங்களிலும் தலையானவராகக் கொண்டாடி - இந்த அவதாரத்திலே எம்பெருமானுக்கு ஒரு பட்டமும் வழங்குகிறார். (பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர் உ.ர. மாலை) அது போல எம்பெருமானுக்கு சேதனர்களிடம் ஏற்பட்ட பொங்கு பரிவாலே ஆண்டாள் திருவாக்கால் பெற்றார் "**உத்தமன்**" என்ற பட்டம் "***ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி***" என்று மற்றைய அவதாரங்களைக் காட்டிலும் 3 அவதாரங்களிலே தான் எம்பெருமான் தன்னுடைய ஸர்வ ரக்ஷகத்வத்தை வெளியிட்டு இருக்கிறான். மத்ஸயம்-(வேதம்), கூர்மம்-(தேவர்), வராகம்-(பூமி), நரஸிம்மன் - (ப்ரஹலாதன்), பலராமன்-சகோதரன் பரசுராமன்-தாய்.

இம்மூன்று அவதாரங்களிலும் ஸ்ரீராம, க்ருஷ்ண அவதாரங்களில் சேதனர்கள் தன்னை ரக்ஷிக்கும் படி ப்ரார்த்தித்தால் செய்வதாய் சொல்கிறார் பகவான். திருவிக்கிரமவதாரத்தில் இந்த பூமி என் சொத்து, இதில் உள்ள என் குழந்தைகள் அவர்கள் எப்படி இருப்பினும், அவர்கள் தலையில் என் திருவடியை வைத்து அவர்களை என் உடைமை ஆக்குவேன் என்று ஒரு தாயின் பரிவுடன் பூமியில் உள்ள அனைத்து ஜீவராசிகளையும் சேதனாசேதன வாசியற அணைத்து, அளந்த உத்தமன் அன்றோ அவன் - அவனுடைய அந்த பராக்ரமத்திற்கும், அந்த திருவடிக்கும் "**போற்றி**" என்கிறார் ஆண்டாள். "***குன்றாத வாழ்வான வைகுந்த வான் போகந்தன்னை இகழ்ந்து***". தன் குழந்தைகளுக்காகவே இங்குவந்தவரல்லவா இப்பிராட்டியார்! ஆகையால் தன்னைப் போலவே இப்பூமியில் உள்ள சேதனர்களிடம் அதிகம் பரிவு கொண்ட அவதாரங்களை மட்டுமே கொண்டாடுகிறார்.

இத்திருப்பாவையில் பகவான் இத்தனை அவதாரங்கள் எடுத்தும். 3 சரமசுலோகங்களை அநுக்ரஹித்தும் தெளியாத சேதனர்களுக்காக மனம் இரங்கி அவர்கள் உய்யும் பொருட்டு அவர்களுக்கு புரியும் வகையில் தமிழில் ஒன்றுக்கு பத்தாய் 30 பாசுரங்களை அச்சரம சுலோகங்களின் சாரமாய் வெளியிட்டு ஒரே நேரத்தில் பகவான்- சேதனர்கள் இருவரையும் உணர்த்தி, அவர்களின் பேருறவைத் தெளியப்படுத்தி அநுஷ்டான ரூபமாய் திருத்திப் பணிக்கொண்ட படியால் ஆண்டாளின் அவதாரம் பகவதவதாரத்தைக் காட்டிலும் சீர்பெற்றது என்று சொல்லவும் வேண்டுமோ!

# பூமிப்பிராட்டியின் அம்சமான ஸ்ரீஆண்டாளின் வைலக்ஷண்யமும் அவருடைய ப்ரபந்த வைலக்ஷண்யமும்

## வக்த்ரு வைலக்ஷண்யம்

திருப்பாவையை இயற்றிய ஸ்ரீஆண்டாளை, பிறருடன் ஒப்புச் சொல்லப்படும் விஷயத்திலோவென்னில் இவருக்கு முன்பும் சரி, பின்பும் சரி யாரையும் இவருடன் ஒப்பு சொல்லமுடியாது என்பது திண்ணம். இவருடைய பிரபந்தத்தை இவரே சொல்ல, அந்தத்திருவரங்கனே கேட்கைக்கு அதிகாரி எனக்குறிப்பிட்டால் இவருடைய பெருமையும் இவரது பிரபந்தத்தின் பெருமையும் நன்றாய் மனத்தின்பால் படும்.

பகவான் தன் அடியார்களுக்காக க்ருஷ்ணனாய் அவதரித்து வேண்டிய வேடங்கள் புனைந்து, எல்லோருக்கும் எக்காலத்திற்கும் பயன்படும்படியான கீதையை அருளினானே! அதனால் இன்றும் கீதாசார்யன் என்றழைக்கப்படுகிறானே? அப்படிப்பட்ட மகத்துவம் இந்தச் சுடர்க் கொடிக்கு உண்டோ? என்னில், அதற்கு மேற்பட்ட பெருமையே ஆண்டாளின் பெருமை என்பது நம் பூர்வர்களின் திருவுள்ளம் என்பதை அவர்களின் வியாக்கியானங்கள் மூலம் நன்கு அறியலாம்.

## கண்ணனும் - ஆண்டாளும்

பகவத் கீதையில் வர்ணாச்ரமப் படியாக கர்ம, ஞான, பக்தி யோகங்களை மிக விரிவாக எடுத்துரைத்தான். ஆனால் என்ன. பயன்? அவன் யாருக்கு உபதேசித்தானோ அந்த அர்ஜுனனுக்கே பெருமளவில் புரிந்து கொள்ள முடியாத நிலை. பின்புள்ள ஆசாரியர்கள் அக்கீதைக்கு விளக்கமெழுதியும் ஒரு சிலருக்கே பயன் படும்படியான நூலாகி விட்டது. ஆனால் கோதையின் கீதையான திருப்பாவையோ எனில் சிறுவர் சிறுமியர்க்கும் கடைப்பிடிக்கலாம் படிக்கும் இன்றும் பட்டி தொட்டிகளிலும் இவரது பிரபந்தம் பாடப்பட்டு வருவது அவரது நூலின் சிறப்பை மிகவும் எடுத்துக் காட்டும்படிக்கும் அமைந்திருக்கிறது.

## சீதையும் - கோதையும்

அடுத்தபடியாக சீதாப்பிராட்டியை ஒப்புமை சொல்லலாமோவெனில் பிராட்டி க்ஷத்திரிய குலத்துதித்து தத்துவஞானியைத் தந்தையாய் வரித்தார். ஆண்டாளோ பிராம்மண குலக்கொழுந்தாம் பட்டர்பிரானைத் தன் தந்தையாக வரித்தார் (தொண்டர் குழாம்). ஆண்டாளும், பிராட்டியும் அயோநிஜை தான், என்றாலும் பிராட்டி அவதரித்தது ஆழ்வார்களின் ஈரச் சொல் நடையாடாத ஓர் தோட்டத்தில் பூமிக்கு அடியில், ஆனால் ஆண்டாள் அவதரித்தது ஆழ்வாரின் ஈரச்சொற்களே நிறைந்திருக்கும் தென்தேசமாம் மல்லிநாடு, பகவத் கைங்கர்யம் செய்து கொண்டிருக்கும் நந்தவனத்தில் உள்ள திருத்துழாய்ச் செடியின் அடிவாரத்தில் பூமிப் பரப்பிற்கு மேல் பிராட்டி திருமணம் புரிந்தது சக்ரவர்த்தித் திருமகனை கன்யா சுல்கத்தின் மூலம், ஆண்டாள் மணம் புரிந்ததோ சக்ரவர்த்தித் திருமகன் ஆராதனம் பண்ணிய (பெரிய பெருமாள்) நம்பெருமாளாம் திருவரங்கனை எந்தக் கன்யா சுல்கமுமில்லாமல் பிராட்டி அருளிச் செய்ததோ "***பாபானாம்வா சுபாநாம்வா***" என்கிற சுலோகம் ஒன்று தான். அதுவும் அந்தக் காலத்திலேயே அருகிலிருக்கும் ராக்ஷசிகளைக் குறித்ததாகும். நம் போல்வாருக்கும் பின்புள்ளாருக்கும் இதமான வார்த்தையாகிய திருப்பாவை நூலை அருளிச் செய்த சுடர்க் கொடியின் பெருமை வேறொருவரோடும் ஒப்புச் சொல்ல முடியாத அளவிற்கு உயர்ந்ததாகும்.

## ஆழ்வாரும் - ஆண்டாளும்

இனி சமகாலத்தவர்களான ஆழ்வார்களிலும் இவர் விலக்ஷணை என்று நிரூபிக்கப்படும் நம்மாழ்வார் திருவாய்மொழியோடு நான்கு வேத சாரங்களையும் அருளிச்செய்து பரமபதமடைய வேண்டியிருந்தது. தானான தன்மையிலிருந்து பராங்குச நாயகியாக அநுகரிக்க வேண்டியிருந்தது. மடலூருவதாய் பயமுறுத்த வேண்டியிருந்தது.

இவரோ என்னில் இயல்பாகவே பெண்ணானபடியால் பெண்மையை ஏறிட்டுக்கொள் வேண்டிய அவசியமில்லை. ஆரம்பம் தொடங்கி பாகவத சமூகத்தைச் சேர்த்து நப்பின்னைப் பிராட்டியை எழுப்ப, அவள் இவளின் ஆற்றாமையைக்கண்டு கோதையோடு சேர்ந்து எம்பெருமானைப்பற்றி தங்களுக்கு வேண்டிய பறையை விண்ணப்பிக்க அவனும் பறை கொடுக்க, இவர்களும் நாங்கள் வேண்டியது ஐசுவர்யப்பறையல்ல "**உற்றோமேயாவோம், உனக்கே நாம் எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் ஆட்செய்வோம்**" என்று பறையின் பயனைச் சொல்லித்திருத்திப் பணிவிடைகளைக் கேட்டு வாங்கும் சாமர்த்திய முடையவள். இத்தகைய ஆண்டாளுக்கு ஒப்புமை சொல்ல இவர்காலத்திற்கும் முன்போ, இவர்காலத்திலோ, இவருக்குப் பிற்பட்டகாலத்திலுமோ ஒருவரும் இலர் என்பதே ஆய்வாளரின் தேரினமுடிவு.

இதுவரை வக்த்ரு (கோதை) வைலக்ஷண்யம் சொல்லப்பட்டது. இனி இவருடைய ப்ரபந்த வைலக்ஷண்யம் சொல்லப்படும்.

## ப்ரபந்த வைலக்ஷண்யம்:

### *ஆழ்வார்கள் தம்செயலை விஞ்சிய பிஞ்சாய் பழுத்த சங்கத்தமிழணங்கு*

சரீரமே ஆத்மா என்றிருக்கும் ஸம்ஸாரிகளுக்கும் ஆத்மஞானம் பெற்ற ரிஷிகளுக்கும் ஒரு அணுவிற்கும் மலைக்குமுள்ள வித்யாசமுண்டு, அந்த ரிஷிகளுக்கும் பகவானாலேயே மயற்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுக்கும் அத்தனை வாசியுண்டு. ஆழ்வார்களுள் பெரியாழ்வார் மிக்க பெருமை படைத்தவர் "**பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர் பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர்** (உ.ர. மாலை 18) என்கிறபடி பகவத் ப்ரேமத்தினால் கலங்கி ஸர்வ சக்தனான பகவானுக்கு என்ன தீங்கு நேருமோ என அஞ்சி வயிறுபிடித்து அவனுக்குப் பல்லாண்டு பாடிய ஏற்றம் பெற்றவர். இப்படிபட்ட வேதியரான அவ்வாழ்வார் "**மம சுதா**" என்று அபிமானித்து வளர்த்து வந்த ஸ்ரீஆண்டாள் (அவருடைய திருமகளார்) இவருடைய (ஆழ்வாருடைய) பக்தியைக் காட்டிலும் விஞ்சியதாய் பக்தியை உடையவளாய் இருந்தார். எங்ஙனேயெனில்,

இவர் மங்களாசாஸனத்தில் பெரியாழ்வாரோடு ஒத்து, ஜ்ஞான பக்திகளில் வந்ததால், பதின்மருடைய ஞாந பக்திகளிலும் விஞ்சிய ஞான பக்திகளையுடைளாயிருக்கை - இவளுக்குத் தகப்பனாரான பதின்மருடைய பக்தியும் சீதனமாய்க் கிடைக்கையாலும் ( பதின்மர் ஸ்த்ரீ தனம் - முதலாழ்வார்கள் மூவர், திருமழிசைபிரான் (4) நம்மாழ்வார் (5) அஞ்சுகுடிக்கு ஒரு சந்ததியாயிற்று முதலில், அடுத்து பெரியாழ்வாரோடு ஒத்த சமகாலத்தவர்களான (ஒரளவிற்கு) குலசேகரர், திருப்பாண், தொண்டரடிப்பொடி, கலியன் ஆக பதின்மர்) பெரியாழ்வார் தகப்பனாரானபடியால் மற்றைய ஆழ்வார்களையும் தகப்பனாராகக் கொண்டு அஞ்சுகின்ற அக்குடிக்கு ஒரே சந்ததியான பெண்பிள்ளையான ஆண்டாள், அவர்களைப் போலே இவள் பக்த்யவஸ்தா கார்யமான பெண்மையை ஏறிட்டுக் கொள்ள வேண்டாதே, தானே பெண்ணானமையால் பகவத் விஷயத்திலே முதிர்ந்த ப்ரீத்யதிசயத்தை உடையவளாயும், அவர்களிலும் இவள் மிக்க பக்தியாதி சுபாவங்களை உடையவளாயும் இருப்பள் எவ்வாறெனில், ஆழ்வார்கள், எம்பெருமானைச் சரணம் புகுந்த பின்னும் உடனே பெறாமையாலே தங்கள் அத்யவஸாயம் குலைந்து வேறு உபாயத்தைக் கைக்கொள்ளாமையாகிற தங்களதிகாரத்தையும் நினையாது, உபாயாந்தரங்களைக் கைக்கொள்வது காண்கிறோம்.

திருமங்கையாழ்வார் தம் ஆற்றமையின் கனத்தாலே,

*"ஓதி நாமம் குளித்து உச்சி தன்னால் ஒளி மாமலர்ப் பாத நாளும் பணிவோம் நமக்கே நல மாதலில்"* -என்று பக்தியிலும்

*"பெருந் தெருவே ஊராரிகழிலும் ஊரா தொழியேன் நான் வாரார் பூம் பெண்ணை மடல்"*-என்று மடலூர்வதிலும் முற்பட்டார்.

நம்மாழ்வாரும் கலங்கி த்வராதிசயத்தாலே ப்ரபந்நரான தன் அதிகாரத்திற்கு மாறாக:

*"ஆம் கோணைகள் செய்து குதிரியாய் மடலூர் தூமே"* என்றும்,

*"யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப்பிரானுடைத் தூ மடல் தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோம்"*

*-என்று மடலூர்வதில் முற்பட்டார்*

இதனால் அவர்களின் அநந்யோபாயத்வம் என்பது குலைந்ததாகும்.

ஆனால் ஆண்டாளோவெனில், தன் ஞான பக்திகளின் முதிர்ந்த நிலைமையால் உண்டான கலக்கத்தின் மிகுதியால் அநந்யோபாயத்வத்தை அழித்துக் கொண்டதுடன் நில்லாது, அநந்ய தைவத்வமென்கிற முக்கிய அதிகாரத்தையும் அழித்துக் கொண்டாள். அதாவது, பகவத் ப்ரபந்நையான தனக்கு அவனருளே உபாயம் மென்றும், அவனே தெய்வம் என்றும் நினைக்க வேண்டியிருக்க, அவ்வாறு செய்யாது நோன்பு நோற்க முற்படுவது, காமனை ஆச்ரயிப்பதாகிற உபயாந்தரத்தைக் கைக்கொண்டது மன்றியில்

"**பேசுவதொன்றுண்டிங்கெம்பெருமான்**"; "மன்மதனே உன்னை வணங்குகின்றேன்"; "**உன்னையும் உம்பியையும் தொழுதேன்**"; "***நீ எனக்கு எம்பெருமானில்லையோ***" என்று காமதேவனைத் தெய்வமாகப் பேசியதால் அநந்ய தைவத்வத்தையும் அழித்துக் கொண்டாள். இவ்வாறு ஏற்பட்டது இவளுடைய ப்ரீதியின் மிகுதியாலே. ஆதலால் இவள் ஆழ்வார்களையும் விஞ்சிய பக்தியை உடையவள் என்பதில் சந்தேகம் இல்லை.

மங்களாசாசனத்திலும் ஆண்டாள் ஆழ்வார்களை விஞ்சியிருத்தல்

**முதலில் திரிவிக்கிரமன் அவதாரத்தை எடுத்துக் கொள்வோம்:**

நமுசி போல்வார், *"என்னிது மாயம் என்னப்பன் அறிந்திலன் முன்னைய வண்ணமே கொண்டளவாய்"*

*என ஆணையிட்டபடியும்*

இந்திராதிகள், "***திசை வாழியெழ***" *என்கிறபடியே,* "***போற்றி என்றேற்றெழுவர்***" *என்கிறபடி தன் ப்ரயோஜனம் பெற்றதற்குப் போற்றிய படியும்,*

இப்படி அவர்கள் கூத்துக் கண்டு சிரிப்பாரைப் போலே அவன் மாயக்கூத்து கண்டு மகிழ்ந்தபடி இவ்வர்த்தத்தை அருளிச்செய்து உள்ளனர் சிலர், ஆனால் ஆண்டாளோ புஷ்பஸுகுமாரமான திருவடிகளால் உலகங்களை அளக்கும் போது, பூமகளும், மண்மகளும் கூசிப்பிடிக்கும் மெல்லடிகளைக் கொண்டு காடு மேடையும் அளப்பதே, எனப்பரிந்து "**உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு**" என்னும் குடியிற் பிறந்தவளாகையாலே, அச் செயலுக்கு "**அன்றிவ்வுலகமளந்தாய் அடி போற்றி**" என்று உலகமளந்த அத்திருவடிக்கு காப்பிட்டவள் ( ஸதாசார்ய சம்பந்தத்தால் ஏற்பட்ட பெருமையிது).

**ஸ்ரீராமாவதாரத்தை எடுத்துக் கொள்வோம்:**

**ஆழ்வார்களில் சிலர்,**

***"கல்லாதவரிலங்கை கட்டழித்த காகுத்தனல்லால் ஒரு தெய்வம் யானிலேன்" என்றும், "சிலையினாலி லங்கை செற்ற தேவனே தேவனாவான்" என்றும் மண்டோதரியைப் போலே பரதத்வ நிர்ணயத்தில் இழிந்தனர்.***

***"சிலர் நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தால் முரணழிய முன்னொரு நாள் தன் வில் அங்கை வைத்தான் சரண்"***

என்று அவனிடம் ரக்ஷகத்வ புத்தியையே நடத்திப் போந்தனர்,

அங்ஙனன்றியே, அத்தலைக்குத்தான் ரக்ஷையாக நினைத்து ஆண்டாள் "***சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி***" என்று அவனுக்கும் அவன் திறலுக்கும் மங்களாசாஸனம் செய்தார்.

**ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தை எடுத்துக் கொள்வோம்:**

ஸ்ரீக்ருஷ்ணவதாரத்தில் சகடுதைத்த வ்ருத்தாந்தத்தை எடுத்துக் கொண்டால், "***உருளும் சகடமுதைத்த பெருமானார் அருளின் பெரு நசையால் ஆழாந்து நொந்தாயே***" என்று பெண்மையை யெய்திய நம்மாழ்வார் ஆசைப்படுவதிலும்,

"***உளர்ந்த சகடமுதைத்த பாதத்தன்.... என்னை நிறை கொண்டான்***" *என்றடக்கம் கெட்டு மடலெடுப்பதிலும் முற்பட்டார்.*

திருமங்கையாழ்வார், "***உருளச்சகடம் தறக்கில் நிமித்தீர்- இருளத்திது வென்னிது வென்னிதுவென்னோ***"

*என்று ஊடலிலும் முற்பட்டார்.*

இங்ஙனன்றி ஸ்ரீ ஆண்டாள் வயிறுபிடித்து "***பொன்றச் சகட முதைத்தாய் புகழ் போற்றி***" எனப் பரிந்து காப்பிடுகிறாள்.

**கன்று குணிலாவெறிந்த வ்ருத்தாந்தம்:**

பூத்தாழ்வார், "***மேலால் விளாவின்காய் கன்றினால் வீழ்த்தவனே ... அன்பு***
என்று அச்செயலில் பக்தி பண்ணினார்

பொய்கையார், "***இனியார் புகுவார் எழுநரக வாசல் .. கனி சாயக்
கன்றெறிந்த தோளான் கனை கழலே
காண்பதற்கு....சூழ்நாடு***" ***இச்செயலை நினைத்தால்
யமபய அவஸ்தையைப் போக்கும் என்றார்.***

நம்மாழ்வார், "***கன்றுயரத்தானெறிந்து காயுதித்தார்... மருங்கு***"
***என்று இச்செயல் விரோதி நிவர்த்தகம் என்றார்.***

ஆனால், ஆண்டாளோ ஸ்வயம் ப்ரயோஜனமாய்ப் போற்றியவள். "***கன்று குணிலாயெறிந்தாய் கழல் போற்றி***" என்றும், மேலும் "***குன்று குடையாய் எடுத்தாய்***" அந்த ஸௌசீல்ய வாத்ஸல்ய கல்யாண குணங்களுக்குப் போற்றி, இப்படி நீ எங்களுக்காக செய்த வீரச்செயல்களுக்கு என்றும் பல்லாண்டு. இப்படி எங்களுக்கு ஏதும் தீங்கு நேராவண்ணம் ரக்ஷகத்வம் மிளிர உன் கையில் வேலைப் பிடித்துக் கொண்டு நிற்கும் உனக்கும் போற்றி, என்று தன் தகப்பனாரைப் போல் அவனுடைய அழகு, குணம், வீரம் இவைகளோடு அவனையும் சேர்த்துக் காப்பிடுகிறார் ஆண்டாள்.

**பகவத் பக்தி விஷயத்தில் ஆழ்வார்களும் - ஆண்டாளும்:**

ஆழ்வார்களில் ப்ரபன்ன ஜனகடஸ்தரான நம்மாழ்வார்:
" ***அயர்வறு மமரர்களபதியவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே***" என்று
பகவத் விஷயத்தில் இழிந்து பின்பு,
'***நெடுமாற்கடிமை ..... அவனடியாரடியே கூடுமிது
வல்லால் விடுமாறென்பதென்***" என்று பாகவத விஷயத்தில்
ஈடுபட்டார்.

திருமங்கையாழ்வார் :
சப்தாதி விஷயங்களில் வெறுத்து,
"***வாடினேன் வாடி ... நாராயணாவென்னும் நாமம்***"
என்று பகவத் ப்ரீதியை வளர்த்துப் போந்து பிறகு,
"***தண்சேறை எம்பெருமான் தாள் தொழுவார் காண்மின்
என் தலைமேலாரே எம்பெருமான் தாள் தொழுவார்
எப்பொழுதுமென் மனத்தே இருக்கின்றாரே***" என்றும்
இத்யாதிகளால் பாகவத விஷயத்தில் மிகுந்த ப்ராவண்யம் பெற்றார்.
ஆனால் ஆண்டாளோவென்னில்?

முதலிலே சரம பர்வமான பாகவத விஷயத்தைப்பற்றி ப்ரதம பர்வமான எம்பெருமானைப் பின்னரே பற்றலானாள். அதாவது - திருப்பாவையில் முதலிலேயே சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் என்று கண்ணன் அவதரித்துச் செல்வம் மல்கும் திருவாய்ப்பாடியில் பிறப்பதாம். கண்ணனுக்கு ஸமகாலத்தில் பிறப்பதாம், அது தன்னிலும் முரட்டு ஆண்களன்றியே பெண்களாகபிறப்பதாம் முதிர்ந்த பெண்களன்றிக்கே கண்ணனோடொத்த பருவத்தினர்களாவதாம், பாக்யவதிகாள்! உங்கள் பாக்யமே பாக்யம் எனக் கொண்டாடி போதுவீர் போதுமினோ? என்று கண்ணன் ஸம்பந்தம் பெற்ற சிறுமியரை அழைத்து ஒவ்வொரு அகத்திலும் சென்று அவர்களை எழுப்பி,பிறகு கண்ணனுக்கு அந்தரங்கர்களை க்ரமேண எழுப்பி, பிறகு கண்ணனை எழுப்பி பின்னரே **"உன் பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய் ... உன்தன்னோடு-ற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோம்"**, என்று கண்ணனிடம் கைங்கர்ய ப்ரார்த்தனை செய்வதாக முடித்து சரம பர்வமான பாகவத விஷயத்தில் தன்னூற்றத்தை அறிவித்து இத்தாலும் மற்றை யாழ்வார்களிலும் விஞ்சியவளானாள்.

இப்படி ஆண்டாள் பக்தியிலும், மங்களாஸாசனத்திலும், பாகவத விஷயத்தை முன்னிட்டு பகவத் விஷயத்தில் ஈடுபடுதலிலும் ஆழ்வார்களைக் காட்டிலும் விஞ்சிய தன்மையள் என்று, மேலும் நம்மாழ்வார் 16 வயது ப்ராயத்தில் (பாலோடு அமுதன்ன மென்மொழி முகம் செய்தது என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூத்ரத்தால் 187 இதனை நன்கு அறியலாம் ) வாய் திறந்து பேசினார். திருமங்கையாழ்வாரோ சப்தாதி விஷயங்களில் வெகு காலம் மண்டி பிறகே பகவத் விஷயத்திற்கு வந்தார். ஆனால் ஆண்டாளோ பிஞ்சாய் பழுத்தவளானகையாலே 5 வயது பிராயத்திலேயே திருப்பாவையருளிச்செய்தாள் எனத் தெரிகிறது. ***"ஐந்து பிராயத்திலே பெண்பிள்ளை ஜல்ப்பித்ததற்கு ஒரு பொருளுண்டோ"*** என்பாராம் அனந்தாழ்வான். இந்த ஐதிஹ்யத்தால் மிகச் சிறு பிராயத்திலேயே திருப்பாவை அருளிச்செய்தது புலனாகிறது. இப்படி, ***"அஞ்சுகுடிக்கு ஒரு சந்ததியாய் ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய் பிஞ்சாய்ப் பழுத்தாளையாண்டாளைப் பக்தியுடன் நாளும் வழுத்தாய் மனமே மகிழ்ந்து"*** என்ற மணவாளமாமுனிகள் கூற்றின் படி ஆண்டாளின் வக்த்ரு வைலக்ஷண்யமும் பரபந்த வைலக்ஷண்யமும் மற்றைய (ஆழ்வார்களிலும் விஞ்சி நிற்கும் தன்மை காட்டப்பட்டது. இனி இப்ரபந்தம் (திருப்பாவை) எங்ஙனே ரஹஸ்ய த்ரயத்தையும், அர்த்தபஞ்சகத்தையும் தன்னிடத்தே கொண்டுள்ளது என்று காண்போம்.

## இயல் - 5

# சங்கத் தமிழ் மாலையில் வைணவ ரகஸ்யார்த்தங்கள்

ஸ்ரீஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை என்னும் சங்கத்தமிழ்மாலை ப்ரபந்தத்தில் உட்பொருளாய் இருக்கும் ரஹஸ்ய த்ரயத்தின் சாரமும் அர்த்த பஞ்சகமும் பூருவாசார்யங்களின் கருத்தைக் கொண்டு விண்ணப்பிக்கப் படுகிறது.

***பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்****
***வேதமனைத்துக்கும் வித்தாகும்*- கோதை தமிழ்***
***ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை****
***வையம் சுமப்பதூஉம் வம்பு.*** -வேதப்பிரான்பட்டர்

கோதை தமிழ் என்பது வேதத்தின் வித்தாம். வித்திலிருந்து வ்ருக்ஷமும் வ்ருக்ஷத்திலிருந்து வித்தும் உண்டாவது இயற்கைதானே, "***அனந்தாவை வேதா:***" என்றது அவற்றின் கணக்கிலடங்காத அளவு கொண்டுதானே. பாற்கடலைக் கடைந்து அம்ருதம் எடுத்தவன் பகவான். அவன் ஒருவனாலேதான் அது முடியும். அது போல பராசர மகரிஷியின் திருக்குமாரராம் ஸ்ரீவேதவ்யாஸரிடத்திலே பகவான் ஆவேசம் கொண்டு ப்ரவேசித்து வேதக் கடலைக் கடைந்து கணக்கிடலங்காத வேதவாக்கியங்களின் உண்மைப்பொருளை வெளிப்படுத்தினான். அதுவே ப்ரஹ்மசூத்திரம் என்னும் அமிர்தம்.

அவன் செய்த கார்யத்தை அதாவது ஸம்ஸ்க்ருத வேத உவநிஷத்துக்களின் ஸாராமாகிய அம்ருதம் போன்றுள்ளதை, பகவான் ப்ரம்மஸூத்ரவடிவில் ஆக்கியது போல், ஆண்டாள் வேதத்தின் சாரத்தை திருப்பாவை என்னும் தமிழ் ப்ரபந்தத்தின் மூலம் வெளியிட்டருளினாள். இக்கருத்தை மனத்தில் கொண்டே ஸ்ரீவேதப்பிரான் பட்டர் ஆண்டாளின் பாசுரத்தை வேதமனைத்துக்கும் வித்தெனத் தெரிவிக்கிறார்.

வேதத்தில் அம்ருதம் போன்ற ப்ரம்மஸூத்திரத்தின் சுருக்கம் என்ன என்பதை நம் ஆசார்யர்கள் தெள்ளத் தெளிவாக ரஹஸ்ய த்ரய வ்யாக்யானங்கள் மூலம் வெளிப்படுத்தியிருக்கின்றனர். ரஹஸ்ய த்ரயங்களென்பது திருமந்திரம், த்வயம், சரமசுலோகம் என்பன. இவை ஒன்றை ஒன்று விவரிப்பதாய் மூன்றின் நோக்கும் ஒன்றேயாய் அமைந்திருப்பதிலிருந்து இம்மூன்றையும் ஸர்வேசுவரனே ஒரோர் கால விசேஷத்திலே ஒவ்வொருவர் மூலம் வெளிப்படுத்தினான் என்பது தேறும். திருமந்திரத்தை நர-நாராயணனாய் திருபதரிகாசிரமத்திலேயும், த்வயத்தை பெருமாள் - பிராட்டிக்கு விஷ்ணுலோகத்திலேயும், ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனுக்கு சரமசுலோகத்தை குருக்ஷேத்திரத்திலேயும் உபதேசிக்கிறார்.

ரஹஸ்ய த்ரயம் என்பது வேத ஸாரம். அது போல ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையும் வேத ஸாரம் என்று பெரியோர் பணிப்பர்.

இந்நோக்குக் கொண்டு சங்கத்தமிழ்மாலையாம் திருப்பாவையை ஆராய்ந்தால் அதில் திருமந்திரத்திரத்தின் ஸாரமும். த்வயத்தின் ஸாரமும், அதே போல் சரம சுலோகத்தின் சாரமும் கிடைக்கும் என்பது கொண்டே வேதமனைத்திற்கும் வித்தென்று உருவகப் படுத்தப்பட்டுள்ளது.

## திருமந்திரத்தின் ஸாரம் திருப்பாவை

இதை முதற் பாட்டிலேயே காணலாம். "***நாராயணனே***", "***நமக்கே***", "***பறை தருவான்***" என்று கூறியது கொண்டு திருமந்திரத்தின் ஸாரமான பகுதி இதில் எடுத்துரைக்கப் பட்டதென பெரியோர் நிர்வஹிப்பது. திரு மந்திரத்தின் முதற் பகுதி ப்ரணவம். அதில் '***அ***' காரத்தின் மூலம் வெளிப்படுவது ச்ரிய:பதி: '***உ***' காரம் அவதாரணார்த்தம்; '***ம***' காரப் பொருள் ஜீவாத்மா. இந்த ப்ரணவத்தை விவரிக்கும் மந்திரசேஷத்தில் '***நாராயணாய நம:***' என்னும் பகுதியின் அர்த்தமே முதற் பாட்டில் '***நாராயணனே***', '***நமக்கே***', '***பறை தருவான்***' எனக்குறிக்கப்பட்டது. நாராயணபதத்தில் ஸ்ரீதத்வமும் அடங்கியது, '***ஏ***'வகாரத்தால் அவதாரணார்த்தமாகிய அநந்யார்ஹ சேஷத்வம் உணர்த்தப்படுகிறது. நமக்கே என்கிற (ஜீவாத்மா) ஏவகாரத்தோடு படிக்கப்பட்டதால் ஸ்வரூபம் அறிந்த ஜீவனுக்கு என்ற பொருளும், '***பறை தருவான்***' என்பதால் உபாய ஸ்வரூபமும் வெளிப்படுத்தப்பட்டது. திருமந்திரம் காலத்தால் முற்பட்டது என்பதை கோதை தன் முதற்பாட்டால் முந்துற முன்னம் உணர்த்தினாள்.

## த்வயமந்திரத்தின் ஸாரம் திருப்பாவை

முந்துற முன்னம் ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு அவச்யாபேக்ஷிதங்களான அர்த்தங்களை 17 பாட்டுக்களில் தெளிவுப்படுத்தி த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்பதை அறிந்தாற்போல, 18ஆம் பாட்டில் நப்பின்னைப் பிராட்டியை எழுப்பி அவளாலே பேறு பெற வேண்டும், என்பதைத் தெளிவுபடுத்தி பிறகு மேற்பாட்டுக்களால் சீரிய சிங்காஸனத்தில் அமர்ந்திருந்து எங்களுக்கு வேண்டியதை நீயே ஆராய்ந்து தருவாயாக என்று அவனையே உபாயமாக்கி அந்தச் சிங்காஸன இருப்பில் பிராட்டியுமுட்பட அகப்பட வேண்டுகையாலே அந்தத் திருவோலக்கத்திற்கே மங்களாசாஸனம் பண்ணி **"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உற்றோமே யாவோம், உமக்கேயாமாட்செய்வோம், மற்றை நம் காமங்கள் மாற்றென்று"** அத்தாணிச் சேவகத்தைப் பிரார்த்தித்துப் பெற்றதன் மூலம் த்வயத்தின் ஸாரமான பாகத்தை திருப்பாவையில் வெளிப்படுத்துகிறாள்.

## சரம சுலோகத்தின் ஸாரம் திருப்பாவை

கீழ்ச்சொன்ன தர்மங்களை அவைகளின் அங்கங்களோடுப் வாஸனையோடும் விட்டு என் ஒருவனை உபாயமாகப்பற்று நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவித்து மோக்ஷத்தைக் கொடுக்கிறேன் கலங்காதே என்பது சரமசுலோகத்தின் கருத்து. இதையே திருப்பாவையில் ஆண்டாள் உணர்த்தியிருப்பதை நோக்கலாம். இரண்டாம் பாட்டில் த்யாஜ்ய விஷயத்தை நெய்யுண்ணோம், பாலுண்ணோம், மலரிட்டு நாமுடியோம். செய்யாதன செய்யோம், தீக்குறளைச் சென்றோதோம் என்பதன் மூலம் தெளிவுப்படுத்தி அவனைப்பாடினால் நம் பாபங்கள் ஸஞ்சித, ப்ராரப்த கர்மாக்கள் தீயினில் தூ சாகும். தூ மலர் தூவித் தொழுது, வாயினால் பாடி, மனத்தினால் சிந்திக்க என்பதை ஐந்தாம் பாட்டிலும் உணர்த்தி, எப்படி கண்ணன் நம் பயத்தைக் கண்டு கலங்காதே என்று உரைத்தாரோ, அதேபோல் ஆண்டாளும் "***போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் செப்பு***" என்று நமக்கு உய்யும் வகையாம் மோக்ஷம் என்பதை உய்யுமாறு எனக்கூறி இறுதியில் உன் தன்னைப் பிறவி பெருந்தனைப் புண்ணியம் யாம் உடையோம் என்று "***மாமேகம் சரணம் வ்ரஜ***" என்ற தன் பொருளைக் குறிப்பாலே கூறித் தலைக்கட்டினாளாயிற்று.

மேற் கூறியவாற்றால் வேதமனைத்திற்கும் வித்தான திருப்பாவையில் ரஹஸ்யத்ரயங்களின் ஸாரம் வெளிப்படுத்த பட்டாற்போல அர்த்த பஞ்சக ஞானமும் அறியப்படுகிறது என்பது பற்றி சிறிது ஆராயப்படுகிறது.

**முதல் பாசுரத்தில்,**

| | | |
|---|---|---|
| நாராயணனே என்பதால் | - | பரஸ்வரூபமும் |
| நமக்கே என்பதால் | - | ஸ்வஸ்வரூபமும் |
| பறை என்பதால் (கைங்கர்யம்) | - | புருஷார்த்த ஸ்வரூபமும் |
| தருவான் என்பதால் | - | உபாய ஸ்வரூபமும் |
| பாரோர் புகழ என்பதால் | - | விரோதி ஸ்வரூபமும் |

உணர்த்தப்படுகிறது.

சகல வேத சாஸ்திரங்களிலும் சாரமாகச் சொல்லப்படும் "***அர்த்த பஞ்சகம்***" வைணவ சம்பிரதாயத்திற்கு இன்றியமையாத ஐந்து பொருள்கள், இவை திருப்பாவை 30 பாசுரங்களில் அடங்கியிருக்கின்றன. அவை,

'நாராயணனே நமக்கே பறைதருவான்'
திருநாராயணப் பெருமாள் (மேல்கோட்டை



திருமந்திரம்
"ஓம் நமோ நாராயாணாய"

ஸ்ரீ பெருந்தேவி நாயிகா ஸமேத
ஸ்ரீ அபீஷ்டவரதராஜப் பெருமாள், காரப்பங்காடு



ஸ்ரீமந்நாரயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:

1. இறை நிலை (பரமாத்மஸ்வரூபம்) 1-5 பாடல்கள்
2. உயிர் நிலை (பலதரப்பட்ட ஜீவாத்மஸ்வரூபம்) 6-15 பாடல்கள்
3. தக்க நெறி (பகவானைப் பெறுவதற்கான உபாயம் சரணாகதி) 16-22 பாடல்கள்
4. வாழ்வினை (அனுபவிக்கும் பலன் பகவத் கைங்கர்யம்) 23-27 பாடல்கள்
5. ஊழ்வினை (பலனைப்பெற முடியாமல் தடுக்கும் ப்ரக்ருதி சம்பந்தம்) 28-30 பாடல்கள்

நம்மாழ்வார் திருவாய்மொழியில் அர்த்தபஞ்சகத்தை அருளிச்செய்திருக்கும் விதத்தை அவருக்கு இட்ட தனியனில் பட்டர் கீழ்க்கண்டவாறு அருளுகிறார்.

***"மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்****
***தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும்****
***ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர் கோன்****
***யாழினிசை வேதத் தியல்."***

மேலே சொல்லப்பட்ட தனியனில் இவ்வர்த்தபஞ்சகத்தை ஓதும் சடகோபனின் நல்ல இசை (யாழின் இனிமையான நாதம் போன்ற சாமவேத சாரமான திருவாய்மொழி இசை), வேதத்தின் இயலாய் இருப்பதாய் சொல்கிறார். **ஸ்ரீ ஆண்டாள்** அருளிச்செய்த திருப்பாவையை வேதமனைத்திற்கும் வித்து என்னும் படியென்னென்னில் (ப்ராக்டிகல்) வெருமையாக ஓதி ப்ரயோசனம் இல்லை வாழ்க்கையில் அதை அநுட்டிக்க வேணும் என்னும் கருத்தை வலியுறுத்தி, ஒரு வித்து விருக்ஷமாகி அது பல வித்துக்களை ஈன்று அந்த வித்துக்கள் பல விருக்ஷங்கள் ஆகும், தன்மை போலே அநுட்டான ரூபமாய் அருளிய படியால் இவர் காரியம் பலிதமாயிற்று.

## ஆண்டாளின் அர்த்த பஞ்சகம்

<u>**இறைநிலை**</u> (பரஸ்வரூபம்) (1-5)

பரமாத்மாவின் ஸ்வரூபம் பர, வியூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்று ஐந்து ப்ரகாரமாய் உள்ளது. அவைகளை ஆண்டாள் முதல் 5 பாட்டில் முறையே நாராயணன் என்று பரவாசுதேவனையும், பாற்கடலுள் துயின்ற பரமன் என்று வியூகப் பெருமாளையும், ஓங்கி உலகளந்த உத்தமன் என்று விபவ அவதார திருவிக்ரமப்பெருமாளையும், ஊழிமுதல்வன் என்று -அந்தர் யாமித்வத்தையும் "***மாயனை மன்னு வடமதுரை மைந்தனை***"என்று அர்ச்சாவதாரத்தையும் சொல்லி அவர்கள் வைபவங்களை பரக்கப் பேசுகிறார். அப்படிப்பட்ட பகவானின் திருவடிகளைப் பற்றி உய்யும் வழியையும் காட்டுகிறார்.

குன்று குடையா எடுத்தாய்! குணம் போற்றி



தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது*
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்*
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்*
தீயினால் தூசு ஆகும் செப்பு-ஏலோர்
எம்பாவாய்.

**உயிர் நிலை** (ஜீவாத்ம ஸ்வரூபம்) (6 -15)

உலக மாய வாழ்க்கையில் அகப்பட்டு தவித்துறங்கும் மக்களைத் துயில் எழுப்பும் திருப்பள்ளி எழுச்சியே (6-15) "***புள்ளும் சிலம்பினகாண்***" முதல் "**எல்லே இளங்கிளியே**" வரையில் உள்ள திருப்பாவையாகும். பகவானை விட்டுப் பிரிந்திருக்கும் நிலையே உறக்கம் எனப்பட்டது. பகவத் சம்ஸ்லேஷமே நீராட்டம், பகவத் கைங்கர்யமே பறை எனப்பட்டது. அர்ச்சாவதாரத்திலே பூர்ணமாய் எழுந்தருளியிருக்கும் பகவானிடத்தில் உங்கள் உறக்கம் களைந்து எழுந்து (உங்கள் அஞ்ஞானத்திலிருந்து விழித்துக் கொள்ளுங்கள்) வந்து வாயினால் பாடி தூய மனத்தினராய் எந்தவித ப்ரயோஜனத்தையும் எதிர்பார்க்காமல் பக்தி செய்து, தூ மலர் தூவித் தொழுது அவனுடைய திவ்ய கல்யாண குணங்களினால் அவனுக்கு சூட்டப்பட்ட திருநாமங்களைக் கொண்டு துதியுங்கள்; பகவத் கைங்கர்யம் செய்து பகவானை உகப்பித்து உங்கள் தாஸஸ்வரூப லக்ஷணத்தைப் பரிமளிக்கச் செய்யுங்கள் என்று ஸ்வரூப லக்ஷணத்தையும், ஸ்வரூப ஞானத்தையும் உபதேசிக்கிறார். பத்து விதமான சேதனர்களை அழைக்கிறார். இவர் திருதகப்பனார் போலே (திருப்பல்லாண்டில் இவ்வாழ்வார் தனியாயிருந்து மங்களாஸசாஸநம் பண்ணுவதில் த்ருப்திபெறாமலும், போக்யமான வஸ்துவைத் தனியே அநுபவிப்பது தகாது என்கிற ந்யாயத்தாலும் இன்னும் பல பேர்களையும் மங்களாசாஸநத்திற்குத் துணை கூட்டிக் கொள்ள நினைத்தும், உலகத்தில் உள்ள மூன்று விதமான அதிகாரிகளையும் அழைக்கிறார். ஐசுவர்யார்த்தி, அர்த்தார்த்தி, ஜ்ஞாநி ஆகிய 3 அதிகாரிகளை மூன்று பாசுரங்களால் அவர்களுடைய குணங்கள், ரூபங்கள், ஸ்வரூப லக்ஷணங்கள், அதிகாரி லக்ஷணங்கள், ஐஸ்வர்ய ப்ராப்தி இவைகளின் நிலையையிட்டு அழைத்து அவர்கள் அனைவரையும் ஒரேபடியாக நெறிப்படுத்தி பாகவத்தோத்தமர்களாக்கி 15ம் பாட்டில் " ***எல்லே இளங்கிளியே***" யில் எல்லை நிலமான பாகவத ஸ்வரூப லக்ஷணங்களை சிக்ஷித்துச் சொல்லிக் பகவத் பக்தி முதிர்ந்தால் பாகவத பிரதிபத்தியில் பரிணமிக்கும் என்பதைக் காட்டுகிறார். "(***அடியார் குழாங்களுடன் உடன் கூடுவது என்று கொலோ***" என்று நம்மாழ்வார் பாரித்தது போல) ஆண்டாளும் நீராடப் போதுவீர்! போதுமினோ என்று பகவத் கைங்கர்யத்தைச் செய்ய ஆசை உள்ளவர்கள் எல்லோரும் வாருங்கள், வாருங்கள் என்று அழைப்பதில் அடியார் குழாங்களின் தரிசனத்தைக் கொண்டாடி பாகவதர்களுடன் கூடியிருந்து குளிர்வதுவே பரம புருஷார்த்தம் என்பதை அறிவிக்கிறார் ஸ்ரீ ஆண்டாள்.

**தக்கநெறி** (பகவானைப் பெறுதற்கான உபாயம்- சரணாகதி) (16-22)

இப்படி நெறிப்படுத்தப்பட்ட சேதனர்களுக்கு தக்க நெறிதன்னைச் காட்டி நாம் உய்வதற்கு உய்யும் வண்ணம் பகவத் சம்பந்தத்தை எப்படி பெற வேண்டும் என்னும் உபாயத்தையும் காட்டிக் தருகிறார். "***நாயகனாய்***" மூலம் ஒரு ஸ்ரீவைஷ்ணவரின் திருவடிவாரத்தில் ஒதுங்கி வர்த்தித்து அவர் மூலம் ஒரு சதாசார்யனை கிட்ட (அடைதல்) வேண்டும், என்பதை "***அம்பரம்***" மூலம் உணர்த்தினாள். பிறகு ஆசார்யன் அநுக்ரஹத்தால் பிராட்டியினை ஆசிரயிக்கவேண்டும் என்பதும் பகவானை, பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு பிராட்டியும் பகவானும் சேர்ந்திருக்கும் மிதுனத்திலேயே ஈசுவரனைப்பற்ற வேண்டும் என்பதை "***உந்து, குத்து, முப்பத்து***", பாசுரங்களின் மூலம் உணர்த்துகிறார். "***ஏற்றகலங்கள், அங்கண்மா***" ஆகிய பாசுரங்களின் மூலம் பிராட்டியின் புருஷகாரபலத்தோடு எம்பெருமானை சரணாகதி செய்யும்படி (சேதனர்களை) செய்கிறார்.

**வாழ்வினை** (அனுபவிக்கும் பலன் பகவத் கைங்க்ர்யம்) (23 - 27)

இப்படி சரணகதி செய்ய அழைத்து வந்திருக்கும் சேதனர்களுக்கு எம்பெருமானும் முறையாக அவர்கள் கோருகின்ற பலனைக் கொடுக்க வேண்டும் என்று பகவானுக்கு உணர்த்தினாள். பின் "***மாரிமலை***" யில் அவன் உறங்கும் பள்ளியறையிலிருந்து எழுந்து வந்து சீரிய சிங்காதனமான தர்மாதி பீடத்தில் அமர்ந்து எங்கள் கோரிக்கைகளைக் கேட்க வேணும் என்று அழைக்க, அவனும் எழுந்து வர, அந்த நடையழகிற்கு பாகவத ஸ்வரூபத்திற்குச் சேர பல்லாண்டிசைக்கிறார். பிறகு "***ஒருத்தி***" யில் அவன் பெருமைகளைத் துதிக்கிறார். "***மாலே***"யில் தங்கள் வாழ்வினையான பறையை (பகவத் கைங்கர்யத்தை)அவனிடம் நீயே கொடுக்க வேண்டும் என்று யாசிக்கிறார்கள். (கைங்கர்யத்தை யாசித்தே பெற வேணும் என்னும் ந்யாத்தாலே). "***கூடாரை***" பாசுரத்தில் அவன் தங்களுக்குக் கொடுத்த பலன்களினால் மகிழ்ந்து, தன்னுடைய வெற்றியைக் கொண்டாடி அடியாருடனும் கண்ணடனும் கூடி மகிழ்ந்து "***இதுதான் நம்முடை நல்வாழ்வு***" என்று ஆரவாரிக்கிறார். இவர் தகப்பனார் வாழ ஆசையுள்ளவர்கள் வாருங்கள் என்றார். இவர் தாயாரான படியால் வையத்தில் வாழ்பவர்கள் எல்லோரும் வாருங்கள் என்கிறார். இதுதான் உண்மையான உலகப் பொதுமறை.

**ஊழ்வினை** (பலன்பெற முடியாமல் பெற்று அனுபவிக்க முடியாமல் தடுக்கும் ப்ரக்ருதி சம்பந்தம்) (28 - 30)).

"***கறவை***"யில் இப்படி திருத்தக்கசெல்வமும் சேவகமும் ஆன உயர்ந்த புருஷார்த்தங்களை யாசிக்கின்ற நீங்கள் அதற்குத் தகுதியுடையவர்களாய் இருக்கவேண்டாமா? என்று வினவும் கண்ணனிடம் (கறவைகள் பின் சென்று) சப்தாதிவிஷயாந்தரங்களிலே மண்டிக்கிடப்பவர்கள்; (கானம் சேர்ந்துண்போம்)- ஆசார அநுஷ்டானமில்லாதவர்கள் ; (அறிவொன்றும் இல்லாத ஆயர்குலம்) - அறிவில்லாத மாக்கள் என்று இப்படி ஆகிஞ்சன்யத்தைச் சொல்லி. ஆனால் திருவுக்கும் திருவாகிய செல்வா புண்யமே வடிவான உன்னை நாங்கள் சரணமடைந்தபடியால் மேட்டுமண் பள்ளத்தை நிரப்புமாபோலே நீ எங்கள் பாவங்களையும், தோஷங்களையும் போக்கித் தரவேணும். நீ உன் வார்த்தையை ஞாபகபடுத்திக் கொள். "***ஸர்வ தர்மான் ... மாசுச:***" என்று சொன்னாயே. உன்னையே சரணமாகப் பற்றி வந்துள்ளோம், "***உந்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது***", ஆகையால் எங்களை மன்னித்து ஏற்றுக்கொள். இந்த ப்ரக்ருதி சம்பந்தத்தை அழித்து எங்களுக்கு நித்ய கைங்கர்யத்தைத் தந்தருள வேணும் என்கிறார்கள். "***சிற்றம்***" - இதில் இப்படி இவர்கள் கூறிய பதிலால் மகிழ்ந்து திருப்தியடைந்த எம்பெருமானிடம் மேலும் சொல்கிறார்கள். நாங்கள் இத்தனை சிரமப்பட்டு சிற்றஞ்சிறுகாலே வந்து உன் திருவடியைப் பாடிப் போற்றியதன் பொருளைக் கேள். பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்தபோது சொன்ன மெய்மைப் பெருவார்த்தையை ஞாபகப்படுத்திக் கொண்டு நீ எங்களிடம்தான் கைங்கர்யம் செய்து கொள்ள வேணும். அதுவும், அக்கைங்கர்யத்தையும் நீயே தான் தரவேணும், எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்று. உன் முக மலர்ச்சிக்கே கைங்கர்யம் செய்வோம் நாங்கள். ஆகையால் எங்கள் மற்றைய காமங்களான அகங்கார மமகாரங்களை அழித்து எங்களுக்கு க்ருபை செய்து எங்களுக்கு நித்ய கைங்கர்யத்தை அருளவேணும் என்கிறார்.

இதிலிருந்து எம்பெருமானே நமக்கு உபாயோ உபேயம் என்று அறுதியிடுகிறார்.

**ஆண்டாள் :** "***சிற்றஞ்சிறுகாலே வந்துன்னை சேவித்து உன் பொற்றமறையடியே போற்றும்***" *என்பதால்,*

**ஸ்ரீராமன் :** "***ஸக்ருத் ஏவ ப்ரபன்னாய***" - *ஒரு தரமே என்னை சரணகதி பண்ணினவன் என்று ஸ்ரீராம சரம சுலோகமும்,*

**ஆண்டாள்: "*எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உற்றோமே யாவோம்*"** *என்பதால்,*

**ஸ்ரீவராகன் : "*ஸ்திதே மனஸி ஸுஸ்வஸ்தே ஸரீரே ஸதியோநர: .........விச்வரூஞ்ச மாமஜம்*"**

*சரீரம் நோயற்று நல்ல நிலையில் நன்றாக இருக்கையில் எந்த மனிதன் பிறப்பில்லாத என்னை, இவ்வுலகை உடம்பாய் உள்ள என்னை நெஞ்சில் கலக்கமில்லாமல் நிலை நின்ற மனதுடன் நினைக்கின்றனோ,*

*என்று ஸ்ரீவராக சரம சுலோகமும்,*

**ஆண்டாள் : "*உனக்கே நாமாட் செய்வோம் மற்றை நங்காமங்கள் மாற்று*",** *என்பதால்,*

**ஸ்ரீகிருஷ்ணன்: "*சர்வதர்மான் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ அஹம் ...... மாசுச:*"**

***எல்லா தர்மங்களையும் விட்டு என்னை சரணமடை, நான் எல்லா பாவங்களையும் போக்கி உன்னை காப்பாற்றுவேன்.***

*என்று ஸ்ரீக்ருஷ்ண சரம சுலோகமும்,*

உணர்த்தப்படுகிறது என்று பெரியோர் பணிப்பர்.

"***நாராயணனே நமக்கே பறை தருவான்***", "***சிற்றஞ்சிறுகாலே***" ஆகிய பாசுரங்களால் எம்பெருமானே நமக்கு உபாயோபேயம் அவனுக்கு, அவன் உகப்புக்கு கைங்கர்யம் செய்வதே நமக்கு ப்ராப்யம் (புருஷார்த்தம்) என்றும், வேதமனைத்திற்கும் வித்தான ரஹஸ்யார்த்தங்களென்ன, அர்த்த பஞ்சகமென்ன, உபாயோபேயமென்ன, புருஷார்த்தமென்ன என்பதைத் தெரியப்படுத்தி நம் பாதகங்களைத் தீர்த்து, பரமனின் திருவடிவாரத்தையும் காட்டுகிறார் ஜகத்குருவான பரமாத்மாவின் தேவியான சங்கத்தமிழ் நாயகியான ஸ்ரீஆண்டாள்.

வங்கக்கடல் நாயகனான ஸ்ரீமந் நாராயணனையும், ஆசிரித வாத்ஸலனும், ஸ்ரீய:பதியுமான மாதவனையும்; விரோதி நிரஸனம் செய்பவனான கேசவனையும் (அதாவது வாழ்வினைக் கொடுப்பவன், ஊழ்வினையைக் கெடுப்பவன்) பாடிப் பறை கொண்ட இவ்விதத்தை ஆசார்ய ப்ரதிபத்தி கொண்ட, ஸதாசார்ய சம்பந்தத்தால் பாமாலை (சங்கத்தமிழ்மாலை) பாடிய பட்டர்பிரான் கோதையின் வார்த்தையை, முப்பதும் தப்பாமல் உரைப்பவர்கள், செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் எங்கும் திருவருள் பெறுவர் என்று ஆணையிட்டுச் சொல்கிறார் வாத்ஸல்யத்தினால்.

இப்படி வேதம், வேதசாரம், வேதமனைத்திற்கும் வித்து என்ற க்ரமத்தில் திருப்பாவையான சங்கத் தமிழ் மாலை எப்படி ரஹஸ்யார்த்தசாரங்களை உள்ளடக்கியுள்ளது என்று காட்டப்பட்டது. இனி சங்ககாலத் தமிழும் - சங்கத்தமிழும் எப்படி ஒப்புமையாகிறது என்று காட்டப்படும். இந்த ஆய்வு தனிக் கட்டுரையாகவோ, ஆய்வாகவோ தரப்படக் கூடிய அளவு விரிவானது. ஆகையால் இங்கு சுருக்கமாக முக்கிய கருத்துக்கள் மட்டும் காட்டப்படும்.

## இயல் - 6

# சங்கத்தமிழ்மாலை

### பெயர் விளக்கம்

**சங்கத்தமிழ்மாலை** என்பது சூடிக் கொடுத்த சுடர்க் கொடியான ஆண்டாள் அருளிச் செய்த முதல் ப்ரபந்தமான திருப்பாவைக்குப் பெயர். இப்பெயரைச் சூட்டியதும் ஆண்டாளே. திருப்பாவை 30ஆம் பாட்டில் சங்கத்தமிழ் மாலை முப்பதும் தப்பாமே என்று கூறியிருப்பதிலிருந்து இப்பெயர் சூட்டப்பட்டது அவராலே என்பது தெளிவுறும்.

ஸ்ரீஆண்டாள் வாழ்ந்த காலம் பாண்டிய நாட்டில் ஸ்ரீவல்லபதேவ பாண்டியனின் காலத்தில். இது சுமாராகக் கடைச்சங்ககாலத்திற்கும் பிற்பட்டபடியாலே சங்கத்தமிழுக்கும் திருப்பாவைக்கும் எந்த வித சம்பந்தத்தையும் சொல்ல முடியாது.

சங்கம் என்ற சொல்லுக்கு கூட்டம் (புலவர் கூட்டம்) என்று பெயர் பகவத் விஷயத்தில் துணை தேட்டமாகையால் கூட்டமாய் இருந்து அனுபவிக்கும் முறைமை பற்றி இந்நூலுக்குச் சங்கத் தமிழ் மாலை என்று பெயரிட்டிருக்க வேணும் என ஊகித்தல் பொருந்தும். குழாங்களாய் அடியாருடன் கூடி நின்றாடுமினே என்பது குருகூர்ச் சடகோபனின் வாக்கு. சாது கோட்டியுள் கொள்ளப்படுவரே என்பது ஆண்டாளின் திருதகப்பனாரான பெரியாழ்வாரின் வாக்கு. ஆகையால் பகவத் விஷயத்தில் தனித்து அனுபவிக்கும் முறை குற்றமெனக் கருதப்படுதலாலும். "***ஏகஸ் ஸ்வாது ந புஞ்ஜீத***" என்பது சாஸ்திர முறையாகையாலும் கூடியிருந்த குளிருவதே வழக்காதாலும் இப்பெயரிட்டமை மிகப் பொருத்தமென உணர்த்தப்படுகிறது.

ஆண்டாள் பாகவத கோஷ்டியை எழுப்பும் முகேன அமைந்த பாசுரங்களிலும் தனித்து எம்பெருமானை வழிபடுவதை விடுத்து கோஷ்டியுடன் சேர்ந்து அனுபவிக்க கோபிகைகளை அழைப்பதிலிருந்து அவருடைய உள்ளகிடக்கை தெரிகிறது. 30ஆம் பாட்டிலும் (திங்கள் திருமுகத்தை சேயிழையார் சென்றிறைஞ்சி அதாவது திரளாக (சங்கமாக) கூடிச் சென்று தேனினும் இனிய தமிழ்மாலையை பகவான் முன் ஓதி, தாம் வந்த காரியங்களை ஜெயித்துக் கொண்டமையைச் சொல்கிறார். இதிலிருந்து அத்யாபயந்தியான ஆண்டாள் ப்ரபன்ன ஜன கூடர்களை கோபிகாஸ்த்ரீபாவனர்களான தோழிகளை கூட்டிக்கொண்டு கூட்டமாய்ச் சென்று எம்பெருமானிடத்தில் பக்தி செய்வதைத்தான் அவர் சங்கத்தமிழ் மாலை என்று கூறியிருக்கிறார் என்பது தெளிவாகிறது. தற்காலத்தில் அனைத்து திவ்ய தேசங்களிலும் மார்கழி மாதத்தில் ஆழ்வார் கோஷ்டியாக இருக்கட்டும், கோபிகைகள் கோஷ்டியாக இருக்கட்டும், ஆண்டாள் மனோரதப்படியே திருப்பாவை ஓதுகின்றபடியால் இதுதான் பகவானின் திருவுள்ளம் என்பதும் நிதர்சனம்.

## சங்கத்தமிழ்மாலையுடன் - ஒப்பு நோக்குதல்

### கோதையின் சங்கத்தமிழும் - சங்ககாலத்தமிழும்

இனி இங்கே ஸ்ரீஆண்டாள் திருப்பாவை எவ்வகையில் சங்கத்தமிழாகிறது என்று பார்ப்போம்.

முச்சங்கம்: முதல்சங்கம் , இடைசங்கம், கடைசங்கம். இச் சங்கங்கள் முழுதும் மதுரையை மையமாகக் கொண்டது. இந்த 3 சங்கங்களும் முதல் 4 ஆழ்வார்கள் தவிர மற்றைய ஆழ்வார்கள் காலத்திற்கு முற்பட்டது. குறிப்பாக பெரியாழ்வார் ஸ்ரீவல்லபதேவ பாண்டியன் காலத்தில் வாழ்ந்தவராய் சொல்லப்படுகிறது. வல்லபதேவபாண்டியன் கடைச்சங்கம் காலத்திற்கும் பிற்பட்டவன். ஆகையால் சங்ககால தமிழிற்கும் ஆண்டாள் சொன்ன சங்கத்தமிழ்மாலை என்னும் திருப்பாவைக்கும் எந்த சம்பந்தமோ, கால ஒற்றுமையோ இல்லை. ஆண்டாள் தன் ப்ரபந்தத்திற்கு அப்பெயர் வைக்கக் காரணம் அடியார்கள் குழாங்களுடன் கூடியிருத்தல் என்ற பொருளில்தான் (தற்காலத்திலும் அவ்வழக்கம் நடைமுறையில் உள்ளது (உ-ம்) சமரச சன்மார்க்க சங்கம் வைணவ சங்கம் முதலியன) கூறியிருப்பதாக தெரிகிறது. **சங்கம்** என்றால் கூட்டம் ; **சங்க முகம்** என்றால் புலவர்கள் கூட்டம் என்று பொருளுரைப்பர். இருப்பினும் ஆண்டாள் "***நன்னாளால்***" என்றவுடன் அது நன்னாள் ஆனது போன்று சங்கத்தமிழ் மாலை என்று எக்காரணம் பற்றிக் கூறியிருப்பினும், அது எக்காலத்திற்கும் பொருந்தும்படியான மாலையாயிற்று என்பதே உண்மை. சங்கப்புலவர்கள் விஷ்ணு பரத்துவத்தை எப்படி சங்ககாலத்தமிழ்ல் முழங்கியிருக்கின்றனரோ அதற்கு கொஞ்சமும் குறையில்லாமல் ஆண்டாளும் தன் சங்கத்தமிழ்மாலையான திருப்பாவையில் உலக வழக்குத் தமிழில் பாமரனும் புரிந்து கொள்ளும் வகையில் உரைத்திருக்கும் அழகையும் சங்க இலக்கிய லக்ஷணங்களைக் கையாண்டிருக்கும் அழகில் சிலவற்றையும் கீழே பார்ப்போம்.

***சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை***
***பாடியருள வல்ல பல் வளையாய்***

- உய்யக் கொண்டார்.

இங்கே '***தொல் பாவை***' என்னுமிடத்திலே பழமையான நோன்பை திருப்பாவையால் பாடியருளினாள் என்றும், பழைமையாகவிருக்கின்ற திருப்பாவை என்னும் ப்ரபந்தத்தைப் பாடியருளினாள் என்றும் பொருள்படும் ; பாவை என்னும் பதம் நோன்பு என்றும் பாட்டுக்கள் என்றும் பொருள்படும். தொல்பாவை என்பதால் இதனுடைய அபௌருஷேயத்வமும் உணர்த்தப்படுகிறது என்று பிள்ளைலோகம் சீயரும் அருளிச்செய்வர்.

ஆகையால் ஸ்ரீஆண்டாள் (காலத்தால் சங்ககால ஒற்றுமையில்லாவிடினும்) பூமிபிராட்டியின் அம்சம் என்பதற்கேற்ப எக்காலத்திற்கும் பொருந்தும் படியான தொல் பாவையை அமைத்துள்ளார்.

# தமிழ் அறிஞர்கள், ஆராய்ச்சியாளர்கள் சொல்லும் சங்கத்தமிழ்மாலை

## கோதை தமிழிலும், சங்கத்தமிழிலும்-விஷ்ணுபரத்வம்

**உலகனைத்தையும் படைத்தளித்தழிக்கும் ஜகத்காரணன் ஸ்ரீமந்நாராணனே**

### விஷ்ணுவின் ஜகத்காரணத்வம்:

திருமாலைப் போற்றுவதான இரண்டாவது பரிபாடலில் கீரந்தையார் என்னும் சங்ககாலச் சான்றோர் "***கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய ஊழி ஒருவறை உணர்தலின், முதுமைக்கும் ஊழி யாவரும் உணரா ஆழி முதல்வா! நிற்பேணுதும் தொழுது***" என்று ஆதியில் சுவேதவராஹ உருவோடு பிரளய ஜலத்திலிருந்து பூமியை எடுத்து நிலைநிறுத்திய திருமாலே எவராலும் முதுமை காணமுடியாத அந்த மூல முதற் கடவுள் என்று முழங்குகிறார். இதையே ஸ்ரீஆண்டாள்,

"***ஊழிமுதல்வன்***", "***பாழியன் தோளுடை பற்பநாபன்***"
*என்னும் தொடர்களால் என்று திருப்பாவை 4ஆம் பாட்டில் உணர்த்தினார்.*

"***நாட்டைப் படையென்று அயன் முதலாதந்த நளிர் மாமலுருத்தி வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன்***"
*என்று (நா.தி.மொ. 14.9)அவருடைய மற்றொரு ப்ரபந்தத்திலும் விவரிக்கிறார்.*

### விஷ்ணுவின் ஸர்வ வ்யாபகத்வம் :

திருமாலைப்பற்றிய 2ம் பரிபாடலில் "***வடு இல் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த கெடு இல் நடு ஆகுதலும்***" (குற்றமில்லா குணத்தவர்களால் ஆராயப்பட்டு, ஆதி - அழிவு இல்லாத காதால் கேட்கப்பட்டே பரவுகின்ற வேதத்தினுள் அந்தர்யாமியாகச் சொல்லப்படுகின்ற திருமாலே)

3ஆம் பரிபாடலில், "**கீழ் எழூலகமும் உற்ற அடியினை** " என்று திருமால் திரிவிக்கிரமனாய் தன் ஒரடியால் கீழே உள்ள எல்லாவுலகங்களையும் அளந்து, தன் திருமேனியாலும் எங்கும் வியாபிக்கவல்லவன் என்று காட்டப்பட்டுள்ளது. இதையே ஆண்டாள்,

"***ஓங்கி உலகளந்த உத்தமன், அம்பரமூடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமான், அன்றிவுலகமளந்தாய்***"
ஆகிய (திரு.3,17,24)

பாடல்களில் எம்பெருமானின் ஸர்வ வ்யாபகத்வத்தைப்பாடி பரதத்துவ நிர்ணயம் செய்தருளினார். இவ்வண்ணமாக எங்கும் நிறைந்தவனாகவும், உலகனைத்தையும் சரீரமாகக் கொண்டவனாகவும், உலகனைத்துமா யிருப்பவனாகவும் இருநூல்களிலும் நிரூபிக்கப்பட்டது.

## எல்லாமறிந்த ஸர்வஜ்ஞன் ஸ்ரீமந் நாராயணன்:

3ஆம் பரிபாடலில் "***நூறாயிரம் கை ஆறு அறி கடவுள்***" என்று உயிர்கள் தன்னையடைவதற்கு உபாயங்களை அறியும் பரம் பொருள் திருமாலே என்று காட்டி, "***நின்னைப்புரை நினைப்பின் அலது உணர்தியோ, முன்னை மரபின் முதுமொழி முதல்வ?***" என்று திருமாலுடைய பெருமையை அவன் ஒருவனே அறிய முடியும் என்கிறது. இதையே ஆண்டாள்,

> "***அறிவொன்றில்லாத ஆய்க்குலத்து***" *க்கும் எதிர் தட்டான*
> "***குறைவொன்றுமில்லாத கோவிந்தா***" *என்று அவனை*
> *ஸர்வஜ்ஞனாகப்* பேசினாள்.

## எல்லாம் வல்ல ஸர்வ சக்தன் ஸ்ரீமந் நாராயணன்:

3ம் பரிபாடிலில் திருமாலே எல்லாம் வல்ல ஸர்வ சக்தன் என்பதை "***இருகை மாஅல்! முக்கை முனிவ! நாற்கை அண்ணல்! ஐங்கை மைந்த! அறுகை நெடு வேள்! எழு கையாள! எண் கை ஏந்தல்! ஒன்பதிற்றுத் தடக்கை மன்பேராள! பதிற்றுக் கை மதவலி! நூற்றுக் கை ஆற்றல்! ஆயிரம் கைவிரித்த கைம்மாய மள்ள! பதினாயிரம் கை முதுமொழி முதல்வ! நூறாயிரம் கை ஆறு அறி கடவுள்! அனைத்தும் அல்ல பல அடுக்கல் ஆம்பல் அனைத்து என எண் வரம்பு அறியா யாக்கையை***" என்று கடுவன் இளவெயினனார் இவனுடைய ஸர்வ சக்த வல்லமையை குறிப்பிட்டு மறுபிறப்பை அறுத்து மோக்ஷத்தையும் தர வல்லவன் என்று காட்டினார். இதையே ஸ்ரீஆண்டாளும்,

> "***ஆலினிலையாய்***" *என்று 26ஆம் பாட்டிலும் மற்றும் பல இடங்களில் அவனுடைய அகடிதகடநாஸாமர்த்தியத்தையும் பெருமையையும் காட்டினாள்.*

## மறுபிறப்பு அறுத்து மோக்ஷமளிப்பவன் திருமாலே:

3ஆம் பரிபாடலில், "***மா அயோயே! மா அயோயே! மறுபிறப்பு அறுக்கும் மாசு இல் சேவடி மணி திகழ் உருபின் மா அயோயே!***" என்று குற்றமற்ற திருவடிகளை உடைய அப்ராக்ருத திருமேனியை உடைய திருமாலே உயிர்களின் மறுபிறப்பை அறுப்பவன் என்று கடுவன் இளவெயினனார் முழுங்கினார். இதையே ஆண்டாளும்,

> "***மாதவன் வைகுந்தன்***" (9) "***போற்றப்பறை தரும் புண்ணியன்***" (10) "***மற்றைநம் காமங்கள் மாற்றுபவன்***" (29)
> "***அசுரரைக் கிள்ளிக் களைபவன்***" (15) *என்று*

*இஷ்டப்ராப்தியோடு அநிஷ்ட நிவ்ருத்தியைச் செய்து விட்டுலகமாகிய பரமபதத்தை அளிப்பவன் முக்திப்ரதனான திருமாலே என்கிறார்.*

## குணங்களுக்குச் கொள்கலம், தாழ்வுகள் அற்றவன்:

தாழ்வுகள் எதுவும் இல்லாதவனாய் நற்குணங்கள் அனைத்துக்கும் இருப்பிடமாயுள்ளவனே பரம்பொருள் என்று வேதவேதாந்தங்கள் ப்ரம்மஸூத்திரங்கள் அறுதியிடும் பெருமை திருமாலுக்கே உரியது என்று "***நின் ஒக்கும் புகழ் நிழலவை***" 13ம் பரிபாடலில் "***சேவல் ஓங்கு உயர்கொடிச்செல்வ! ஏவல் இன் முதுமொழி கூறும் நற்பகழவை***" (கருடனாகிற மிகவும் உயர்ந்த கொடியையுடைய செல்வனே அனாதியான வேதங்கள் ஓதும் நல்ல கல்யாணகுணங்கள் அனைத்தும் உடையவன் நீ) என்று முழுங்குகின்றது. அதையே ஸ்ரீஆண்டாளும்,

"***உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே***" என முழங்கினாள்.

இத்துடன் எம்பெருமான் தாழ்வற்றவன் என்பதை முதற்பாடலில் "***தெருள நின் வரவு அறிதல் மருள் அறு குதர்ச்சி முனைவர்க்கும் அரிதே***" என்று (பரமபதத்திலிருந்து நீ (திருமால்) இவ்வுலகில் வந்து அவதரிப்பதைத் தெளிவாக அறிவது மயக்கமற்ற அறிவை உடைய முனிவர்களுக்கும் அரியதாகும். இத்துடன் அவரின் பல அவதாரங்களையும் பரக்கப் பேசுகின்றது இதையே ஆண்டாள்,

"***ஓங்கி உலகளந்த உத்தமன்***", "***புள்ளின்வாய்கீண்டானை பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை***", "***சீரிய சிங்கம்***"

என்று, இன்னும் பல பாட்டுகளிலும் பகவானின் அவதாரங்களைப்பாடி அவனுடைய செப்பம், திறல், புகழ், குணம், முதலியவற்றைப் போற்றுகிறார்.

## எவராலும் அளவிட்டு அறியமுடியாத அப்ரமேயன்:

முதற்பரிபாடலில் "***அன்ன மரபின் அனையோய்! நின்னை இன்னன் என்று உரைத்தல் எனக்கு எவன் எளிது?***" (உன்னை இப்படிப்பட்டவன் என்று உரைப்பது சிற்றறிவாளர்களான எமக்கு எப்படி எளிதாகும்?) இதை ஆண்டாள்

"***மாயன்***", "***மாமாயன்***" என்று 5,9,16 பாசுரங்களிலும்
"***பெரியாய்***" 21ஆம் பாசுரத்தில் என்று பாடி இதைக் காட்டினாள்
"***ஆர்க்கும் எய்தாது***" என்று நாச்சியார் திருமொழியிலும் விவரித்தாள்.

## தேவர்களனைவர்க்கும் ஆதிதேவனான தேவாதிதேவன்:

3ஆம் பரிபாடலில் "***ஞாலத்து உறையுள் தேவரும் வானத்து நாலு எண்தேவரும் நயந்து - நிற்பாடுவோர்***" என்று முப்பது முக்கோடி தேவர்களும் திருமாலை விரும்பிப் பாடுவார்கள் என்று கடுவன் இளவெயினனார் அறுதியிடுகிறார். இதையே ஆண்டாள்,

" ***தேவாதிதேவனை*** " (8) " ***முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று கப்பம்தவிர்க்கும் கலியே*** " (20) என்று இவ்வர்த்தத்தைப் பாடினாள்.

## உயிர்களுக்கெல்லாம் இயற்கை உறவினன்:

3ம் பரிபாடலில் " ***அமரர்க்கும் முதல்வன் நீ, அவுணர்க்கும் முதல்வன் நீ*** ", என்று தேவர்க்கும் அசுரர்க்கும் பொதுவான முதல்வனாயிருப்பவன் திருமால் என்று கூறிவிட்டு. அதனால், " ***பகைவர் இவர் நட்டோர் என்னும் வகையும் உண்டோ நின் மரபு அறிவோர்க்கே*** " (ஆகையால் இவர்கள் எதிரிகள் நண்பர்கள் என்னும் பாகுபாடு திருமாலாகிற உன் இயற்கை உறவை அறிந்தவர்களுக்குக் கிடையாது) என்று முழங்கப்பட்டது. இதை ஸ்ரீஆண்டாள்.

" ***உன்றன்னோடு உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது*** " (28)
" ***எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம்*** " (29) என்று முழங்குகிறார்.

## மறைகளில் முழுமுதல்வனாக முழங்கப்படுபவன்:

முற் கூறிய இந்த 9 தன்மைகளையும் கொண்டு வேதங்கள் எவனைப் பரம் பொருள் என்று அறுதியிடுகின்றனவோ, அவனே மெய்யான பரம்பொருளாயிருக்கமுடியும். அந்த வேதங்கள் எவராலும் படைக்க படாதவை; அதனால் " ***முதுமொழி, தொல்லியல்*** " எனப்படுகிறது.

" ***நின் வலவயின் நிறுத்தும் ஏவல் உழந்தமை கூறும் நா வல் அந்தணர் அருமறைப் பொருளே*** " என்று இப்பெருமைகளை எல்லாம் கூறி எல்லா உலகும் உன்னுடைய ஏவலுக்கும் பணிந்து நிற்கின்றமையை நாவன்மையையுடைய அந்தணர் ஓதும் அரிய மறையாகிற பொருள் கூறும் என்றும் வாய்மொழிப் புலவ (வாய்மொழியாகிற வேதத்திலே புலப்படுகிறவனே) என்று கூறுவதன் மூலம் உணர்த்தப்பட்டது.

இதையே ஆண்டாள்,

" ***ஊற்றமுடையாய்*** " என்று கண்ணன் உறுதியானப்ராமாணமான வேதங்களால் சொல்லப்படுபவன் எனக் காட்டி " ***பழகு நான்மறையின் பொருளாய்*** " (நா.திரு. 4-10) " ***வேதமுதல்வர்*** " (10.2 நா.திரு) " ***நான்மறையின் பொருளாய் நின்றார்.*** " (11.6 நா.தி.) என இதை விரித்தாள். திருமொழியில் விஷ்ணுபரத்துவத்தை விரித்திருக்கு மிடங்கள் மேலும் பலவும் உண்டு.

மேலே சொல்லப்பட்ட ஒப்புமைகளின் மூலம் சங்கத்தமிழ் நூல்களில் விஷ்ணுபரத்வம் நிலைநாட்டப்பெற்றிருப்பது போலே கோதையாலும் திருப்பாவையில் நிலை நாட்டப்பெற்றிருப்பதால். சங்கத் தமிழ் மாலை என்னும் தொடர் திருப்பாவைக்கும் மிகப் பொருந்தும் எனக் காட்டினோம்.

மொழியிலே இனிதான தமிழ் மொழி அன்றைய காலக்கட்டத்தில் மிகவும் ஆழ்ந்த பொருள்கள் உள்ளடக்கிய, இலக்கண இலக்கியங்களை உள்ளடக்கிய, தேர்ந்த மொழிப்புலவர்கள் கூட்டம் அமைத்த, சங்கத் தமிழ் கூட மானிடர்களுக்கு புரியாத அளவு ஒரு கடுமையாக மொழியானது. ஒருகாலக்கட்டத்தில் எப்படி தேவபாஷையான சமஸ்க்ருதம் பாமரர்களுக்கு புரியாத பாஷையானதோ அதே போல சங்ககாலத்தமிழ் தற்காலத்தில் ஒரு புரியாத பாஷை தான். இது காலத்தால் ஏற்பட்ட வினோதம். தீர்க்கதரிசியும் தாயாருமான ஸ்ரீஆண்டாள் எக்காலத்தவருக்கும் புரியும் வகையிலும், சங்ககாலத்தமிழரின் உட்கிடக்கைக்கு மாறுபடாமலும் அதே சமயத்தில் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முறையில் எளிய தமிழில் மிக ஆச்சர்யமான சங்கத்தமிழ்மாலையை நமக்கு அருளிச்செய்து அனுக்ரஹித்தது மட்டும் அல்லாமல் எந்த ஒரு பாஷையும் எந்த உயிரினங்களுக்காக சொல்லப்பட்டதோ. அது அவர்களை சென்று அடையவேண்டும். அப்போதுதான் அது தாய் மொழியாகும். அந்நிலையிலும் ஏற்றும் பெற்ற இக்கோதை தமிழ் சங்கத்தமிழைக் காட்டிலும் ஏற்றம் பெற்றது என்பதைச் சொல்லவும் வேணுமோ! இதுவே ஆய்வாளரின் கருத்துமாகும்.

*******




ஸ்ரீக்ருஷ்ண சரம ஸ்லோகம்

"சர்வதர்மான் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ
அஹம் ...... மாசுச:"

# கோதையின் கீதமும் - கோவிந்தன் கீதமும்

## திருப்பாவை : பகவத்கீதை

### கீதாசாஸ்திரம்

வடமதுரை என்னும் திவ்ய தேசத்தில் வசுதேவ, தேவகி புத்திரனாய் நம் நன்மையை திருவுள்ளம் பற்றியே ஸ்ரீகிருஷ்ணன் திருவவதாரம் செய்தருளினார். அவரே கோக்களையும் கோபிமாரையும், கோபாலர்களையும் ரக்ஷித்து கோவிந்த பட்டாபிஷேகம் செய்து கொண்டு கோவிந்தன் என்னும் திருநாமத்துடன் விளங்கா நின்றார். அந்த கோவிந்தனே அர்ஜுனனை வ்யாஜமாகக் கொண்டு இவ்வுலகம் உய்வு பெற ***"கீதோபதேசம்"*** செய்தனன்.

அர்ஜுனன் கோவிந்தன் திருவடிகளைச் சரணம் பற்றி நன்மையைத் தரும் தருமத்தைத் தனக்கு உபதேசிக்க வேணும் என்று வேண்ட, அவன் வேண்டுகோளுக்கிணங்கி, **"நத்வே வாஹம்"** என்று தொடங்கி **"ஸர்வ தர்மான்"** என்னும் சுலோகம் வரையும் உள்ள கீதாசாஸ்திரத்தை உலகு உய்வு பெற, உபதேசித்தான்.

சகல வேதாந்த சாஸ்த்திரங்களிலும் ஸாரமாகச் சொல்வது தத்வம், ஹிதம், புருஷார்த்தமேயாம். இதையே ஸ்ரீக்ருஷ்ணன் கீதையிலும், ஆண்டாள் திருப்பாவையிலும் அருளிச் செய்திருக்கிறார்கள். இந்த இரண்டிலும் கீதையைக் காட்டிலும் திருப்பாவையே மேம்பட்டது என்பதை ஒருவாறு நாம் கீழே காணலாம்.

### பகவத் கீதை

இது 750 சுலோகங்கள் கொண்டது; பாஷா ஞானம் பெற்றவர்களுக்கே பொருள் சுலபமாக விளங்காத ஸமஸ்க்ருத பாஷையில் அமையப்பெற்றது. சொன்னவனின் உள்ளக் கருத்தை முழுமையாக அறிந்து கொள்ள இயலாதது.

மேலும் இது தத்வமாயிருக்கும். க்ருஷ்ணனே தன் வாயால் மொழிந்ததால் இது தத்வ வசனம் - இதைச் செய், அதைச் செய் என்று கட்டளையிடுவதால் - விதிரூபமானது இதைக் கேட்ட அர்ஜுனனுக்கே இது பயன் பட்டதெனச் சொல்ல இயலாது. (க்ருஷ்ணனே ***"உனக்குப் போய்ச் சொன்னேனே"*** என்று பின்னால் வருத்தப்படுகிறார்.)

### பிராட்டியின் கீதை

இது முப்பது பாட்டுக்கள் கொண்ட (தாய்மொழி, குழந்தைக்கு எப்படிச் சொன்னால் புரியுமோ, அப்படிச் சொல்லப்பட்டது). எளிய தமிழில் பாமரனும் சுலபமாகக் கற்று அறியும் படியிருக்கும்.

இது தத்துவதரிசி வசனம் அனுஷ்டானரூபமானது. தத்வத்தைக் காட்டிலும் தத்வதரிசி வசனத்திற்கு ஏற்றமதிகம், மேலும் பிராட்டி தான் சொன்னதை தானே அனுஷ்டித்தும் காட்டியவள். இதன் பலனோ, இதன் சம்பந்தம் பெற்றவர்கள் எல்லோரும் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் என்று சொல்லப்பட்டுள்ளது. ஆகவே, கீதையைவிட திருப்பாவை மேம்பட்டதாயிற்று. மேலும் தத்வம், ஹிதம், புருஷார்த்தம் இவற்றை ஆண்டாள் திருப்பாவையில் எப்படி பரிஷ்கரித்து பேசியிருக்கிறார் என்பதைப் பார்ப்போம்.

இதில் கண்ணனின் கீதையும் அதற்கு ஒத்த ஆண்டாளின் திருப்பாவையும் காட்டப்படுகிறது. கண்ணன் கீதையில் கொண்டாடிய காலத்தையே தானும் கொண்டாடியபடியை முந்துற முன்னம் அறிவிக்கிறார்.

காலம்:

(கீதை) அ. ***"மாஸாநாம் மார்க்க சீர்ஷோ ஹம்"*** 10.35

☆ "மாதங்களில் நான் மார்கழி மாதமாய் இருக்கிறேன்" என்கிறார் கண்ணனன்.

(திருப்பாவை) ஆ. ***"மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னனாளால்....***
***நந்த கோபன் குமரன் ....... யசோதை***
***இளஞ்சிங்கம்..."***

☆ என்று கண்ணனின் அவ்வார்த்தைக்கிணங்க தான் மார்கழி மாதத்தில் நோன்பைத் துவங்குவதாக அறிவித்து, தான் ஆசிரயித்த தெய்வம் கண்ணன் என்பதைத் தெரிவிக்கிறாள்.

அ. ***"நஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்ட்டத் யகர்மக்ருத்***
***கார்யதே ஹ்யவச: கர்மஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை:"*** 3.5
***"நேஹாபிக்ரம நாசோ ஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே***
***ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்"***
2.40

☆ கண்ணன், "சரீரம் பெற்ற ஜீவன் ஒரு க்ஷணமும் வெறுமனே இருக்கமுடியாது என்றும், ஒரு பலனையும் இச்சியாமல் செய்யப்படும் கர்மயோகம் வீணாவதில்லை என்றும், அது பெரிய சம்ஸாரக் கடலை தாண்டுவிக்கிறது" என்கிறான் கீதையில்.

ஆ. ***"செய்யும் கிரிசைகள்....பரமனடி பாடி...***
***உய்யுமாறு எண்ணி உகந்து"*** - என்று

☆ நோன்பிற்கு நாம் செய்யும் கிரிசைகளும், தானங்களும், இவைகளை பகவத் கைங்கர்யமாய் உகந்து செய்தால் இவைகளை நம்மை இச்சம்சார கடலை தாண்டுவிக்கும் என்று 2ஆம் பாசுரத்தில் அறிவிக்கிறார்

திருநாமஸங்கீர்த்தனம்:

அ. ***"ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதா:*** 9.14
***நமஸ் யந்தச்ச மாம் பக்தயா நித்யயுக்தா உபாஸதே"***

☆ என் பக்தர்கள் என்னை அன்புடன் கீர்த்தனம் செய்து கொண்டும், திடமான நிலைபெற்ற மனத்துடன் பக்திசெய்தும் என்னை சேவிக்கிறார்கள். (வீணையிசையோடு இப்படியே நாரதர், நம்பாடுவான் திருப்பாணாழ்வார். முதலானோர் திருநாம சங்கீர்த்தனம் செய்து ஆத்மஸ்ரேயஸைப் பெற்றிருக்கிறார்கள்) என்கிறான் கீதையில் பகவான்.

ஆ. ***"வாயினால்பாடி, உத்தமன் பேர் பாடி, கேசவனைப்பாடி"***

☆ என்று திருநாமசங்கீர்த்தனத்தாலேதான் ஒரு ஜீவாத்மாவானது உஜ்ஜீவிக்கும் என்கிறார் ஆண்டாள்.

அவதார ரஹஸ்யம்:

அ. ***"பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்தயா ப்ரயச்சதி***
***ததஹம் பக்த்யுபஹ்ருத - மச்னாமி ப்ரயதாத்மன:"*** 9.26
***"ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:***
***த்யக்த்வா தேஹம் புனர் ஜன்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந"***4.9

☆ யாரொருவன் திவ்யமான என் பிறவியையும், சேஷ்டிதங்களையும் (அவதார ரஹஸ்யம்) அதாவதுக ர் ம ம டி ய ா க வந்ததல்ல (க்ருபாகார்யம்) என் இச்சையால் வந்தது என்பதை உள்ளபடி உணருகிறானோ, அவன் இங்கு திரும்பி வராமல் மோக்ஷத்தை அடைகிறான்.

☆ யாரொருவன் ஒரு ப்ரயோஜனத்தையும் கருதாது என்னிடம் பக்தியுடன் பச்சிலையோ (துளசி) புஷ்பமோ, தீர்த்தமோ, பழமோ எனக்கு அர்ப்பணிக்கிறானோ, அதை நான் மிகப்பிரியத்துடன் ஏற்கிறேன் என்று கண்ணன் கூறியதையே, ஆண்டாள்

ஆ. ***"மாயனை மன்னு வடமதுரை மைந்தனை ..... தூ யோமாய்***
***வந்துநாம் தூ மலர் தூவித்தொழுது வாயினால் பாடி***
***மனத்தினால் சிந்திக்க போய பிழையும் புகுதருவான்***
***நின்றனவும் தீயினில் தூ சாகும்"*** என்கிறார்.

☆ மாயனான, ஸ்ரீக்ருஷ்ணனை நாம் மனது ஒருமித்து அவனுடைய திருநாமங்களைப் பாடியும், நற்புஷ்பங்களால் அர்ச்சித்தும் தொழுவோமானால் நம்முடைய ப்ராரப்த், ஸஞ்சித பாபங்கள் நெருப்பிலிட்ட பஞ்சுபோல் பறந்தொழிந்து போகும் என்கிறார் ஆண்டாள் 5ஆம் பாசுரத்திலே.

அர்ச்சையின் விசேஷம்:

அ. "***யே யதா மாம் .... ஸர்வச:***"4.11

☆ யாவனொருவன் என்னை எந்த ரூபத்தில் அர்ச்சிக்கிறானோ அதில் நான் என் அனைத்து கல்யாண குணங்களுடனும் என்னை காட்டுகிறேன் என்றதையே, ஆண்டாளும்

ஆ. "*புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயில்*".
"*கோயில் காப்பானே கொடித் தோன்றும் தோரண வாசல் காப்பானே*" என்று பகவானை பற்றுவதற்கு

☆ தேச, கால, அதிகாரி நியதியில்லை ருசியே வேண்டுவது ஆனால் குணபூர்த்தியுள்ள இடமான அர்ச்சையில் தான் நாம் பகவானைப் பற்ற வேண்டும் என்கிறார்.

சேஷத்வம்

ஆ. "*தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாம் அநுஸ்மர யுத்ய ச*" 8.7
"*மந்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மானம் மத்பராயண:*" 9.34

☆ நீ இருக்கும் நாளில் என்னை நினைத்துக் கொண்டே உன் வர்ணாச்ரம தர்மங்களைச் செய், என்னிடம் உன் மனத்தை வை. என்னை (பஜனம்) பக்தி செய்து என்னை கதியாகப் பற்று. இப்படிச் செய்வாயானால் நீ என்னை அடையலாம்.

ஆ. "*தூ மலர் தூ வித்தொழுது ..... சிந்திக்க*"; "*காசும் பிறப்பும்... தயிரரவம் கேட்டிலையோ நாயகப் பெண்பிள்ளாய் ...*"; "*தேசமுடையாய்*" என்று,

☆ நீ ப்கவானுக்கு சேஷப்பட்டவன் என்கிற சேஷத்வ புத்தியோடு செய்ய வேணும் என்கிறார். நம்நாட்டில் உத்தமப் பெண்கள் தங்கள் வீட்டின் வேலைகளை பகவன் நாமாவை பாடிக் கொண்டே செய்வார்கள் கோபிகைகள் தங்கள் ஜாதிக்குரிய தயிர் கடைதலாகிய கர்மாவைப் பகவானுடைய நாமாக்களைப் பாடிக் கொண்டே செய்கிறார்கள் என்பதை, கீதையின் பொருளைக் கொண்டு ஆண்டாள் சிக்ஷித்துக் காட்டுகிறார்.

பாரதந்த்ரியம்:

ஆ. "*ப்ரியோஹி ஜ்ஞானி னோத்யர்த்த மஹம் ஸச மம ப்ரிய:*" 7.17
"*பத்ரம் பலம் புஷ்பம் .. ப்ரயதாத்மன:*" 9.26

☆ ஜீவனின் ஸ்வரூபம் அணுவாக இருந்தாலும் ஜ்ஞானிக்கு பகவானிடம் உள்ள அன்பு விபுவாக இருக்கும், பகவானுக்கும் ஜ்ஞானியிடத்தில் அப்படியே, அவன் ப்ரீதியுடன் அர்ப்பிப்பதை நான் த்ருப்தியாக ஸ்வீகரிக்கிறேன் என்கிறார் பகவான்.

ஆ. "*தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால் ஆவாவென்றா ராய்ந்தருளுவான்*"

☆ பகவானை நாம் சேஷத்வ புத்தியோடு கூட ப்ரீதியுடனும், வெறும் அறிவோடு நில்லாமல் செயல் வரையிலும் பற்றவேணும்.

சேஷத்வத்தோடு கூடிய பாரதந்தர்யமே மேலானது:

அ. "*தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா*
*மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா மேதாம் தரந்தி தே*" 7.14

☆ ஸத்வ ரஜஸ் தமோ குணங்களோடு கூடியது இந்த ப்ரக்ருதி. இதற்கு மாயை என்று பெயர் தெய்வசக்தி வாய்ந்த இதை யாராலும் தாண்ட முடியாது எவர்கள் என்னையே சரணடைகிறார்களோ அவர்களை நான் இந்த மாயையிலிருந்து தாண்டுவிக்கிறேன்.

ஆ. "*மாமாயன் மாதவன் வைகுந்தன்*"

☆ என்று, இவனை சரணம் பற்ற நம் பாபத்தைக் கண்டு அஞ்ச வேண்டா, ஸர்வக்ஞ ஸர்வசக்தி படைத்த பரமபதநாதனான அவனிடத்தில் நாம் அவன் அடிமை என்பது தோற்ற அவனைச் சரணடைந்து அவன் உகக்கும் படி கைங்கர்யம் செய்வோம் என்கிறார்.

சித்த தர்மம்:

அ. "*மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம்*
*கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச*" 10.9

☆ என்னிடம் மனதையும், ப்ராணனையும் வைத்திருக்கும் என் பக்தர்கள் என்னைப் பிரிந்திருக்கையில் என் குணசேஷ்டிதங்களை ஒருவருக்கொருவர் சொல்லியும், கேட்டும், கீர்த்தனம் செய்தும் ஆனந்தித்திருப்பர்.

ஆ. "*மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்*"

☆ என்று, நோற்றுசுவர்க்கம் பாசுரத்தில் அருளுகிறார். (க்ருஷ்ணானுபவத்தை நீ மட்டும் அனுபவித்து படுத்திராமல் எங்களுடன் கூடி அனுபவி என்கிறார்). நோற்று, பகவானே நமக்கு ரக்ஷகன் என்று அவனைப் போற்றி பற்றினால் புண்ணியனான - சித்த தர்மமான அவனே நமக்கு பறை தருவான் - நமக்கு அநிஷ்ட நிவ்ருத்தி செய்து இஷ்டப்ராப்தியைக் கொடுப்பான்.

கர்மா செய்தல்:

அ. "*யஜ்ஞார்த்தாத் கர்மணோऽன்யத்ர லோகோऽயம் கர்மபந்தன:*
*ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர*" 3.9

☆ யஞ்ஞத்திற்காக அதாவது பகவதர்பணமாக உள்ள கருமத்தினின்று விலகிய விடத்தில் தான் இந்த உலகம் கருமக்கட்டுண்டது - அர்ஜுனா! யஞ்ஞத்தின் பொருட்டு பற்றற்றவனாய் கருமத்தைச் செவ்வனே செய்.

ஆ. "*கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து செற்றார் திறலழியச்*
*சென்று செறுச் செய்யும் குற்றமொன்றில்லாத கோவலர்*"

☆ பகவானைச் சரணம் பற்றி தன் பரத்தை அவனிடம்

சமர்ப்பித்தவன் தன் ஆத்மக்ஷேமத்திற்காக ஒன்றும் செய்வதற்கில்லை. மார்பில் கை வைத்து நிர்ப்பரனாய்த் தூங்கலாம். ஆனால் இருக்கும் நாளில் தன் வர்ணாச்ரம தர்மத்திற்குச் சேர கர்மாவைச் செய்தாகவேண்டும். ஒரு பலனையும் இச்சியாமல் கர்மாவை விதி மூலம் செய்யாமல் ப்ரீதி மூலம் செய்ய வேண்டும். (இதுவே குற்றமொன்றில்லாத கர்மா என்கிறார்.)

தானம் செய்தல்:

அ. "***தாதவ்ய- மிதி யத்தானம் தீயதேsனுபகாரிணே!***
***தேசே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம்....***"17.20

☆ நல்ல புண்ய க்ஷேத்ரத்தில் புண்ய காலத்தில் நல்ல ஸத்பாத்திரத்தில் ஒரு பலனையும் இச்சியாமல் செய்யும் தானமே ஸாத்விக தானம் எனப்படும்.

ஆ. "***ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி***"யிலும்,
"***அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும் எம்பெருமான்***" 17ஆம் பாசுரத்திலும்,

☆ பாகவதர்களுக்குக் கொடுப்பது ஐயம். ப்ரஹ்மசாரிகளுக்கும், சந்யாசிகளுக்கும் கொடுப்பது பிச்சை. இவைகளை ஒரு பலனையும் இச்சியாமல் உகந்து பகவத் கைங்கர்யமாய் செய்ய வேணும் என்கிறார்.

எதையும் பகவதர்ப்பணமாகச் செய்தல்:

அ. "***யத் கரோஷி யதச்னாஸி யஜ்ஜுஹோஷி ததாஸியத்***
***யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம்....***" 9.27

☆ எந்த லௌகிக கர்மாவையோ, வைதிக கர்மாவையோ செய்தாலும், அதை எனக்கு அர்ப்பணம் செய்.

ஆ. "***குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி***" என்று

☆ 24ஆம் பாசுரத்தில் பகவதாக்ஞா கைங்கர்யமாய் செய்யாமல் இந்திரன் ஸ்வதந்த்ரனாய் இருந்த அவன் குறையை நீக்கி ஸர்வம் க்ருஷ்ணார்ப்பணம் என்பதை உணர்த்திய அந்த சீல குணத்தைப் போற்றுகிறார்.

பகவானிடத்தில் ஞானியின் அன்பு அபரிச்சின்னம்:

அ. "***தேஷாம் ஜ்ஞானீ நித்ய யுக்த ஏகபக்திர் விசிஷ்யதே***
***ப்ரியோ ஹி ஜ்ஞானினோத் யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:***" 7.17

☆ நான் ஞானிகளுக்கு மிக உயர்ந்த பிரியன், ஞானியும் எனக்குப் பிரியன்.

ஆ. "***மாலே மணிவண்ணா,.... ஆலினிலையாய் அருள்***"

☆ உன்னிடம் நாங்கள் எத்தனை அன்பு வைத்திருக்கிறோமோ அதேபோல் அத்தனை அன்பை நீ எங்களிடம் வைத்திருப்பதை உன் கண்களிலே பார்க்கிறேன் '**மாலே**', என்று அன்பு தொனிக்க அழைக்கிறார், மேலும் உன் அகடிதகடனா சாமர்த்தியம் அனைத்தும் தெரியும் என்கிறார். ஞானிகளுக்கு பகவான் தன்னை முற்றவும் காண்பிப்பான் என்று அருளுகிறார்.

அ. "***ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ!***
***அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:***"18.66

☆ கீழே சொன்ன எல்லா தர்மங்களையும் விட்டு என் ஒருவனையே சரணாகப் பற்று நான் உன் பாபங்களை எல்லாம் போக்கி மோக்ஷத்தைத் தருகிறேன் கவலைப்படாதே என்கிறார்.

ஆ. "***நாராயணனே (மாம் ஏகம்) நமக்கே பறைதருவான்***"
***(அஹம் த்வா)*** "***உன்தன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம் மற்றை நங்காமங்கள் மாற்று, இறைவா நீ தாராய்***", என்பதன்மூலம்

☆ நாராயணான உன்னையே சரணடைந்து உனக்கே நாங்கள் கைங்கர்யம் செய்ய விரும்புகிறோம். உன் முகமலர்ச்சிக்குச் செய்யும் கைங்கர்யத்தில் எங்களுக்கு காமம் கலப்பதான அந்த தோஷத்தையும் கழித்து உன் கைங்கர்யத்தை நீயே எங்களுக்குக் கொடுக்க வேண்டும் என்கிறார்.

இப்படியாக பகவான் கீதையில் அருளியதை ஆண்டாள் அப்படியே அருளி அதற்கு மேல் அநுஷ்டித்தும் காண்பித்து ஸாதன பக்தியாய் இல்லாமல் ஸாத்ய பக்தியாய் உபதேசிப்பதால் கோவிந்தன் கீதத்தைவிட கோதையின் கீதம் தன்னேற்றம் பெற்றது என்பதை தாஸ்ய ஸ்வரூபத்தோடு நிரூபித்தார்.

## தத்வம், ஹிதம், புருஷார்த்தம்

கீதையில்:

"***மத்த: பரதரம் நான்யத் கிஞ்சித் அஸ்தி தனஞ்சய***" இத்யாதி பல சுலோகங்களில் கண்ணன் தானே மேலான தத்வம், தனக்கு ஒத்தாரும் மிக்காரும் இல்லை என்று தத்வத்தையும்; "***ஆப்ரஹ்ம்மபுவனாத் லோகா:***" என்றும் மற்றும் பல இடங்களில் மறு பிறவியில்லாத மோக்ஷமே மேலான பலன் என்று புருஷார்த்தத்தையும்: "***மாமேவ யே ப்ரபத்யந்தே; மந்மனா பவ மத்பக்த:, மாமேகம் சரணம் வ்ரஜ***" இப்படி பல சுலோகங்களில் மோக்ஷ பலனைப் பெற பகவானிடம் செய்யும் பக்தி, ப்ரபத்தியே உபாயம் என்று ஹிதத்தையும் அருளிச்செய்கிறார். பகவான் ஸ்ரீக்ருஷ்ணன்.

திருப்பாவையில் :

தேவாதி தேவன் - மனிதர்க்கு தேவன் போல தேவருக்கும் தேவனான உத்க்ருஷ்ட தத்வம் ***பரமன், உத்தமன், மாதவன் (ஸ்ரீய:பதி), வைகுந்தன்*** என்று இப்படி அவனுடைய நாமங்களால் தத்வத்தையும்;

கர்ம, ஞான, பக்தி, ப்ரபத்திகளெல்லாம் நம் ஸ்வரூபத்திற்குச் சேரச் செய்ய வேண்டியவைகளேயாகிலும், பலனளிப்பவன் சித்த தர்மமான இறைவன், நாராயணனே என்பதை '***நாராயணனே நமக்கே பறை தருவான்***', '***இறைவா நீ தாராய் பறை***' என்று (உபாயத்தை) ஹிதத்தையும்;

"***எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்***"- ஸர்வதேச ஸர்வகால, ஸர்வாவஸ்தையிலும் பகவானை விட்டுப் பிரியாமலிருந்து அவன் உகப்புக்காகவே தொண்டு செய்வதே மேலான பலன், என்று புருஷார்த் தத்தையும் அருளிச் செய்கிறார் ஸ்ரீஆண்டாள்.

இப்படித் திருப்பாவையில் க்ரியா விசேஷங்களான கர்ம, ஞான, பக்தி, ப்ரபத்தியை மோக்ஷோபாயமாகச் சொல்லாமல் சித்ததர்மமான பகவானே உபாயம், பரமபதமான மோக்ஷம் பலன் என்று சொல்லாமல் பகவான் எங்கு எவ்வுருவத்திலிருந்தாலும் அவனுடன் கூடியிருந்து அவனுக்குத் தொண்டு (கைங்கர்யம்) செய்வதே புருஷார்த்தம் என்று பரிஷ்கரித்துச் சொல்லிய ஆண்டாளின் திருப்பாவை, கீதையில் சொல்லப்பட்ட விஷயங்களை பரிஷ்கரித்து தெளிவாக தெள்ளிய தமிழில் 30 பாட்டுக்களில் அனுஷ்டான ரூபமாய் சொல்லியிருக்கிறபடியால் இது கண்ணன் கீதையைக் காட்டிலும் சிறந்தது என்று காட்டப்பட்டது.

*******

## இனி வேதமும் - வேதமனைத்திற்கும் வித்தான திருப்பாவையும்

வேதத்தில் சொல்லப் பட்ட விஷயங்கள் திருப்பாவையில் எப்படி விளக்கப்படுகின்றன என்று ஆராயப்படுகிறது

1. வேதம்: "***இதம் விஷ்ணுர் வி சக்ரமே த்ரேதா நிததே பதம்***"- ரிக்வேதம்
(ஸ்ரீவிஷ்ணு இவ்வுலகங்களையெல்லாம் மூன்றடியால் அளந்தான்)
"***த்ரீணிபதா வி சக்ரமே விஷ்ணுர் கோபா அதாப்ய:***" - ரிக்வேதம்

☆ யாராலும் வெல்ல முடியாத ஸர்வ ரக்ஷகனான ஸ்ரீ விஷ்ணு மூன்றடியால் இவ்வுலகங்களையெல்லாம் அளந்தான்.

ஆண்டாள்,

***ஓங்கி உலகளந்த உத்தமன்*** என்று 3ம் பாசுரத்திலும்,
***அம்பரமூடறுத்து ஓங்கி உலகந்த உம்பர் கோமான்*** என்று 17லும்,
***அன்றிவ்வுலகம் அளந்தானை அடி போற்றி*** என்று 24ஆம் பாசுரத்திலும்,
இச்செயலை விசேஷித்தருளுகிறார்.

2. வேதம்: "***ஸ காரணம் கரணாதிபாதிப:, ந சாஸ்ய கச்சித்; ஜநிதா ந சாதிப:***" - ஸ்வேதா உபநிஷத்

☆ இவ்வாத்மாவிற்கு அதிபதியமான ஈச்வரனே எல்லாவற்றையும் காரணமாய் நின்று படைக்கும் முதல்வன் அவனை உண்டாக்கியவனும் அவனுக்கு அதிபதியும் யாரும் இல்லை.

இதையே ஆண்டாள்,

***ஊழி முதல்வன், பாழியந் தோளுடை பற்பநாபன்*** என்று 4ஆம் பாசுரத்தில் அருளுகிறார்.

3. வேதம்: "***அஸ்மாந் மாயீ ஸ்ருஜதே விஸ்வமேதத்***" -ஸ்வேதா உபநிஷத்

☆ மாயனான பரம புருஷன் ப்ரபஞ்சம் அனைத்தையும் படைத்தருளுகிறான்

இதையே ஆண்டாள்,

***மாயனை மன்னு வட மதுரை மைந்தனை*** என்று 5ஆம் பாசுரத்திலும்
***மாமாயன் மாதவன் வைகுந்தன்*** என்று 9ஆம் பாசுரத்திலும்
***மாயன் மணிவண்ணன்*** என்று 16ஆம் பாசுரத்திலும் அருளுகிறார்.

4. வேதம்: "***ஸமுத்ரே அந்தம் விச்வ சம்புவம்***"
"***அந்த சமுத்ரே கவயோ வயந்தி***" -தைத்திரீயோ உபநிஷத்

☆ பாற்கடலின் நடுவில் பள்ளி கொண்டவன் அகிலப் பரபஞ்சத்திற்கும் மங்களகரன், அவன் திருபாற்கடலுள் இடமுடையான் என கவிகள் அறிகிறார்கள்.

இதையே ஆண்டாள்,

***பாற் கடலுள் பையத்துயின்ற பரமன்*** என்று 2ஆம் பாசுரத்திலும் ***வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்து*** என்று 6ஆம் பாசுரத்திலும் அருளுகிறார்.

5. வேதம்: "***தத்யதா இஷீ காதூலம் அக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மான:, ப்ரதூயந்தே***" - சாந்தோக்யம்

☆ நெருப்பில்பட்ட பஞ்சு போல் ஸஞ்சித பாபங்கள் அடியோடு அற்றுப் போகின்றன.

"***தத்யதா புஷ்கர பலாஸ ஆபோந ஸ்லிஷ்யந்தே ஏவமேவம்விதி பாபம் கர்ம ந ஸ்லிஷ்யதே***" - சாந்தோக்யம்

☆ ஸ்வரூப ஞானம் பிறந்த பிறகு தாமரை இலையில் நீர் ஒட்டாதது போல பாபகர்மங்கள் இவன்கண் ஒட்டுவதில்லை.
இதை ஆண்டாள்,

***போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்*** என்று 5ஆம் பாசுரத்தில் குறிப்பிடுகிறார்.

6. வேதம்: "***அத யததஃ பரோ திவோ ஜ்யோதிர் தீப்யதே***" - சாந்தோக்யம்

☆ பரம பதத்தில் தோற்றமாய் நின்ற ஒண் சுடர்.

இதையே ஆண்டாள்,

***தோற்றமாய் நின்ற சுடரே*** என்று 21ஆம் பாசுரத்தில் அருளுகிறார்.

7. வேதம்: " ***ஜ்ஞான மாத்மனி மஹதி நியச்சேத் தத் யச்சேத் சாந்த ஆத்மனி*** "-கடோப உபநிஷத்

☆ சேஷனான இவ்வாத்மாவை சேஷியான பரமாத்மாவுக்கே தக்கவனாய் சேர்க்க வேண்டியது.
இதையே ஆண்டாள்,

***பங்கமாய் வந்து நின் பள்ளி கட்டிற்கீழே சங்கமிருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம்*** என்று 22ஆம் பாசுரத்தில் அருள்கிறார்.

8. வேதம்: " ***அந்த ப்ரவிஷ்டஃ சாஸ்தாஜனனாம் ஸர்வாத்மா***"-ஸ்வேதா

☆ எல்லாப்பொருளிலும் உள் நிறைந்து உயிரனைத்தையும் நியமிப்பவன் எம்பெருமான்.
இதையே ஆண்டாள்,

"***குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி***"- என்று 24ஆம் பாசுரத்தில் அருள்கிறார்.

☆ இவ்விடத்திலே தானே (எம்பெருமான்) அனைத்து உயிரினங்களிடத்திலும் (சேதனா சேதன வாசியற) வ்யாபித்து நியமிப்பவன் என்பதை இந்திரனுக்கு உணர்த்தி அவன் ஸ்வதந்திரனாய் இருந்த அக்குறையை நீக்கி தன்னுடைய ஸர்வ வ்யாபகத்வத்தையும் ஸௌசீல்யத்தையும் ஏக காலத்தில் காண்பித்த அச்சீல குணத்தை கொண்டாடுகிறார்.

9. வேதம்: "***ஸனோ புத்யா சுபயா ஸம்யுநக்து***" - ஸ்வேதா

☆ அவ்வெம்பெருமான் நம்மை நல்லறிவோடு கூட்டுக. (அவனுக்கு ஶேஷமாயிருக்கிற இவ்வாத்மா அநர்த்த படாதபடி பண்ணி இவனுக்கு ஸ்வரூபமான கைங்கர்யங்களைக் கொடுத்து அக்கைங்கர்யமும் ஆத்மா உள்ளவரையில் ஆகும் படி பண்ண வேணும்.) என்று 29ஆம் பாசுரத்தில் அருளுகிறார்.

10. வேதம்: "***தேவஸ்யைஷ: ஸ்வபாவோயம் ஆத்ம காமஸ்ய காஸ் ப்ரு:***"

-மாண்டூக்யம்

☆ அவாப்த ஸமஸ்தகாமனான ஸர்வேஸ்வரனுக்கு அடையப்படாததும், அடைய வேண்டியதும் ஒன்றுமில்லை.

இதையே ஆண்டாள்,

***ஆப்தகாமன்*** என்பதை ***குறை ஒன்றுமில்லாத கோவிந்தா***

என்று 29ஆம் பாசுரத்திலேயே அருளுகிறார்.

மேலே குறிப்பிடப்பட்டதுக்கும் மேல் வேதவாக்கியங்களை ஆண்டாள் சுருக்கமாக திருப்பாவையில்கைக்கொண்டிருக்கிறார். ஒரே வார்த்தையிலேயே அவ்வேதவாக்கியங்களின் அர்த்தம் தொனிக்குமாறு கையாண்டிருக்கிறபடியால் பூர்வர்கள் வேதமனைத்துக்கும் வித்து என்றருளினார்கள் திருப்பாவையை.

மேலும், திருப்பாவையில் எம்பெருமானின் தலையாய கல்யாண குணங்களான

**ஸ்வாமித்வம்** - தலைமை, உடையவனாய் இருக்கும் தன்மை
**ஸௌலப்யம்** - எளிமை, கண்காண நிற்றல்
**ஸௌசீல்யம்** - நீர்மை, புரையறக் கலத்தல்
**வாத்ஸல்யம்** - அன்புடைமை குற்றத்தைக்குணமாக கொள்ளுதல்

ஆகியவற்றை மிகத் தெளிவாகவும், அழகாகவும் எடுத்துக் காட்டியிருக்கிறார் ஸ்ரீ ஆண்டாள்.

இப்படி, இவ்வியலில் (ஒப்பீடு) ஆழ்வார்களிலும், பிராட்டிகளிலும், விஞ்சி நிற்கும் தன்மை, சங்க காலத் தமிழர் - கோதை தமிழ் ; கோதையின் கீதமும் - கோவிந்தனின் கீதமும்; வேதமும் - வேதமனைத்திற்கும் வித்தான கோதை தமிழும், ஆகிய இவ்வனைத்திலும் சங்கத்தமிழ்மாலையான திருப்பாவை சிறப்புற்று விளங்கி நிற்பதோடல்லாமல் - அநுஷ்டான ரூபமாய், கார்யானுகூலமாய் இருக்கும் தன்மையோடு அனைவருக்கும் விளங்கும் வகையில் சுருக்கமாகவும், இனிய தமிழில் முழு அர்த்தங்களையும் தன்னிடையே கொண்டு சீர் பெற்று எக்காலத்திற்கும் ஏற்றதாய் விளங்கும் கோதை தமிழ் நடமாடும் பல்கலைக்கழகமாகும் என்று ஆய்வாளர் கருதுகிறார்.

இனி, அடுத்து வரும் இயலில் ஸ்ரீ ஆண்டாளின் ஸ்வாபதேசக் கருத்தும், விசேஷார்த்தங்களும் ஆய்வுக்கு எடுத்தாளப்படும்.

இயல் - 7

# திருப்பாவை என்னும் சங்கத்தமிழ்மாலை

இவ்வியலில் திருப்பாவையின் மேலெழுந்த கருத்துக்களும்; மேலான கருத்துக்களான ஸ்வாபதேசார்த்தங்களும் (விசேஷார்த்தம்) ஆசார்யர்களுடைய வ்யாக்யானங்களின் துணைகொண்டு ஆராயப்படுகிறது.

நான்கு வேதங்கள், வேதாங்கங்கள், உபாங்கங்களின் சாரங்களை உள்ளடக்கியது திராவிட வேதமென்றும், தமிழ்மறையென்றும் வழங்கப்படும் ஆழ்வார்கள் பதின்மரின் ஈரச்சொற்களான, தமிழ் ப்ரபந்தங்களின் தொகுப்பே **நாலாயிர திவ்ய ப்ரபந்தமாகும்.**

இப்பிரபந்தங்கள் 9ஆம் நூற்றாண்டில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமந் நாதமுனிகள் என்னும் பரமாசார்யர் மூலம், நாலாயிர திவ்யப்ரபந்தம் இவ்வுலகிற்குக் கிட்டியது. அவர் நம்மாழ்வாரை யோக நிஷ்டையில் கண்ணி நுண் சிவத்தாம்பின் துணை கொண்டு ஸேவிக்கப் பெற்று, அவ்வாழ்வாரின் கிருபையாலே 4 ஆயிரம் பாசுரங்களையும் பட்டோலை கொண்டார். இவர் அனுக்ரஹத்தாலே தான் நாம் இன்றளவும் திவ்ய ப்ரபந்தத்தை அநுபவிக்கப் பெற்றிருக்கிறோம்). இவர் முதலாயிரம், இரண்டாமாயிரம் (பெரிய திருமொழி); மூன்றாமாயிரம் இயற்பா; நான்காமாயிரம் திருவாய்மொழி என்று தொகுத்து வழங்கினர். இதில் இயற்பா, இசைப்பா என்று 2 பகுதிகள் உள்ளன. முதலாயிரம், பெரிய திருமொழி, திருவாய்மொழி இவைகள் இசைப்பாவில் அமைக்கப்பட்டுள்ளன.

அதில் ஸ்ரீஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவையும், நாச்சியார் திரு மொழியும் முதலாயிரத்தில் இடம் பெற்றுள்ளன. திருப்பாவை 30 பாசுரங்களைக் கொண்டது. நாச்சியார் திருமொழி 143 பாசுரங்களைக் கொண்டது. இப்பிரபந்தத் தொகுப்பை அப்பாசுரங்களின் அர்த்த விசேஷங்களைக் கொண்டே நாதமுனிகள் தொகுத்திருக்கிறார் என்று பெரியோர் பணிப்பர் (உ.ம்) இப்பிரபந்தத்தில் திருப்பல்லாண்டு முந்துற முன்னம் அமையப் பெற்றுள்ளது .- இதை மணவாள மாமுனிகள் ***வேதத்திற்கு ஓம் என்னும் அதுபோல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய் தான் மங்களமாதலால்*** என்று கூறுவர். வேதம் ஓதும் முன் எப்படி ப்ரணவத்தை உச்சரித்து மங்களமாகத் துவங்கவேண்டுமோ, அதே போல் எப்போது ப்ரபந்தத்தை அநுஸந்தானம் செய்யத் துவங்கினாலும் முதலில் மங்களாசாஸனப் பாசுரமான **திருப்பல்லாண்டை** சேவித்துவிட்டுத் தான் பிறகு மற்றைய பாசுரங்களைத் துவங்குதல் இன்றைக்கும் வழக்கத்திலுள்ளது.

ஸ்ரீஆண்டாள் அருளிச் செய்த சங்கத்தமிழ் மாலையான திருப்பாவை இசைப்பாவில் அமைந்துள்ளது. இப்பாசுரங்களை ஆண்டாள் 3 பிரிவுகளாகப் பிரித்து அமைத்துள்ளார்,

ஒன்றிலிருந்து ஐந்தாவது பாசுரம் வரை உள்ளவை **பாயிரமாக** அமைக்கப்பட்டுள்ளன. இது சீரிய பகுவல்.

6லிருந்து 15 வரை - ஆன்மீகத்தில் விழிப்புணர்வை ஏற்படுத்துதல் (தோழிகளைத்துயிலெழுப்புதல் முகேன அமைத்துள்ளார்).

16லிருந்து 30 வரை- முறையாக (க்ரமேண) பகவானை அடைவது எப்படி? என்று அனைவருக்கும் வழிகாட்டுதல். பிறகு ஆயர் பெண்கள் அனைவரையும் அழைத்துச் சென்று, நந்தகோபனிலிருந்து கிருஷ்ணன் வரையில் எழுப்பிய பிறகு, கிருஷ்ணனிடம் தாங்கள் விரும்பிய பலனை யாசித்துப் பெறுதல்.

ஆண்டாள் திருப்பாவையில் பல சீரிய கருத்துக்களை உள்ளடக்கி மிக எளிய நடையில் அருளிச்செய்து இருக்கிறார். நம்மாழ்வாரின் திருவாய்மொழி வேதசாரங்களை உள்ளடக்கியது ***(திராவிட வேத சாகரம் -ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோப வாங்மயம்)*** என்கிறார்கள், ஆனால் திருப்பாவையை வேதமனைத்திற்கும் வித்து என்கிறார்கள். இதை உற்று நோக்கும் கால், "**திருமந்திரம்**" (ப்ரணவம்) வேதத்தின் சுருக்கம் என்பர். அதை விவரிக்கும் கால் (திருமந்த்ரார்த்தம்) ஆயிரம் சாகைகளைக் கொண்ட வேதம் விரிந்து நிற்கும்; அதுபோல திராவிட வேதத்தின் சுருக்கம் திருப்பாவை ஆகையால் அது வித்தானது. இதை விவரித்தால் திராவிட வேதசாகரமான திருவாய்மொழியின் அர்த்தமும் விரிந்து நிற்கும். திருவாய்மொழியானது வேதத்திற்கு சமானமாய் ஆயிரம் பாசுரங்களை உள்ளடக்கி விரிந்து நிற்கின்றபடியால் பக்தர்களுக்கு அமுதமாயிருந்தாலும் அனுட்டானத்திற்கு சுலபமாய் இல்லாத காரணத்தால் எல்லாப்படியிலும் திருப்பாவையே சிறந்துள்ளது. (தினசரி அனுசந்தானத்திலேயே திருப்பாவை உள்ளது என்கிறபடியால் இதன் ஏற்றத்தை அறிந்து கொள்வது.)

இப்படிப்பட்ட இத்திருப்பாவையை வேதமனைத்திற்கும் வித்து (வித்தென்றால் ஒரு சிறிய விதை) என்றார்கள் நம் பூர்வர்கள். இந்த வித்தென்னும் சிறிய விதையை ஆழ்மனதில் நட்டு ஞானம், பக்தி, வைராக்யம் இவைகளை இட்டு வளர்த்தால் இந்த வித்தானது எத்தனை பெரிய விருக்ஷமாக வளரும் என்பது தெரிய வரும். இப்படி தன் மனங்களிலே வளர்ந்த விருக்ஷத்தில் காய்த்துக் கனிந்த கனிகளோ நம் ஆசார்யர்களின் வ்யாக்யானங்கள். திருப்பாவை 30 பாட்டுக்கள் தான் வித்து என்பதில்லை. திருப்பாவையில் ஒரே ஒரு பாசுரத்தை எடுத்துக் கொண்டாலும் அது எப்படிப் பட்ட வித்து என்பது புரிய வரும். இவ்விடத்தில் யதார்த்தமான வெளி அர்த்தங்களும், விசேஷார்த்தமான ஸ்வாபதேசார்த்தங்களும் கோடிட்டுக் காட்டப் படுகின்றன.



திருப்பாவைத் தனியன்கள்

நீளாதுங்க ஸ்தநகிரி தடிஸுப்த முப்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்த்யம் ஸ்வம் சுருதி ச்தசிரஸ்ஸித்த மத்யாபயந்தீ,
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதாதஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்துபூய: — பராசர பட்டர்

அன்ன வயற்புதுவை யாண்டாள்* அரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை* பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

# ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை

## (சங்கத்தமிழ் மாலை)

### திருப்பாவை என்னும் பெயர் தோற்றம்:-

பாவை - நோன்பு (விரதம்); திருப்பாவை என்பது நோன்பு- (விரதம்) **ஏல்ஓர்எம்பாவாய்.**

மார்கழி மாதம் முழுவதும் பாவைகள் சுனைநீராடி (மார்கழி நீராட்டம்) நோன்பு (விரதம்) இருப்பது பழைய நாள் வழக்கம். இதற்கு தைநீராடல் என்ற பெயரும் உண்டு. (உ.ம்.) புராணகாலங்களிலே காத்யாயனி விரதம் இருந்து ருக்மணிப் பிராட்டி க்ருஷ்ணனை அடைந்த சரிதம்)

கல்யாணம் ஆகாத கன்னிப் பெண்கள் (பாவைகள்) விரதம் இருந்து தம் மனதிற்குப் பிடித்த மணாளனை அடைவது, அல்லது திருமணம் புரிந்து கொள்வது என்பது தொன்றுதொட்டு வரும் வழக்கம். இதைத்தான் இங்கு சொல்கிறாகள்.

### திருப்பாவை நோன்பின் காரணம்:-

இதை ஸ்ரீஆண்டாள் மார்கழி நோன்பு என்றும், பாவை நோன்பு என்றும் கொண்டு, அவர் வழங்கிய இந்நூலுக்கு திருப்பாவை என்று பெயர் சூட்டி இருக்கிறார். மார்கழி நீராட்டத்தை சங்கத்தமிழில் "**தமிழர் தை நீராடல்**" என்று வழங்கின்றனர். இதையே ஆண்டாள், முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டு (மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்) "**பாவை**" என்கிறார்.

இங்கு ஸ்ரீஆண்டாள் உலகம் செழிக்க மாதம் மும்மாரி பெய்யவதற்காக தாங்கள் மார்கழி விரதமான பாவை நோன்பு நோற்பதாக அறிவிக்கிறார். பிறகு தோழிகளை மார்கழி நீராட்டத்திற்கு அழைக்கிறார். இவையனைத்தும் லோகத்தாருக்காகச் செய்கிறார். பரம ஸ்ரீவைஷ்ணவரான பெரியாழ்வாரின் பெண் இப்படி காம்யார்த்தமான கார்யங்களை செய்வரோ! என்னில், மார்கழி நோன்பு என்னும் வியாஜத்தைக் கொண்டு அதிகாலையில் ஸ்ரீக்ருஷ்ணானுபவமும், சாது ஸத்சங்கமும், திருநாமசங்கீர்த்தனமும் செய்து பகவானை லோகத்தாரின் இடையூறுகள் இல்லாமல் அமைதியாக அனுபவிக்க நோன்பு என்னும் வேலிக்கட்டிக் கொள்கிறார். மார்கழி நீராட்டம் என்பது, எம்பெருமானின் தாமரை கண்ணென்னும் தடாகத்திலே நீராடுதலையே குறிக்கும்.

### திருப்பாவையின் அமைப்பு:-

திருப்பாவை, "**நோன்பு நோற்றல்**" என்னும் சொல்லால், பெயர்பெற்ற பாசுரம். இது ஆற்றுப்படை யில் (வழிகாட்டுதல்) அமைந்துள்ளது . இது வெண்டளையால் வந்த, எட்டடி நாற்சீர் ஒருவிகற்பக் கொச்சகக் கலிப்பாவில் அமைக்கப்பட்டுள்ளது.

## இத்திருப்பாவைக்கு வ்யாக்யானங்கள் எழுதிய நம்பூர்வர்கள்:-

**மூவாயிரப்படி** - பெரியவாச்சான் பிள்ளை,
**ஆறாயிரப்படி** - அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்,
**மணிப்ரவாளம்** - பெரிய பரகால ஸ்வாமி,
**ஸ்வாபதேசம்** - சுத்தசத்வம் தொட்டாச்சாரியர் ஸ்வாமி,
வானமாமலை ஜீயர் ஸ்வாமி,

இவர்களுடைய வ்யாக்யானங்களை ஆழ்ந்து படித்தால் இன்னும் பல நுண்ணிய விஷயங்களை கற்று, நுண்ணறிவு பெற்று சிறக்கலாம். ஆண்டாளின் ஆழ்மனதை, இவ்யாக்யானங்களின் துணை கொண்டே புரிந்து கொள்ள இயலும்.

அடியேன் இவ்வாய்வை மேற்கண்ட வ்யாக்யானங்களைப் படித்து, அடியேன் புரிந்துக்கொண்ட அளவில் இவ்வாய்வில் விவரித்துள்ளேன், இதில் ஏதேனும் தவறு இருப்பின் அது அடியேனைச் சேர்ந்தது. குற்றங்களைப் பொறுத்தருளுமாறு ப்ரார்த்திக்கிறேன்.



## ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையின் தனியன்கள்

கீழே கொடுக்கப்பட்ட தனியனை அருளிச் செய்தவர் ஸ்ரீபராசர பட்டர்ஆவர். இந்த மஹான் ஒரு சமயம் தென்னாட்டிலே எழுந்தருளியிருக்க, திருவரங்கனைப் பிரிந்திருந்த வ்யஸனத்தாலே திருவுள்ளம் கலங்கியிருக்கிற தசையிலே திருவுள்ளம் ப்ரஸன்னமாகைக்காக அவர் சிஷ்யர் நஞ்சீயர் பட்டரைப் பார்த்து "ஆழ்வாருக்கும் ஆண்டாளுக்கும் ஒரு ஸ்லோகம் அருளிச் செய்யலாகாதோ" என்ன, உடன் அதிப்ரீதராய் திருப்பாவைக்கு வாக்யார்த்தமாக இத்தனியனை அருளிச் செய்து திருப்தரானார்.

**நீளாதுங்க ஸ்தநகிரி தடீ ஸுப்தம் முத்போத்ய க்ருஷ்ணம்**
**பாரார்த்த்யம் ஸ்வம் ஸ்ருதி ஸத ஸிரஸ்ஸித்தம் அத்யாபயந்தீ**
**ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்யபுங்க்தே**
**கோதாதஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்துபூய:** பராசரபட்டர்

(பொருள்) குலவாயர் கொழுந்தான நப்பின்னைப்பிராட்டியின் திருமார்பின் அடிவாரத்திலே மன்னிக்கிடந்து உறங்கும் அசோதை இளஞ்சிங்கமான கண்ணனை, தன்னால் சூடிக்களையப்பட்ட மாலையாலே பலாத்காரமாய் விலங்கிட்டு அந்த யாதவ சிம்மத்தை உணர்த்தி தன்னுடைய பாரதந்த்ர்யத்தை எந்த ஆண்டாள் அறிவித்து அநுபவிக்கப் பெற்றாளோ அப்படிப்பட்ட ஆண்டாளின் பொருட்டு காலத்துவமுள்ள வரையிலும் இந்த வணக்கமானது ஆயிடுக என்பதாம்.

## ஸ்ரீ உய்யக்கொண்டார் அருளிச் செய்தது

**அன்ன வயற்புதுவை ஆண்டாள்* அரங்கற்குப்**
**பன்னு திருப்பாவை பல்பதியம் - இன்னிசையால்**
**பாடிக் கொடுத்தாள் நற் பாமாலை* பூமாலை**
**சூடிக்கொடுத்தாளைச் சொல்லு.**

(பொருள்) ஹம்ஸங்கள் உலாவிவருகின்ற வயல்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவரித்த ஆண்டாள் என்னும் திருநாமத்தை உடையவளும், ஆராய்ந்து அருளிச் செய்யப்பட்ட திருப்பாவை என்னும் திவ்ய பாசுரங்களை இனிய இசையுடன் பாடி அவற்றை ஸ்ரீரெங்கநாதனுக்கு விலக்ஷணமான பாமாலையாக ஸமர்ப்பித்தவளும், செண்பகம் முதலான உயர்ந்த பூக்களாலாகிய மாலையை முதலில் தான் சூடி பிறகு அதை ரெங்கநாதனுக்கு ஸமர்ப்பித்தவளுமான கோதையை தினமும் அநுஸந்திப்பாயாக.

**சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! - தொல்பாவை***
**பாடி யருளவல்ல பல்வளையாய் - நாடி நீ**
**வேங்கடவற்கு என்னை விதி என்ன இம்மாற்றம்***
**நாங் கடவா வண்ணமே நல்கு.**

(பொருள்) பூமாலையைத் திருக்குழலில் சூடி அதனை எம்பெருமானுக்கு ஸமர்ப்பித்த ஒளிமயமான கொடி போன்றவளே! அநாதியான ஆசாரத்தால் ஸித்தமான நோன்பை திருப்பாவை என்னும் பிரபந்த முகமாகக் கூறி அடியார் திறத்துக்கருணைப் புரிய வல்லவளும், பலவளைகளைக் கையிலணிந்துள்ளவளுமான கோதாய்! நீ மன்மதனை நாடி "நீ என்னை வேங்கடவற்கு வாழ்க்கைப்படுத்த வேணும்" என்று கூறியவற்றை யாருழியுமாறு அருள்புரிவாயாக.

1ஆம் பாசுரம் **மார்கழித் திங்கள்**

முதல் பாசுரத்திலே, ஸ்ரீஆண்டாள், ஆயர்பாடிச்சிறுமியர்களே! ஸ்ரீமந்நாராயணனாகிய ஸ்ரீக்ருஷ்ணனே நமது நோன்புக்கு வேண்டியவற்றைத் தருவான்; அது மட்டும் அன்று. நமக்கு வேண்டிய அனைத்தையும் தர சித்தமாயிருக்கிறான். அக்கண்ணனைப் பெறத்தக்க வகையில் நமக்கு நல்ல நாளும் அமையப் பெற்றதே! என்ற வகையில் காலத்தைக் கொண்டாடி, இத்திருப்பாவையில் சொல்லப்போகிற ப்ராப்ய, ப்ராபகங்களை முந்துற முன்னம் சுருக்கமாய்ச் சொல்லுகிறார்.



*பௌளி ராகம்-ஆதிதாளம்*

*மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்*
    நீராடப் போதுவீர் போதுமினோ, நேரிழையீர்*
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்*
    கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்*
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்*
    கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்*
நாரா யணனே நமக்கே பறைதருவான்*
    பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய். (1)

ஜகத் குருவான ஸ்ரீக்ருஷ்ணன், "**மாஸானாம் மார்க்க சீருஷம்**" "**மாதங்களில் நான் மார்கழி மாதமாய் இருக்கின்றேன்**" என்கின்றான் கீதையில். நாமோ ஸ்ரீக்ருஷ்ணனை அடைய (அவனிடம் பக்தி கொள்ள) இந்த நோன்பு நோற்கிறோம் ஆகையால் அவன் விரும்பும் மார்கழி மாதமே நமக்கு உகந்தது. **மார்கழி......போதுமினோ!** மார்கழி மாதம், சுக்ல பக்ஷம், சந்திரன் பூரணமாக ப்ரகாசிக்கும் நாள், சிற்றஞ் சிறுகாலை நேரம். (காலை நேரம் பகவத் அனுபவம் பண்ண ஏற்ற நேரம். அதுமட்டும் அன்று. ஞானம் நிறைந்து ஸித்த தர்மமான க்ருஷ்ணனை அடைய வேண்டும் என்கிற உயர்ந்த அறிவு எப்பொழுது ஏற்பட்டதோ அதுவே நல்லநாள். இந்த பௌர்ணமி நல்ல நாளிலே இந்த நோன்பைத் துவங்குவோம். இந்த நோன்பில் கலந்து கொள்ள ஆசையுள்ள அனைவரும் வாருங்கள் என்கிறார். இதில் யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாமா? என்று வந்தவர்கள் கேட்க, இந்த நோன்பை நோற்று க்ருஷ்ணதடாகத்தில் மூழ்கி நீராட வேண்டும், (க்ருணானுபவம் பண்ணவேண்டும்) என்னும் ஆர்வமே இதில் கலந்து கொள்ளுவதற்கான தகுதி. அதனால் "**கலந்து கொள்ள வேண்டும்**" என்று எண்ணம் இருந்தால் போதும் என்கிறார். அதுமட்டுமல்லாமல், இதில் கலந்து கொள்பவர்களின் ஏற்றத்தையும் சொல்கிறார்.

**நேரிழையீர்....காண்** இவ்வாத்மாவிற்கு நிலையான ஐசுவர்யமான ஜ்ஞான, பக்தியை நிரம்பப்பெற்ற நேரிழையீர்! ஸ்ரீக்ருஷ்ணன் தானே விரும்பி, இந்த ஆய்ப்பாடியில் அன்றோ! ஆயர் புத்திரனாய் அவதரித்தான். (அவன் பிறந்ததால் அன்றோ! நாழிப் பாலிலிருந்து நாழி நெய் கிடைக்கும் படியான ஸம்ருத்தி இங்கு ஏற்பட்டது). இந்த யமுனைக் கரையில் ஆயர் சிறுமியர்களான உங்களுடன் கலந்து அவன் தன் நீர்மையும், மேன்மையும் தோற்ற, தன் அதிமானுஷ சேஷ்டிதங்களைக் காண்பித்து நம்மை ஆட்கொள்ள வந்துள்ளான். அப்படிப்பட்ட, இவ்வாத்மாவிற்கு நிலைநின்ற ஐசுவர்யமான **ஸ்ரீக்ருஷ்ண ஐசுவர்யத்தை** உங்கள் ஊருக்கென்றே இருக்கும்படியான செல்வத்தை உடையவர்களே! செல்வச் சிறுமீர்காள்!.

**கூர்...........சிங்கம்** புல் பூண்டைக் கூட மிதித்து ஜீவஹிம்சை செய்யாத நந்தகோபர் க்ருஷ்ணன் பிறந்தவுடன் "**கம்ஸனால் குழந்தைக்கு எவ்வுருவில் தீங்கு வருமோ**"! என்று கண்ணன் தொட்டில் அருகே ஒரு எறும்பு வந்தால் கூட ஒரு சிங்கத்தின் மேல் பாய்வது போல் அதைக் கொன்று, கையில் வேல் ஏந்திக் கண்ணனை ரக்ஷித்ததினால் **கூர்வேல் கொடுந்தொழிலன்** என்ற பெயரைப் பெற்றவர்; அத்தகைய நந்த கோபனின் குமரன்; ஆகையால் கண்ணனை நம் குடியைச் சேர்ந்தவன் என்கிறார். (ஆயர்புத்திரன் அல்லன் அருந்தெய்வம் - என்றார் பெரியாழ்வார்) ஆனால் ஆண்டாள் கண்ணன் தன்னை சஜாதீயனாய்க் கொள்ளவேண்டும் என்று சொன்னதை நினைவு கூர்கிறார்) கண்ணனின் அழகைப் பார்த்து,

அவன் அழகு இவள் கண்ணில் ஏறிட்டதோ என்று என்னும்படி ஏராந்த கண்ணழகையுடைய யசோதையின் இளஞ்சிங்கம், சிங்கத்துருத, புவனசுந்தரன். **கார்.......பாவாய்** கார்மேனி என்றால் நீலமேக சியாமளான் என்றும், (வள்ளல் தன்மையின் முழுவடிவம் என்றும் அர்த்தம்) சூரியனைப் போன்ற ப்ரகாசமும், சந்திரனைப் போன்ற அழகும் குளிர்ச்சியும் உடையவன் என்கிறாள். இப்படிப்பட்ட க்ருஷ்ணன் வேறு யாருமல்ல உபய விபூதிக்கு நாயகனும், நம்மைச் சரீரமாக உடையவனுமான நாராயணன்தான். நமக்காகவே நித்ய கைங்கர்யத்தைக் கொடுக்கக் காத்து நிற்கும் அவனிடம், பாரோர் புகழும் படியாக நோன்பு நோற்று அப்பறையைப் பெறுவோம் வாருங்கள் என்று அனைவரையும் அழைக்கிறார் ஸ்ரீஆண்டாள்.

**விசேஷார்த்தம் :-** ப்ராப்ய - ப்ராபகம்

பரவாசுதேவனான ஸ்ரீமந்நாரயணனை நோக்கியே இந்த நோன்பினை நோற்கிறோம் (அந்த நாராயணனே க்ருஷ்ணனாய் வந்திருப்பதால்) இந்த நோன்பைச் செய்ய க்ருஷ்ணப்ரேமையே (பக்தி) போதுமானது என்கிறார். "**நாராயணனே, நமக்கே**" என்கிற இவற்றில் தொனிக்கும் ஏகாரத்தினால் "**ஸ்ரீமந் நாராயணனைத் தவிர எங்களுக்கு வேறு ஒரு தெய்வம் இல்லை**" என்றும்; "**இந்த கைங்கர்ய ப்ராப்தியும் எங்களைத்தவிர மற்றவருக்கில்லை**" என்றும் இருக்கிற இவர்களுடைய உறுதியைத் தெரிவிக்கிறார். இந்த நாராயணனுக்குதான் நாம் சொத்து; உடையவனிடத்தில் தானே உடைமையை (சொத்தை) ஒப்படைக்கவேண்டும்.

இதிலே, **சாத்ய பக்தியைச்** சொல்கிறார், **ப்ராப்யம்-** நம் ஆத்ம க்ஷேமத்திற்கு வேண்டி நாம் மனிதப்பிறவி எடுத்து அடைய வேண்டிய பலன்**-பகவத் கைங்கர்யமே** என்று பலத்தையும்; **ப்ராபகம்**-அதை அடையும் உபாயத்தையும், அதை அடையும்படி செய்பவனையும் சொல்கிறார். நீங்கள் நிஷ்கலங்கமான பக்தியை (அன்பை) க்ருஷ்ணனிடத்தில் வையுங்கள். அவனே நமக்கு வேண்டிய பலனைத் தருவான் . நாம் செய்யும் பக்தி உபாயம் ஆகாது (அது சைதன்ய காரியமே), அவன் க்ருபையே உபாயம் என்கிறார்.

கருத்துரை - பகவதனுபவத்திற்கு அவகாசம் கிடைக்காத இவ்வுலகில் நமக்கு இப்படி ஒருநாள் அகப்பட்டதே என்று கொண்டாடி ப்ராப்ய, ப்ராபகங்களைத் தெரிவித்து, இதில் ருசி உள்ளவர்களெல்லாம் ஒன்றாகச் சேர்ந்து க்ருஷ்ணனை அனுபவிப்போம் வாருங்கள், என்று பாகவதர்கள் எல்லாரையும் எழுப்பி அழைத்துக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனைச் சந்திக்கப் புறப்படுகிறார்கள்.

சிற்றஞ்சிறுகாலை நேரம்- (காலை - 5.12; சிறுகாலை - 4.00; சிற்றஞ்சிறுகாலை 3.00 ப்ராஹ்மமுகூர்த்தம்)

**மதி: சந்திரன், ஜ்ஞானம்; கார் என்றால் மேகம் போன்ற கருமை , மேகம் போன்ற கருணை.**

## 2ஆம பாசுரம் **வையத்து வாழ்வீர்காள்**

இப்பாசுரத்தில் வியூக எம்பெருமானைத் துதிக்கிறார். (வியூகம் - திருமாலின் 2வது நிலை திருபாற்கடல் வாசம்). இப்பாட்டில் பெரியாழ்வார் போல், "**வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல்**" என்னாமல் ஆண்டாள், "**இவ்வையத்தில் வாழ்பவர்கள் எல்லோரும் வாருங்கள்**" என்றாள். மேலும்,

"**வையத்து ..... கேளீரோ**" இந்த நோன்பிற்கு ஐசுவர்யங்கள் ஏதும் வேண்டியதில்லை. ஆனால் நீங்கள் விரும்பும் பலனை நீங்கள் விரைவாக அடைய சில (கிரியைகள்) கார்யங்களைச் சொல்கிறேன் கேளுங்கள்! நான் முதலில் சொன்ன பரவாசுதேவன் இந்த லீலா விபூதியை ரக்ஷிக்கவென்று திருப்பாற்கடலில் **உறங்குவான் போல் யோகு** செய்துகிடக்கிறான், நமக்கு ஏதேனும் செய்ய வேணும் என்றே காத்துக் கொண்டிருக்கிறான். பொதுவாக எந்தக் காரியத்திலும் நாம் வெற்றியடைய வேண்டுமாகில் முதலில் நாம் யாரைப் பார்க்க வேண்டும், அவருக்கு நம் காரியத்தை ஜயித்துக் கொடுக்கும் சௌர்ய, பராக்ரமம் உள்ளதா! என்பதை அறிந்து, பின்பு அவரிடத்தில் மஹாவிசுவாஸத்துடன் இருக்கவேண்டும். அடுத்து அவர் மனம் உகக்கும் வண்ணம் நமக்கு நாமே விதிகளை அமைத்துக் கொண்டு கட்டுப்பாட்டுடன் இருந்து அவர் அன்பைப் பெறவேண்டும் என்கிறாள்.

**பாற்கடலுள்....முடியோம்** திருப்பாற்கடலெம்பெருமானை, அதிகாலையில் எழுந்திருந்து நீராடி, வாயினால் பாடித் தொழுது விரதம், இருப்போம் . அப்படி நோன்பு (விரதம்) இருக்கும் காலத்தில் போக்ய பதார்த்தங்களையும் (நெய், பால்), போக்ய வஸ்துக்களையும் (மை-மலர்) (இவைகள் நம் தாபத்தைக் காண்பிக்காமல், சந்தோஷத்தைக் காண்பிக்கும்) தவிர்க்க வேண்டும்.

**செய்யாதன.... எம்பாவாய்** - செய்யக்கூடாதவைகளான, "**பிறர் மனம் புண்படும் படி பேசுதல்**", "**பிறரைப் பற்றிப் புறம் கூறுதல்**" இவைகளைத் தவிர்க்க வேண்டும். அன்றியும் பெரியோர் செய்யாமல் தவிர்த்த செயல்களையும் தவிர்க்க வேண்டும். செய்ய வேண்டிய தர்மங்களான (க்ரியைகளான) ஐயம்-பிரம்ஹமசாரிகளுக்கு இடும் தானம்; பிச்சை சன்யாசிகளுக்கு இடும் தானம்; இவைகளை உங்களால் முடிந்தளவு "**நாம் செய்தோம் என்று கர்வமில்லாமல், நம்மை உய்விக்க இவர்கள் வந்தார்கள்**" என்று இவற்றை பகவத் கைங்கர்யமாய் எண்ணி ப்ரீதியுடன் செய்யுங்கள். இந்த ஆறு செயல்களையும் இந்த விரதம் முடியும் வரையில் தவறாமல் அனுஷ்டியுங்கள், பாவைகாள்! என்கிறார்.



**வஸந்த ராகம்-ஆதிதாளம்**

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்கு*
    செய்யும் கிரிசைகள் கேளீரோ * பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி*
    நெய்யுண்ணோம் பாலுண்ணோம், நாட்காலே நீராடி*
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்*
    செய்யா தனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்*
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி*
    உய்யுமா றெண்ணி யுகந்தேலோ ரெம்பாவாய். (2)

**விசேஷார்த்தம்:** - க்ருத்ய அக்ருத்யங்கள்

1. ***சாஸ்திரங்களில் சொல்லியிருக்கச் செய்தேயும் முன்னோர்கள் செய்யாததை நாம் செய்யக் கூடாது,***
2. ***போக்ய பதார்த்தங்களில் அதிக அந்வயம் கூடாது,***
   (கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள் குடியினில் புகுதலொட்டோம்) திருப்பல்லாண்டு 2ஆம் பாசுரம்.
3. ***போக்ய வஸ்துக்களில் அதிக அந்வயம் கூடாது,***
4. ***பிறர் மனம் புண்படும்படி பேசுவதோ, அவர்களைப் பற்றிப் புறம் சொல்லுதலோ கூடாது,***
5. ***அதிகாலையில் நீராட வேண்டும், பகவானின் திருநாமங்களைப் பாடவேண்டும்,***
6. ***ஐயமும், பிச்சையுமான தர்மங்களை முறையாகச் செய்யவேண்டும்,***

இவைகள், நாம் உய்வதற்காக ஏற்படுத்தப்பட்டவை. ஆகையால் இவைகளை நாம் முறையாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்கிறார். மேலே சொல்லப்பட்ட இவையனைத்தையும் விதியாக எண்ணாமல், ப்ரீதியுடன் செய்யவேண்டும் என்கிறார்.

பொதுவாக ஒரு பலனை இச்சித்துச் செய்யும் செயல் **கர்மம்** எனப்படும். இதைப் பூர்த்தியாகச் செய்தால் பலன், குறையுடன் செய்தால் பலனில்லை, ஆனால் பாபம் உண்டு. ஒரு பலனையும் இச்சியாமல் பகவத் ப்ரீதியுடன் செய்தால் (பகவத் ப்ரீத்யர்த்தம்) அது **கர்மயோகம்** எனப்படும். இதனால் ஆத்மச்ரேயஸ் ஏற்படும்.



3ஆம்பாசுரம் **ஓங்கி உலகளந்த உத்தமன்**

இப்பாசுரத்தில் இவர்கள் நோன்பிற்கு அனுமதி வழங்கிய கோபாலர்கள் (லோகத்தார்) க்ஷேமமாயிருக்கவும், நாட்டில் மழை பெய்து, வளம் பெருகி, நீங்காத செல்வம் பெறவேண்டியும் எம்பெருமானைப் ப்ரார்த்திக்கிறார்கள்.

இப்பாசுரத்தில் எம்பெருமானின் விபவ நிலையை (அவதாரங்களை) கொண்டாடுகிறார்கள். தசாவதாரங்களிலேயே மேன்மையான அவதாரம் **திரிவிக்ரமாவதாரம்** என்று ஆண்டாள் கொண்டாடுகிறார். ஒரு யாகம் செய்ய வேணுமெனில் அதில் திரிவிக்கிரம எம்பெருமானை மூன்றுமுறை வரித்து யக்ஞதானம் வழங்கினால் தான் அந்த யாகம் பூர்த்தியாகும். இந்த விரதத்தை யாகம் போல் அனுஷ்டிக்கும் கோதாதேவியும், மூன்று இடங்களிலே இவ்வவதாரத்தைக் கொண்டாடுகிறார். அது மட்டுமல்லாமல் ஆண்டாள் வாக்கால் **உத்தமன்** பட்டம் வாங்கியவரும் (தசாவதாரங்களில்) இவர் மட்டுமே.



ஆரபி ராகம்-ஆதி தாளம்

*ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி*
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்*
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து*
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகள*
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப*
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்க* குடம்நிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்*
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்: (3)

இவ்வெம்பெருமான் எந்தக் கர்மாவையும் (சரணகதி) நம்மிடம் எதிர் பாராமல் ஒரு தாயின் பேரன்போடு இவ்வுலகத்தை அளப்பதும், அணைப்பதுமே போக்யமாய் ப்ரீதியுடன் செய்கிறார். ராஜாதிராஜனான, தேவாதி தேவனான இவ்வெம்பெருமான் தன் மேன்மை பாராதே **மாபலி** உய்யும் பொருட்டு ப்ராமணனாய் வந்து, தன் சொத்தான பூமியை தானமாய் வாங்கி அவனை உய்யும் படி செய்து, **ப்ராமணதான** மகிமையையும், தருமத்தின் பலனையும், தன்னுடைய வாத்ஸல்யத்தையும், பராக்ரமத்தையும் ஒரு முகேன காட்டியருளின அவதாரம். அத்தகைய உத்தமனுக்கு அர்ப்பணமாய் நாம் கிரியைகள் செய்தோமானால் (கோவிந்த பட்டாபிஷேகத்தை நினைப்பது) நம்முடைய இந்த உத்தமமான க்ரியையினால் தேவர்கள் சந்தோஷிக்க, அதனால் மாதம் மும்மாரி (10 நாள் காய்ந்து 1 நாள் மழை பெய்தல்) பெய்யும். நாடு சுபிக்ஷமாயிருக்கும். பொதுவாக நாட்டிலுள்ளவர்கள், சுபிக்ஷமாயிருக்க நாடு (உலகம்) செழிப்பாய் இருக்க வேண்டும், அப்போது தான் அதில் உள்ளவர்கள் சுகமாயிருக்க முடியும். அதனால் பொது நலனை மனத்தில் கொள்ள வேண்டும் எப்போதும். **(ஸர்வே ஜனா ஸு²கினோ பவந்து)**

இதை மனிதனை விட மேன்மையான தேவர்களை இட்டும், தாழ்மையான ஸ்தாவர த்ரியக்குகளையிட்டும் தெளிவுபடுத்துகிறார் இப்பாட்டில். "**ஓங்கு பெருஞ் செந்நெல் ஊடு கயலுகள, பூங்குவளைப் போதில் பொறி வண்டு கண்படுப்ப, தேங்காதே புக்கிருந்தது சீர்த்த முலைபற்றி வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் நீங்காத செல்வம் நிறைந்து**" என்பதன் மூலம் .

**ஓங்கு.....நிறைந்து-**பூமியில் நீங்காத செல்வமானது நிறைந்து இருக்க வேணுமானால் உங்கள் க்ரியைகளை ஒழுங்காகச் செய்யுங்கள். பேதம் பார்க்காமல் அனைவரும் ஒரு குடைக் கீழ் வாழும் ஒரே குடிகளாய் எண்ணுங்கள். எப்படியெனில், பூமியில் ஒரு நெல் விதை போட்டால் அது பல நெல்களைத் திருப்பித்தருகிறது, அப்பயிருக்கு நீர் வார்க்கும்போது அத்துடன் புல்லும், ஊடு பயிர்களும் இணைந்து வளர்கின்றன. நெல் மனிதனுக்கென்றால் புல் பசுக்களுக்காகிறது. நெல்லுக்கு வார்க்கும் நீரிலே, நீரில்வாழும் மீன்களும், தவளைகளும் துள்ளி விளையாடுகின்றன. அந்நீரிலே வளர்ந்த குவளைப்பூச் செடிகள் நிலத்திலே சுற்றித் திரியும் வண்டுகளுக்கு தேனை வாரி வழங்குகின்றன. இப்படி ஒன்றுக்கொன்று எந்த ப்ரதி பலனையும் எதிர்பாராமல் தனக்கென்று எதையும் பதுக்கி வைத்துக் கொள்ளாமல், சுயநலமில்லாமல் வாழும், நம்மை விட தாழ்ந்த ஜன்மமான தாவரங்களையும், த்ரியக்குகளையும் பாருங்கள்.

அவர்கள் அல்லவோ உண்மையான **சுதந்திரம்** பெற்றவர்கள். நமக்கென்று ஐசுவர்யமான இப்புவியைக் கொடுத்து அதில் நமக்கு வாழ அனுமதியும், சுதந்திரமும் கொடுத்தவன் உண்மையில் அந்த உத்தமன் அன்றோ! நாம் எப்படி வாழ வேண்டும் என்பதை நம்மைச் சுற்றி இருக்கும் இயற்கையைப் பார்த்துக் கற்றுக் கொள்ளுங்கள். மனிதன் வேண்டாம்

என்று போட்ட தாவரத்தை மாடு உண்டு, அவனுக்கு உபயோகப்படும் பாலாய் மாற்றிக் கொடுக்கிறது. இவன் இடுவதைக் காட்டிலும் அதிகமாய்த் திருப்பிக் கொடுக்கிறது. இவன் கொடுக்காவிட்டாலும் அது கொடுக்கிறது. இவன் கேட்காவிட்டாலும் நான் கொடுக்கத் தயாராகிவிட்டேன் எடுத்துக் கொள் என்கிறது. ஆகவே தான் பிராட்டியின் வாயால் அப்பசுக்கள் **"வள்ளல் பெரும்பசுக்கள்"** என்ற பட்டத்தைப் பெற்றன. இவையனைத்துக்கும் காரணம் மழை. அது பொழிய நீங்கள் செய்யும் தர்மமே மறைமுகக் காரணம், மறந்து விடாதீர்கள். நீங்கள் செய்யும் தர்மங்களிலே சிறந்த தர்மம்; நீங்கள் செய்யும் யாகங்களிலே சிறந்த யாகம்; அந்த உத்தமனின் நாமங்களை (அவன் செய்த உபகாரங்களுக்கு நன்றி தெரிவிக்கும் பொருட்டாவது) மனதார பாடுதலேயாகும் என்கிறார். (அதாவது திருநாமசங்கீர்த்தனம் செய்யுங்கள் என்கிறார்.)

**விசேஷார்த்தம்:-** திருநாம சங்கீர்த்தனம்

**"திருநாம சங்கீர்த்தனம்"** செய்ய வேண்டும். வண்டுகளும், கிளிகளும், குயில்களும் பாடுவதற்கு ஏதேனும் காரணம் உண்டா! என்ன, அதுபோல், **"உன் வாய் படைத்த பயன் உத்தமனை அன்பு ததும்பப் பாடு"** என்கிறார்.



4ஆம் பாசுரம்

## ஆழிமழைக் கண்ணா

தேவாதி தேவனான நாரயணனைக் குறித்து சிறுமியர்கள் (ஆண்டாளுடன் சேர்ந்து) பாடுகிறார்கள். தாங்கள் நோன்பு நோற்றால் நாட்டுக்கு விளையும் நன்மைகளை முன் பாட்டில் சொல்லியிருப்பது போல், இச்சிறுமியர் மனோரதித்துச் சொல்லிக்கொண்டிருக்கும் போது, **"எம்பெருமான் அடிபணியும் இவர்களுக்கு நாமும் நம்மால் இயன்ற உதவியைச் செய்வோம்"** என்று மழைக்கு உரிய **பர்ஜந்யன்** (மேகம்- மேகாதிபதியான தேவன்) இவர்களது கட்டளையை எதிர்நோக்குகிறானாம்.

பகவானுடைய பக்தைகள் பகவானைத் தவிர வேறு எந்தத் தேவதையையும் ப்ரார்த்திப்பதில்லை.மழைக்கடவுளே இவர்களை ப்ரார்த்தித்துக் கட்டளையை எதிர்பார்க்கிறானாம். இந்த நிலையில் இந்தச் சிறுமியர், மழையே! உலகம் வாழவும், நாங்கள் மகிழ்ந்து மார்கழி நீராடவும், "***பெண்கள் நோற்றதென்ன! மழை பெய்ததென்ன!* என்று ஆய்க்குல முதியவர் கொண்டாடவும் பெய்வாயாக**" என்று கட்டளையிடுகிறார்களாம்.

**ஆழிமழைக்கண்ணா**!-"**ஜகத்தை ஈரக்கையாலே தடவி நோக்க வல்லன்"** என்று பகவானால் மதிக்கப் பெற்றவன் மழைக்கண்ணன் என்றும், நாட்டார் சிறுமை பாராது தன் பெருமைக்கு ஈடாகப் பொழிவதால் **ஆழிமழைக்கண்ணன்** என்றும் விரிவுரை கூறுவர்.

(ஒன்றும் நீ கைகரவேல்)-"**உன்னுடைய ஔதார்யத்தில் (வள்ளன்மையில்) ஒன்றும் மாறாதபடி தோற்ற வேணும், நாடு முழுவதும் உன் தொனிகேட்டு வாழும்படி மின்னி முழங்கி வில்லிட்டுக் கொண்டு பெரிய சம்பிரமத்தோடே வந்து தோற்ற வேணும்**" என்கிறார்கள்.

பகவத் பக்தைகளானதால், தங்கள் தலைவனுடைய உருவத்தையும் அவனைச் சார்ந்த பொருள்களையும் உபமானமாகக் கூறுகிறார்கள். (இதன் மூலம் கண்ணனது மேனி நிறத்தை மேகங்களிலே காண விரும்புகிறார்கள்.) "**லோகத்தார் வாழும்படி இந்தமாதிரி நீ மழை பெய்யவேண்டும்**" என்று சொல்லி, "**உன் வரவைப் பார்த்து நாங்களும் எங்கள் தாபமெல்லாம் தீர்ந்து, கூடியிருந்து மகிழ்ந்து மார்கழி நீராடுவோம்**" என்கிறார்கள். பகவானுக்குக் கைங்கர்யம் செய்வது போலே பாகவதர்களுக்கும் (கோபிகைகள் போன்ற) கைங்கர்யம் செய்வது தான் நம்முடைய ஸ்வரூபம் என்பதைக் காட்டுகிறாள்.

**விசேஷார்த்தம்:**-பாகவத ப்ரபாவம்

ஒரு பலனையும் விரும்பாமல் இருக்கும் நாளில் அவனுடைய வர்ணாச்ரம தர்மத்திற்குச் சேர்ந்த நித்ய கர்மானுஷ்டானங்களை பகவத் கைங்கர்யரூபமாக செய்து போகிறவன் பாகவதன். பகவானது முக உல்லாஸத்திற்காகவே அவன் திருநாமங்களைச் சொல்லி பஜனை செய்கிறவனும், பகவானிடம் பக்தி செய்து ஆத்மச்ரேயஸுக்கு பகவானே உபாயம் என்று இருப்பவனும் பாகவதனாகிறான்.

இப்படியிருக்கும் பாகவதனுடைய ப்ரபாவம் பகவானின் ப்ரபாவத்தைக் காட்டிலும் மேம்பட்டது. ஸர்வ ஸ்வதந்திரனான பகவானும் பாகவதர்களிடம் தன்னைத் தாழவிட்டு பரதந்திரனாயிருக்கிறான். கோபிகைகள் பரம பாகவதர்களாகையினால் அவர்களிடம், அவன் பரதந்திரனாக இருந்திருக்கிறான்.

இந்த பகவத் பாரதந்தரியம் தான் மூன்று விதமாயிருக்கும்,

**கர்ம பாரதந்த்ரியம்** நாம் நம்முடைய கர்மாவுக்கு பரதந்திரராயிருந்து அதற்குண்டான பலனை அனுபவிக்கிறோம். பகவானும் நம் கர்மாவுக்கு தகுந்தாற் போல நமக்கு பலனைக்கொடுப்பதில் பரதந்திரனாயிருக்கிறான்.

**க்ருபாபாரதந்த்ரியம்** நாம் பகவானிடத்தில் சரணாகதி செய்து நாம் தெரியாமல் செய்த பிழைகளைப் பொறுத்து ரக்ஷிக்க வேணும் என்று ப்ரார்த்தித்தால், பகவானுக்கு நம்மிடம் க்ருபை உண்டாகிறது. இதனால் கர்ம பாரதந்த்ரியம் குலைந்து அவன் க்ருபைக்கு பரதந்திரனாய் நமக்கு நன்மையைச் செய்கிறான்.

**இச்சாபாரதந்த்ரியம்** க்ருபாபாரதந்த்ரியமும் சிலசமயம் நிலைத்திராது. பகவானுக்கு தான் ஸ்வதந்திரன் என்பது தலையெடுக்கும் போது இந்த க்ருபா பாரதந்திரியமும் குலையும். தன் இச்சைக்கு அப்போது



*வராளி ராகம்-ஆதி தாளம்*

ஆழி மழைக்கண்ணா ஒன்றுநீ கைகரவேல்*
  ஆழியுள் புக்கு, முகந்துகொ டார்த்தேறி*
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து*
  பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்*
ஆழிபோல் மின்னி, வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
  தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்*
வாழ வுலகினிற் பெய்திடாய்* நாங்களும்
  மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (4)



ஸ்ரீ ராகம் - ஆதி தாளம்

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை*
தூய பெருநீர் யமுனைத் துறைவனை*
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை*
தாயைக் குடல்விளக்கஞ் செய்ததா மோதரனை*
தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது*
வாயினாற் பாடி, மனத்தினாற் சிந்திக்க*
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்*
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய். (5)

பரதந்திரனாகிறான். ஆனால் ஒரு பக்தனிடம், பகவான் தன் இச்சையினாலேயே தன்னைப் பரதந்திரனாக அமைத்துக் கொண்டால், சத்யசங்கல்பனாகையால், அப்பக்தன் இட்ட வழக்காய் பகவான் இருக்கின்றான், அதாவது பக்தன் சொல்வதை பகவான் கேட்கின்றான். இவ்விடத்தில் அவன் இச்சையினால் கோபியர்களிடம் தன்னை பரதந்திரனாக அமைத்துக் கொண்டிருக்கிறான். அதனால் ஆண்டாளையோ, கோபிகைகளையோ பற்றுமவர்களுக்கு பகவான், அவர்கள் இட்ட வழக்காய் இருக்கிறான்.

பகவானே இப்படி என்றால் மற்றைய தேவதைகளைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ! பர்ஜந்ய தேவதை, தானே இவர்களிடம் வந்து, இவர்கள் சொன்னபடியே மழையைப் பெய்து, நாடு மகிழும்படிச் செய்கிறது. (ஒவ்வொரு உயிரிலும் எம்பெருமான் அந்தர்யாமியாய் இருந்து சாஸ்த்திர விதிகளோடு நடப்பவர்களுக்கு தானே அரணாயிருந்து ரக்ஷிக்கிறான். விதியை மீறுபவர்களை சிக்ஷிக்கிறான் என்பதை கோவிந்த பட்டாபிஷேகம் மூலம் நிரூபிக்கிறான்).



5ஆம் பாசுரம் **மாயனை மன்னு**

**வட மதுரை மைந்தனை**

நோன்பை வியாஜமாகக் கொண்டு க்ருஷ்ணனைப் பெற இழியும் கோபியர்களை நோக்கி, அக்கூட்டத்தில் இருக்கும் ஒருத்தி, சம்சாரி சேதனர்களான நாமோ பாபம் மிக்கவர்கள், மேலும் நாம் நோன்பைப் பூர்த்தியாய்ச் செய்து க்ருஷ்ணானுபவம் பெறுவது என்பது கஷ்டம். மஹான்களுக்கே ஒரு சுபகாரியத்தைச் செய்ய ஆரம்பிக்கும் போது பல தடங்கல்கள் ஏற்பட்டு நின்றுவிடுகிறது. வைதிகரில் சிரேஷ்டரான வஸிஷ்டர் நாள் குறித்து, "**ஸ்ரீராமபிரானுக்கு நாளை பட்டாபிஷேகம்**" என்று அறிவித்த காலத்திலேயே மறுநாள் பட்டாபிஷேகம் நடை பெறாமல் போனதோடு வீபரீதங்களும் தோன்றினவே, இப்போது சிறுமியர்களான நாம் எப்படி இந்த நோன்பை வெற்றிகரமாகச் செய்வோம் என்று கலங்கினார்கள்.

அதற்கு ஆண்டாள் இப்பாசுரத்தில், நாம் அண்டியிருப்பது ஸ்ரீமந் நாராயணனை, அவன் மாயன் - ஆச்சரியமான சேஷ்டிதங்களை உடையவன். ஒரிரண்டு சொல்கிறேன் கேள், ததிபாண்டனைப் பொய் சொல்லச் சொல்லி, அவனுக்கும் அவன் பானைக்கும் மோக்ஷம் கொடுத்தவன். தாய் வேடத்தில் வந்த பூதனை, விஷத்தை கண்ணனுக்கென்றே கொண்டு வந்த காரணத்தால் இவன், அவள் விஷத்தை அமுதமாக்கி அதோடு அவள் உயிரையும் சேர்த்து எடுத்து, அவனை கம்ஸனிடமிருந்து விடுவித்து, நல்கதி தந்தருளினான். மேலும் ஸர்வேசுவரன் தன் ஸங்கல்பம் பொய்யானாலும், தன்னடியார்கள் திறத்தில் வார்த்தையைப் பொய்யாக்கமாட்டான். பீஷ்மரின் வார்த்தையைக் காக்க "**ஆயுதம் எடேன்**" என்னும் தன் சங்கல்பத்தை

பகவான் க்ருஷ்ணன் குசலத்துக் கொண்டு ஆயுதத்தை எடுத்து, தன் வார்த்தையைப் பொய்யாக்கிக் கொண்டான். பொய் சொல்லுதல் கூடாது என்று அவனே விதித்த சாஸ்திரத்தையும் மீறி அர்ஜுனனுக்காகப் பல பொய்களைச் சொன்னவன். இதிலிருந்து தெரிவது, பொய் சொன்ன ததிபாண்டனுக்கு மோக்ஷமும், உண்மையே பேசிய தசரதனுக்கு சுவர்க்கமும் கிடைத்தது. இதிலிருந்து தெரிவது நாம் **"ஸித்ததர்மமான"** எம்பெருமானிடத்தில் நெஞ்சார பக்தி செய்தால் போதும். நாம் நம் பாபங்களைப் போக்கிக் கொண்டுதான் பகவத் பக்தி செய்ய வேண்டுமென்பதில்லை. **"பாலைப் பருகுபவனுக்குப் பித்தம் தன்னிடையே போமாப்போல"** நாம் பரம போக்யமான பகவதனுபவம் பண்ணினால் நம் பாபங்கள் பறந்தோடிப்போகும். அதனால் அயோக்யதையைப் பார்த்து அகல வேண்டியதில்லை என்று தெளிவுப்படுத்துகிறார்.

**மாயனை...... மைந்தனை-** கீழ் நான்கு பாசுரங்களிலே எம்பெருமான் இருக்கும் நிலைகள் ஐந்தில் பர, வியூக, விபவ, அந்தர்யாமி நிலைகளைச் சொல்லி இப்பாட்டில் 5ஆவது நிலையான அர்ச்சாவதாரத்தின் மேன்மையைத் தெரியப்படுத்துகிறார். அயர்வறும் அமரர்கள் அதிபதியான **"பரமபதநாதனே"** மாயன், அவன் தன்னுடைய ஸமஸ்த கல்யாண குணங்களுடனும் ஸ்ரீக்ருஷ்ணனாய் வடமதுரையில் தேவகி, யசோதைக்குப் பிள்ளையாய் அவதரித்து இடைச்சிகளுக்கு கட்டவும், அடிக்கவுமாம்படி தன்னைக் கொடுத்துக்கொண்டிருக்கும் இடம், ஒரு ஊருக்குத் தன்னைக் கொடுத்துக் கொண்டிருக்கும் நீர்மை, இங்கு ஒரு நாட்டுக்குத் தன்னைக் கொடுத்துக் கொண்டிருக்கும் நீர்மையாகையாலே அதைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். பகவத் ஸம்பந்தத்தால் பொலிகின்ற தேசம். க்ருஷ்ணனே விரும்புகின்ற தேசம், புண்ணிய பூமி, தூய பெருநீர் (சீதா பிராட்டி சரணம் புகுந்த போது இராவணுக்கு பயந்து அமைதியாயிருந்த கோதாவரியைப் போலல்லாமல், கம்ஸன் அருகிலிருந்தும் எம்பெருமான் எழுந்தருளுவதற்குப் பாங்காக வற்றிக் கொடுத்தபடியாலும், பாகவத ஸம்பந்தம் பெற்றபடியாலும், **தூய பெருநீர் யமுனை** என்று யமுனைக்குப் பட்டம் கொடுத்திருக்கிறார்). யமுனையின் கரையிலே (யமுனைத்துறைவனை) அர்ச்சாமூர்த்தியாய், ஸ்ரீப்ருந்தாவனவாசியாய், ஸ்ரீக்ருஷ்ணன் ஆயர் குலத்தின் அணி விளக்காய்த் தோன்றும்படி நிற்குமிடம்.

ஸ்ரீவைகுண்டத்தில் இருக்கும் இருப்பு பகல் விளக்குப் போலவும், ஆயர் குலத்திலே பிறந்தவுடன் இருட்டிலே வடமதுரையில் தோன்றும் விளக்குப்போல் விளங்கா நின்றான். (இது அர்ச்சையின் விசேஷம்)

**தூயோமாய்........பாவாய்** இவன் குணம் அறிந்த ஸ்ரீஆண்டாள் பகவானை சரணாகதி செய்வது மிக எளிது அவன் என்னிடத்தில், அவனை அடையும் ரஹஸ்யத்தை ஸ்ரீவராக அவதாரத்தின் போது தெரிவித்திருக்கிறான் அது என் மனத்தில் பசுமரத்தாணி போல் உள்ளது (பாசி தூர்த்து) அதை உங்களுக்குச் சொல்கிறேன்.

"**பத்துடை அடியவர்க்கெளியவனான**" கண்ணன் நமக்காக மகா கருணையுடன் அர்ச்சா மூர்த்தியாய் கோயில்களில் எழுந்தருளியிருக்கிறான். அவனை மனத்தூய்மையுடன் நல்ல புஷ்பங்களால் அர்ச்சித்து, வாயினால் இனிமையாகப் பாடி, அவனுடைய திவ்ய ஸ்வரூபத்தை மனத்தினால் சிந்தித்து நம்மால் முடிந்த கைங்கார்யங்களைச் செய்து வருவோமானால், இவ்வர்ச்சையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை அவன் கொடுத்த கரணத்தால் தொழுது அவன் திருவடிகளைச் சரணடைந்தால் நம் ப்ராரப்த, ஸஞ்சித பாபங்கள் அனைத்தும் தீயினில் தூசாகும். ஆகையால் அவன் திருநாமங்களை வாயினால் பாடுங்கள் என்கிறார்.

**விசேஷார்த்தம்:-** வித்யாப்ரபாவம்

தனவான்களுக்கு அவர்களுடைய செல்வத்தைப் பற்றிப் பெருமையைப் பாராட்டுவதைப் போல, பகவத் பக்தர்களுக்கு அவர்களுடைய தாஸ்ய ஸ்வரூபத்தையும் பக்தியையும் இட்டே பெருமை சொல்வார்கள். ஸ்வரூப ஜ்ஞானம் தான் வித்யை எனப்படும். இதை உடையவன் வித்வான் எனப்படுபவன்.

இவர்களிடத்தில் பகவான் அன்பைச் செய்து தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகிறான். பக்தி, ப்ரபத்தி இவையிரண்டிலும் ப்ரபத்தி என்னும் சரணாகதியே மேலானது. இதை அனுஷ்டிக்க எல்லோரும் அதிகாரிகள், இதற்கு தேச, கால, அதிகாரி நியமம் வேண்டியதில்லை ருசியே வேண்டுவது. பகவானை நாம் அன்புடன் சரணாகதி செய்யும் போது நம் பாபமெல்லாம் போய்விடும்.

"**பாபம் அனுபவித்தே அற வேண்டும்**" என்கிறதே சாஸ்திரம் என்றால், பகவானுடைய ப்ரீதியே புண்யம் அவனுடைய அப்ரீதியே பாபம் (உ-ம்) ஸமுத்ர ராஜனைக் குறித்து மூன்றுநாள் தரையிடைக் கிடந்தான் ராமன். அவன் முகம் காட்டவில்லை. உடனே கோபம் கொண்ட இராமன் கையில் வில்லை எடுத்து ஜலதத்வமே இல்லாமல் அழித்துவிடுகிறேன் என்றவுடன், சமுத்திர ராஜன் கை கூப்பி நேரில் வந்து ராமனைச் சரணடைந்தான். உடனே பகவான் கோபமெல்லாம் போய் அவன் தனக்கு சற்றுமுன் செய்த அபராதத்தை மறந்து, தொடுத்த அம்பை அவன் விரோதிகள் பேரில் விட்டு அவனுக்கு க்ஷேமத்தைச் செய்தான் (ஸ்ரீராமாயணம்).



6ஆம் பாசுரம்

## புள்ளும் சிலம்பினகாண்

இனிவரும், 10 பாட்டுக்களில் ஏற்கனவே எழுந்த கோபிகைகள் படுத்துறங்கும் கோபிகைகளை எழுப்புகிறார்கள். அன்பு இருந்தால் தான் பகவதனுபவம் ரஸிக்கும். எல்லோருக்கும் ஸ்ரீக்ருஷ்ணனிடம் ஒத்த அன்பு இருக்கையில், அவரவர் நேரே க்ருஷ்ணனை அனுபவிக்கலாமே? ஒருவரையொருவர் எழுப்புவானேன்?



*சங்கராபரண ராகம் - மிச்ரசாபு தாளம்*

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்*
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ*
பிள்ளாய்! எழுந்திராய்! பேய்முலை நஞ்சுண்டு*
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி*
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை*
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்*
மெள்ள வெழுந்து அரியென்ற பேரரவம்*
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். (6)

"**ஏகஸ் ஸ்வாது ந புஞ்ஜீத** "என்கிறபடி

"**ரஸமான பதார்த்தத்தைத் தனியாக ஒருத்தர் புஜிக்கலாகாது. ஸ்ரீக்ருஷ்ண ரஸத்தை கனி என்கோ, பாலென்கோ**", என்கிறார் நம்மாழ்வார், இப்படி ரஸமான எம்பெருமானைத் தனியாக அனுபவிக்காமல் கோபிகைகள் அனைவரும் கலந்து அனுபவிக்க எண்ணுகிறார்கள். இவர்கள் அனைவருமே க்ருஷ்ண பக்தர்கள்தாம். ஒருசிலர் நம் ரக்ஷணத்தைப் பகவானிடம் சமர்ப்பித்துப் பிறகு அதற்காக ப்ரயத்தனம் செய்வது நம் ஸ்வரூபத்திற்குச் சேராது என்று மார்பிலே கை வைத்து நிர்பயமாய்ப் படுத்திருக்கிறார்கள். ஒருசிலர் பகவதனுபவரஸம் நெஞ்சில் பட்டு, படுக்கை பொருந்தாமல் க்ருஷ்ணனை உடனே அடைய வேண்டும் என்னும் த்வரையாலே (ஆசையாலே) முன்னதாக எழுந்திருக்கிறார்கள். இப்படி முன்னே எழுந்தவர்கள், மற்றவர்களையும் எழுப்புகிறார்கள்.

பொதுவாக ஒரு ஊருக்குச் செல்பவன், புதிதாகச் செல்பவன் அந்த ஊரில் உள்ள தடாகத்தில் இறங்கி நீராட வேண்டுமென்றால் அங்குள்ளோரின் துணை கொண்டு துறையறிந்து இறங்கவேண்டும், இல்லை என்றால் ஆபத்து. இதையே நம்மாழ்வார் "**செஞ்சொற்கவிகாள் உயிர் காத்தாட்செய்மின்**"; என்று "**எம்பெருமானின் கல்யாணகுணக்கடலில் மூழ்கிவிடாதீர்! சுழலில் சிக்கிவிடுவீர்! ஜாக்கிரதை**" என்று எச்சரிக்கிறார். இங்கு ஸ்ரீக்ருஷ்ண தடாகத்தில் நீராடச் செல்லும் கோபிகைகள் எம்பெருமானின் கல்யாண குணக்கடலில் அமிழ்ந்து விடாதிருக்க, "**வைகுந்தவான் போகத்தை**" இகழ்ந்து வந்தவரும், அவ்வூர்வாசியும், துறை தெரிந்தவருமான, ஸ்ரீஆண்டாளின் கையைப் பிடித்துக்கொண்டு க்ருஷ்ணனை அநுபவிக்கச் செல்கின்றனர். (ஸ்ரீக்ருஷ்ண தடாகத்தில் நீராடுதல் என்பது ஸ்ரீக்ருஷ்ணானுபவத்திற்கு உபமானமாகச் சொல்லப்படுகிறது).

மேலும், "**வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து**" என்றபடி பாகவதர்களை முன்னிட்டே பகவானைக் கிட்ட வேண்டும். க்ஷுத்ர விஷயத்திற்கு மட்டுமே தனித்தேட்டம் பொருந்தும், பகவத் விஷயத்திற்குத் துணைதேட்டமும் வெளிச்சமும் வேண்டும். ஆகையால் மற்றவர்களையும் துணை சேர்த்துக் கொண்டு பகவானை அனுபவிக்க, ஒவ்வொருவரையும் விடாமல் எழுப்பி அழைத்துச்செல்கிறாள். பூவின் மணத்தை அறியாதவர்களை ஒரு நந்தவனத்திற்கே (பூஞ்சோலை) அழைத்துச் செல்கிறார்.

இதுவரை எதனால் பாகவதர்களுடன் குழாங்களாய் கூடி பகவானை அனுபவிக்க வேண்டும் என்று சிறிது விளக்கப்பட்டுள்ளது. இனி, ஆண்டாள் ஒவ்வொரு தோழியையும் எழுப்பி, குழாங்களாய் பகவானை எப்படி அனுபவித்தாள் என்று விளக்கப்படுகின்றது.

இப்பாசுரத்தில் பாகவத கோஷ்டியுடன் பகவானை அனுபவிப்பதில் புதியவள் ஒருத்தியை எழுப்புகிறார்கள். அதற்குள் எல்லோரும் கிளம்பிவிட்டீர்களே, பொழுது விடிந்து விட்டதா? என்று விடியலுக்கு அடையாளம் கேட்கிறாள். அதற்கு இவளை எழுப்ப வந்த கோபிகைகள், **புள்ளும்... பேரரவம்-** அறிவற்றவையான பறவைகள் கூட எழுந்துதான் விழித்தமையை அறிவிக்கக் கூவ ஆரம்பித்து விட்டன; புள்ளரையன் (நாராயணன்)- கோவிலில் திருப்பள்ளி எழுச்சிக்கு ஊதின சங்கின் ஒலி பேரரவமாய்க் கேட்கவில்லையா? **பிள்ளாய்........ வித்தினை -** பிள்ளாய்! பாகவதர்களோடு கூடி பகவானை அநுபவிப்பதில் புதியவளே! அதிகாலையில் (பிரம்ம முகூர்த்தம் - நாரயணனின் நேரம்) நாம் எழுந்து அந்த நேரத்தில்; பூதனை என்னும் பேய் (அரக்கி) தன்னுடைய ஸ்தனத்தில் கண்ணனைக் கொல்ல வைத்திருந்த விஷத்தை அறிந்து, அந்த நஞ்சோடு அவள் உயிரையும் உண்டு, கள்ளமாய்ச் சகடத்திலே ஆவேசித்துக் கண்ணனை கொல்ல வந்த சகடாசுரனை விளையாட்டாகத் தன் பிஞ்சுக் காலால் உதைத்துக் கொன்று, இதை (இப்படி விரோதிகளையெல்லாம்) பெரிய முயற்சியோடு போரிடாமல், வெறும் விளையாட்டாகவே செய்த அந்த பகவான் க்ருஷ்ணன் நம்மிடத்திலும், தன்னை பெரிய பரவாசுதேவனாய்க் காட்டாமல் நாம் அவனைக் கிட்டி அநுபவிக்கலாம்படி ஸௌலப்யத்துடன் இக்கோயில்களில் எழுந்தருளியுள்ளான். அவனை அந்தக் கோவிலில் போய் பகவதனுபவம் செய்யவேண்டும். **உள்ளத்து.....பாவாய்** -சதா பகவானுடைய குணானுபவத்தில் மூழ்கியிருக்கும் முனிவர்களும், யோகிகளும் கூட மெள்ள எழுந்து "**ஹரி! ஹரி!**" என்று பேரரவமாய் நாமஸங்கீர்த்தனம் செய்து கொண்டு கோவிலுக்குக் கிளம்பி விட்டார்கள். அதைப் பார்த்து சந்தோஷத்துடனும் உத்வேகத்துடனும் நீயும் "**ஹரி! ஹரி!**" என்று சொல்லிக்கொண்டு உடனே எழுந்து எங்களுடன் வா என்கிறார்.

**விசேஷார்த்தம்:-** கோயிலில் வழிபாடு

அர்ச்சாவதார எம்பெருமானைத்தான் பற்ற வேண்டும். பகவானைப் பற்றுவதற்கு தேச, கால, அதிகாரி நியதியில்லை ருசியே வேண்டுவது. ஆனால் அதைச் செய்வதற்கு குணபூர்த்தியுள்ள இடம் வேண்டும், அந்த இடத்தில்தான் நாம் பகவானைப் பற்ற வேண்டும். நம்மை அநுக்ரஹிப்பதற்காகவே நம் க்ருஹங்களிலும், கோவில்களிலும் பகவான் **அர்ச்சாரூபியாய்** பூர்ணமான தன் கல்யாண குணங்களுடன் ஸாந்நித்யம் செய்திருக்கும் இருப்புதான் அர்ச்சாவதாரம். முக்கியமாக கலியுகத்தில் அர்ச்சையில் தான் பகவானைப் பற்ற வேண்டும் என்கிறார்.

**உபதேசம்-** காலையில் (சிற்றஞ்சிறுகாலை 3.00) பிரம்ம முகூர்த்தத்தில் "**ஹரி! ஹரி!**", என்று 7முறை சொல்லிக்கொண்டே எழுந்திருக்க வேணும் என்கிறார். அந்த நேரம் பகவான் பக்தர்கள் சந்திக்கும் நேரம், அந்த நேரத்தில் பக்தி செய்வது மிகவும் முக்கியம் என்கிறார். புள் - என்று குருவைச் சொல்லிற்று. (ஜ்ஞானம், அநுஷ்டானம் இரண்டையும் இரண்டு சிறகுகளாய்க் கொண்டு சீடனை இறைவனிடம் சேர்ப்பிப்பவன் குரு).



*பைரவி ராகம் - மிச்ரசாபு தாளம்*

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தன்* கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே*
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து*
வாச நறுங்குழல் ஆய்ச்சியர்* மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ*
நாயகப் பெண்பிள்ளாய் நாரா யணன்மூர்த்தி*
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ*
தேசம்உடையாய் திறவேலோ ரெம்பாவாய். (7)

இந்த பாசுரத்தில் பாகவத ரஸம் (ஈடுபாடு) அறிந்தும் மறந்து உறங்குபவளை எழுப்புகிறார்கள். இவளும் விடியலுக்கு அடையாளம் கேட்கிறாள். இவள் வீட்டிற்குச் செல்லும் போது கால விளம்பம் (சிறுகாலை பொழுது-4.00) இந்த விடியலின் இரண்டாம் நிலையை ஸ்ரீஆண்டாள் ஒரு இயற்கை நிகழ்ச்சியையும், சில மனிதர்களின் கார்யங்களையும் விடியலின் உதாரணமாய்க் காண்பித்து, அதன் மூலம் செய்திகளையும் சொல்கிறார்.

**கீசுகீசு....பேரரவம்** - பரத்வாஜ பக்ஷிகள் (ஆனைச்சாத்தான்-வலியன்குருவி) இரைதேடக் கிளம்பு முன் ஆணும் பெண்ணும் ஜோடியாக கலந்து பேசும் சப்தம் ஒரே பேரரவமாய்க் கேட்கவில்லையா? என்றும், **காசும்....தயிரரவம்** - நிஷ்காம்ய கர்ம யோகிகளான கோபிகைகள் தம் ஜாதிக்குசிதமான கார்யமாகிய மத்தினால் தயிர் கடையும் சப்தமும், அப்படி அவர்கள் தயிர் கடையும் போது அவர்களுடைய கழுத்தில் அணிந்துள்ள ஆபரணங்கள் ஒன்றோடொன்று உராய்வதால் உண்டாகும் சப்தமும், அத்துடன் அவர்கள் இந்த நித்ய கர்மாவைச் செய்யும் போதே அதை கர்மயோகமாக மாற்ற, பகவந் நாமாவை அவர்கள் உச்சஸ்வரத்தில் பாடும் சப்தமும் பேரரவமாய் உங்கள் காதில் கேட்கவில்லையா? என்றும் கேட்கிறாள். (இக்காலத்திலும் சூரிய உதயத்திற்கு முன்பே பால், தயிரிலிருந்து வெண்ணையெடுப்பதுண்டு).

முதலில் பாகவத விஷயத்தை உணர்ந்து மறந்ததால் பேய்ப்பெண்ணே! என்றார்கள். பிறகு அவளையே உத்ஸாகப்படுத்தி நீ எங்களுக்கு பிரியமான நாயகப்பெண்பிள்ளாய்! என்றும். தேஜஸ் உடையவளே என்றும், அன்பு ததும்ப ஏசுவதும், கொஞ்சுவதுமாக நட்புதோற்றச் சொல்லுகிறார்கள். **நாராயணன்.. பாவாய் - "நாராயணன் மூர்த்தி கேசவனைப் பாடவும்" - நாராயணன்** என்று வாத்ஸல்யத்தினால் ரக்ஷிப்பவனையும்; **மூர்த்தி** என்று அவனுடைய ஸௌசீல்யத்திலே ஆழங்கால் பட்டதையும், **கேசவன்** என்றும் கண்ணுக்குத் தோற்ற நின்று விரோதிகளைப் போக்குபவன் என்ற அர்த்தத்திலும் சொல்கிறார்கள். நமக்கு விரோதியாய் இருக்கும் கேசியை வதம் பண்ணிய கேசவனைப் பாடுகின்றோம் நாங்கள். அதை நீ கேட்டுக் கொண்டே உறங்குவது போல் இருக்கலாமா? போதும் உறங்கியது, **தேசமுடையாய்**-சேஷத்வ ஜ்ஞானத்தினால் உண்டாகியிருக்கும் உன்னுடைய தேஜஸ்ஸை நாங்களும் காணும்படி வந்து எங்களுடன் கலந்து கண்ணனை பாடு என்கிறார், இப்பாசுரத்தில்.

**விசேஷார்த்தம்:-** சேஷத்வஜ்ஞானம்

கீழ்பாட்டில் பகவானை அர்ச்சையில்தான் பக்தி செய்ய வேண்டும் என்றார். இப்பாட்டில் அப்படி பக்தி செய்யும் போது, சேஷத்வ ஜ்ஞானத்தோடு செய்யவேண்டும். அதாவது எம்பெருமானுக்கு நாம் அடிமை



*தன்யாசி ராகம் - மிச்ரசாபு தாளம்*

கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு*
    மேய்வான் பரந்தனகாண்; மிக்குள்ள பிள்ளைகளும்*
போவான்போ கின்றாரைப் போகாமல் காத்து* உன்னைக்
    கூவுவான் வந்துநின்றோம்* கோது கலமுடைய
பாவாய் எழுந்திராய் பாடிப் பறைகொண்டு*
    மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய*
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்*
    ஆவாவென் றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய். **(8)**

**பாடி.......எம்பாவாய்** அதற்கு ஆண்டாள், "நாம் இதுவரை அனுபவித்த ஐசுவர்யம் போலேயா இப்போது பெறப்போவது! ஸ்ரீக்ருஷ்ணானுபவம் **மகா ஐசுவர்யம்** இல்லையா? நாட்டார் அறியாதபடி இத்தனை நாட்கள் மனதிற்குள் அனுபவித்து வந்த ஸ்ரீக்ருஷ்ணானுபவத்தை ப்ரீதிக்குப் போக்கு வீடாக நெஞ்சில் பொங்கி ப்ரவாகமாகப் பெருகும் க்ருஷ்ணனின் கல்யாண குணங்களை, அணைக்கடந்து பெருகுமாறு இருப்பதை, வாய்க்கால் வெட்டி விட்டு சீராகப் போக்கு செய்வதுபோல், விரோதி நிரஸனம் பண்ணிய (கேசியை கொன்றது, மல்லரை மாய்த்தது) கண்ணனின் வீரப்ரதாபங்களை வாயார நாம் நினைத்தபடி பாடுவோம். அவன் பெருமையைக் கேட்டுக் கொண்டே ஆனந்தமாய் தூங்காதே, எங்களுடன் நீயும் சேர்ந்து பாடு' என்கிறார்கள்.

இப்படி நாம் பாடிக்கொண்டு தேவர்களுக்கெல்லாம் தேவனான அவனை அவனிருக்குமிடம் சென்று (கோயில்களில்) வணங்கினால், ஐயோ! நாம் இவர்கள் இருக்குமிடம் சென்று அவர்களுக்கு அருள வேண்டியிருக்க, இவர்களை இவ்வளவு தூரம் நடக்க வைத்தோமே என்று, நம் உள்ளக்கிடக்கையை ஆராய்ந்து ஆ! ஆ! என்று பாரித்துக் கொண்டே மனம் இரங்கி நமக்கு அருள் செய்வான் என்கிறார். இவ்விடத்திலே பட்டர் சேதனர்களின் மனமறிந்து அவர்களின் தாபத்திற்கேற்ப இவன் இஷ்ட பூர்த்தி செய்வான் என்றருளிச் செய்வாராம். உன் சேஷத்வ ஞானத்தை (பகவானுக்கு நான் அடிமை என்ற ஜ்ஞானம்) நீ அறிந்ததோடு நில்லாமல், அதை செயல் வரையில் பரிமளிக்கும்படி செய்ய வேண்டும் என்றழைக்கிறார்கள்.

**விசேஷார்த்தம்:-** பாரதந்திரியம்

இந்த பாசுரத்தில், "**இலை, பூ, பழம், தீர்த்தம் இவற்றில் ஏதேனும் சுலபமாகக் கிடைக்கக் கூடியதை எனக்கு அன்போடு சமர்ப்பித்தால் அதை நான் திருப்தியாக ஏற்றுக் கொள்கிறேன்**", என்ற கீதாசார்யன் வார்த்தையை நினைவூட்டுகிறார். அர்ச்சையில் பகவான் ஆராதனை செய்வதற்கு, சுலபனாக எழுந்தருளிருக்கிறான். அப்படி சுலபமான பகவானுக்கு கைங்கர்யம் (தொண்டு) செய்து நம்முடைய தாஸ்ய ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்திக் கொள்ளவேண்டும்.

"**நாட்டாருக்கு நோன்பு, நமக்கு அந்த தேவாதிதேவன் புகழ்பாடி அவனை சேவித்து, அவனுக்குத் தொண்டு செய்வதே புருஷார்த்தம்**" (அதுவே மேலான பலன்) என்கிறார்.

**விசேஷகுறிப்பு:**

கிழக்கு வெளுத்தது- ஸத்வ குணம் தலையெடுப்பதற்கு அறிகுறி; எருமை சிறு வீடு மேய்வான் பரந்தன காண் - தமோகுணங்கள் நம்மை விட்டு விலகி போவதற்கு அறிகுறி; கோது கலமுடைய பாவாய் - பகவானுடைய அபிமானத்திற்கு முற்றிலும் தகுதி வாய்ந்த பாகவதரைக் குறிப்பது. இவரை முன்னிட்டுக் கொண்டு பகவானை அணுகுவதற்கு ஏற்ற காலம் வந்தது என்கிறார்.

(மாவாய் பிளந்தவனை - அஹங்கார நிரஸகனை, மல்லரை மாட்டிய - காம, க்ரோத நிவர்த்தகனை)

இதுவரையில் ஆண்டாளால் எழுப்பட்டவர்கள் **(ஐசுவர்யார்த்தி)** என்னும் நிலையில் கிடந்தவர்கள். பகவத் பக்தியையும் பாகவத பக்தியையும் ஆண்டாள் உணர்த்த உணர்ந்தவர்கள். இப்பாட்டிலிருந்து இதற்கு அடுத்த நிலையான உபாசனை நிலையிலுள்ளவர்களையும், அந்நிலையைத் தவிர்த்து, சாது சத்சங்கத்தில் கூடி திருநாம சங்கீர்த்தனத்திலும், பகவத் கைங்கர்யத்திலும் ஈடுபட அழைக்கிறார்.

இப்பாட்டில், "**உடைமைப் பொருளைக் காப்பது உடையவனுக்கே பொறுப்பு என்று க்ருஷ்ணன் வந்து தன்னை ஆட்கொள்ளும் போது கொள்ளட்டும்**" என்றும் படுத்திருக்கும் ஒரு கோபிகையை எழுப்புகிறார்கள். "**ஸ்வரூபத்தையுணர்ந்து வந்து அநுபவிக்கை அவன் கார்யமிறே**" (4யிரப்படி) என்று தன் சுகத்தில் ஆழ்ந்திருக்கிறாள்.இவள், கீழே மூன்று பாசுரங்களில் சொல்லியவர்களைக் காட்டிலும் உயர்ந்த நிலையில் உள்ளவள் என்று தோற்றும்படி இருப்பவள்.

(நம்மாழ்வார், "**துவளில் மாமணி மாடம்**" என்று பெருமாள் மாளிகையை, ஒரு காலத்தில் அழுக்கு அடைந்திருந்து, பின்னர் அழுக்கு நீக்கிய மணிகளாலே புதுப்பிக்கப்பட்டது என்றார். ஆனால் ஆண்டாள், ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமாளிகையை "**தூமணிமாடம்**" என்று இயற்கையாகவே தூய்மையான ரத்தினங்களாலே கட்டப்பட்ட மாளிகை, எப்போதும் தூய்மை பெற்றது என்கிறார்).

**தூமணி....வளரும்** தூய்மையான ரத்தினங்களால் இழைக்கப்பெற்ற மாளிகையில், எல்லா இடத்திலும் மங்கல தீபங்கள் ஒளி விடவும், நறுமண மிக்க தூபம் கமழும் படியாகவும், படுத்தவுடன் தூங்கச் செய்யும் படுக்கையின் மேல் ஆனந்தமாய் கண்ணுறங்குபவளே! **மாமான்...... பட்டாளோ** "எங்களுக்குகெல்லாம் மாமன் மகள் என்று உறவு சொல்லும்படி இருப்பவளே! உன் வீட்டு வாசலில் நாங்கள் நெடு நேரமாய்க் காத்து நிற்கிறோம், உங்கள் வீட்டு மாணிக்கக் கதவுகளின் தாள்களைத் திறக்கவேண்டும். மாமி உங்கள் பெண் என்ன ஊமையோ? அல்லது காது கேளாதவளோ? களிப்பினால் உறங்குகிறாளோ? நெடுநேரம் தூங்கும்படி மந்திரத்தால் கட்டுண்டாளோ? **மாமாயன்....பாவாய்** ஆச்சர்யமான செயல்களை உடையவன், லக்ஷ்மி நாதன், வைகுந்தன் என்று பலபல நாமங்களைச் சொன்னோம் அப்படியும் எழுந்திருக்கவில்லை. மாமி நீங்கள்தான் அவளை துயிலெழுப்ப வேண்டும்" என்கிறார்கள்.

குற்றமற்ற திருமேனியும், அத்திருமேனியில் ப்ரகாசிக்கும் ஜ்ஞான தீபமும், பரிமளிக்கும் ஜ்ஞான தூபமும், அநுஷ்டானரூபமாய் ப்ரகாசிக்கும் படி எம்பெருமானையே உபாயமாகப்பற்றிக் கிடக்கின்ற நிலை. உம்மோடு நாங்கள் கலப்பதற்கு விரோதியாய் உள்ள எங்கள் தேகாத்ம அபிமானங்களைப் போக்க, எங்களுடன் கலக்க வாரீர். ஆழ்ந்த



ஹமீர்கல்யாணீ ராகம் - ஆதி தாளம்

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய*
 தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்*
மாமான் மகளே மணிக்கதவம் தாள்திறவாய்*
 மாமீர்! அவளை யெழுப்பீரோ உன்மகள்தான்*
ஊமையோ? அன்றிச் செவிடோ அனந்தலோ*
 ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ*
மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று*
 நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய். (9)

க்ருஷ்ணானுபவத்தில் உள்ளதால் நாங்கள் அழைப்பது உன் காதில் விழவில்லையோ! க்ருஷ்ணானுபவத்தில் மயங்கிக் கிடக்கின்றீரோ! என்ன, அதற்கு பதில் எதும் வராததை கண்டு, அவள் பகவானையே உபாயமாகப் பற்றி இருக்கும் **ஜ்ஞானத்தைச்** சொல்லிக் கூப்பிடுகிறார்கள். அவள், 'தோழிகாள்! இவள் உணர வேண்டுமாயின் பகவானின் திருநாமங்களைச் சொல்லுங்கள்' என்று உபாயம் உரைக்கிறாள்.

உடனே அவர்கள் மாமாயன்-அளவிடவொண்ணாத ஆச்சரியமான சேஷ்டிதங்களை உடையவன்; மாதவன்-அதுக்கடியான ஸ்ரீய: பதித்வத்தாலே வந்த மேன்மைக்குத் தகுதியான விசேஷத்தையுடையவன், பெரிய பிராட்டியின் வல்லபன்; மாமாயன்- அவன் நித்ய ஸூரிகளுக்கு நிர்வாஹகனாயிருந்தும், மேன்மை பாராதே இவ்விடத்திலே எழுந்தருளி இடைச்சிகளான நமக்குக் கட்டவும், அடிக்கவுமாக இருக்கின்றவன். வைகுந்தன் - பரமபதநாதனான அவன் தனக்கு ஆக வேண்டியது ஒன்றும் இல்லாவிடினும் நம்மோடொக்க வரவில்லையா! என்று அவனுடைய பரத்வ, ஸ்ரீய: பதித்வ, ஸௌலப்யாதி திருநாமங்களை சொல்லி, அவனை விட ஏற்றம் பெற்றவர்களா நாம்! என்று எழுப்ப, உடனே வெட்கத்துடன் அவள் "**நான் வந்து ஆவதென்ன?**" என்று கேட்கிறாள். அதற்கு ஆண்டாளும், "**அம்மா க்ருஷ்ணனை எங்களுடன் வந்து சேவிப்பதால் உனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை, இருப்பினும் நீ எங்களுடன் வந்து சேர்ந்து கொண்டால் நாங்கள் ஏற்றம் பெறுவோம்!**" என்றார். உடனே அவள் தன் நிலை உணர்ந்து பாகவத கோஷ்டியுடன் கலந்து கொண்டாள். இதன்மூலம் (**ஏமப்பெருந்துயில்**- ஆழ்ந்த க்ருஷ்ண சமாதியில் உள்ளவள்), **ஏகாந்த ஸ்மரணை** - இது தவிர்க்கப் படவேண்டும் என்கிறார்.

**விசேஷார்த்தம்:-** பாரதந்த்ர்ய போக்யதை

"சேஷத்வபோக்த்ருத்வங்கள்"போலன்றே "பாரதந்திரயபோக்யதைகள்" (ரஹஸ்யக்ரந்தங்களிலே ஒரு வாக்யம்)

ஒரு ஜீவனுக்கு சேஷத்வம், **பாரதந்த்ர்யம்** அதேபோல போக்த்ருத்வம், **போக்யத்வம்** இந்நான்கில், "**பாரதந்த்ர்யமும் போக்யதையுமே**" மேலானது.

**சேஷத்வம்**: - பகவானுக்கு அடிமையாய் அவன் கைங்கர்யம் கொள்ள யோக்யதாய் இருப்பது - கட்டிப்பொன்போலே (கட்டித்தங்கம் அல்லது பிஸ்கட் தங்கம்)

**பாரதந்த்ரியம்**: - பகவான் தனக்கு சேஷமான ஜீவனைக்கொண்டு தனக்கு இஷ்டமான கைங்கர்யங்களைக் கொள்ளுதல் - இது பணிப்பொன் போலே (பொன்னால் செய்த திருவாபரணங்களைப் போல) இதை இஷ்டம் போல் பகவான் ப்ரீதியுடன் அணிந்து கொள்வான்.



தோடி ராகம் - ஆதி தாளம்

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்*
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்*
நாற்றத் துழாய்முடி நாராயணன்* நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால்* பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கருணனும்*
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ*
ஆற்ற அனந்தல் உடையாய் அருங்கலமே*
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்* (10)

**போக்த்ருத்வம்**:- ஜீவன் அறிவுள்ளவன், ஆகையால் இக்கைங்கர்யம் செய்யும்போது "**நாமே செய்தோம்**" என்ற எண்ணமும் சந்தோஷமும் ஏற்படும். இது **தோஷகோடி**யில் சேர்ந்துவிடும்.

**போக்யத்வம்** : இவன் செய்யும் கைங்கர்யத்தால் பகவான் ஆனந்திக்க வேண்டும். இவன் பகவானால் ஆனந்திக்கப்படும் பொருளாகவே இருக்க வேண்டும். (**திருவாபரணம்** போலிருக்கவேணும்) திருவாபரணத்தை அணிந்து கொள்பவனன்றோ சந்தோஷிப்பான், திருவாபரணம் சந்தோஷிக்குமோ!

அதாவது பணிப்பொன் என்றால் ஆபரணங்களாகச் செய்யப்பட்ட நிலை, இதை எம்பெருமான் தன் விருப்பம் போல் அணிந்து கொண்டு ஆனந்திக்கிறான், ஆனால் அந்த ஆபரணம் ஆனந்திக்காது) அந்நிலையில் தான் **சேதனனும்** இருக்க வேண்டும். இப்படி பகவானை ஆநந்தமடையச் செய்யும் நிலைக்கு, **போக்யதை** என்று பெயர்.

இதற்கு உ.ம். ஸ்ரீக்ருஷ்ணன் தன் மேன்மை பாராதே, நம்மிடம் தன் சேஷ்டிதங்களைக் காண்பித்து நம்மை மயக்குகிறான் இல்லையா? அதே போல் நாமும் படுத்துறங்கி, தனியாய் (கட்டிப் பொன் போலே) மனதில் க்ருஷ்ணனை அனுபவிக்காமல், குழாங்களுடன் கலந்து "**ஆடிப்பாடி அரங்கவோ**" என்றுமாப் போலே நம் அன்பை வெளிப்படுத்திக் காண்பித்து நம்மிடத்தில் அவனுக்குப் பிரியம் ஏற்படும் படிசெய்ய வேணும். ஏகாந்த ஸ்மரணத்தை விட கோஷ்டி கானமே சிறந்தது என்றும், அதுவும் அவனுடைய அன்பிற்கு எதிர்விழியாகவும், அவனுக்காகவுமே இருக்கவேண்டும் என்றும் சிக்ஷிக்கிறார்.



## 10ஆம் ப்ாசுரம் நோற்றுச் சுவர்க்கம்

இப்பாசுரத்தில், மிக்க அறிவுடையவளும், கண்ணனுக்கு அந்தரங்கமானவளும், நோன்பின் பலன் கை புகுந்தவளுமான இவள் க்ருஷ்ணனை நோக்கி இருக்க, க்ருஷ்ணன் இவளை நோக்கிக் கிடக்கும் படியான யோகத்தைப்பெற்றவள் அப்படிப்பட்ட ஒருத்தியை எழுப்புகிறார்கள். (இதுவும் ஏகாந்த ஸ்மரணையே - பெருந்துயில்) க்ருஷ்ணன் தானே மேலே விழும்படியான அதிசயத்தை உடையவள்.

**நோற்று....திறவாதார்** நோன்பு நோற்காமலேயே க்ருஷ்ணானுபவம் பண்ணுகிறவளே, அம்மனாய்! எங்களை எழுப்புவதாய்ச் சொல்லி நீ இன்று உறங்குவதேன்! நீ வாசல் கதவைத் திறக்காவிடினும் ஒரு வார்த்தை சொல்லலாகாதா? **நாற்றத்துழாய்......புண்ணியன்** சித்த தர்மமான ஸ்ரீமந் நாராயணனே நாம் போற்றும் தெய்வம் அவனைப்

போற்றினால் நம் அபிமதத்தைக் கொடுக்கும் புண்ணியன் அவன் "**க்ருஷ்ணன் தர்மம் சநாதனம்**" என்கிறபடி சித்த தர்மமான **மூலசுக்ருதம்** அவனே. **பண்டு...தந்தானோ** முன்னொரு காலத்தில் எமன் வாயில வீழ்ந்தொழிந்த கும்பகர்ணன் தூங்குவதில் உன்னிடம் தோற்று, அவனிடமிருந்த பெரும் தூக்கத்தை உனக்குக் கொடுத்துச் சென்றானோ! என்கிறார்கள். உடனே இவள், "**அட, அஸஹ்யாபசாரம் செய்த அசுரப்பயலை நமக்கு ஒப்பாகச் சொல்லும்படி வைத்துக் கொண்டோமே**" என்று சட்டென்று எழுந்தாள். இதைப் பார்த்த தோழிகள், எங்களுக்கெல்லாம் சிரோமணியாய் விளங்குபவளே! அவனுடைய கல்யாண குணங்களை எங்களுடன் கலந்து பாடி அனுபவி, அவனைத் தனியாக அனுபவித்தாயானால் அவனுடைய சௌந்தர்ய சமுத்திரத்திலே மூழ்கிவிடுவாய். (செஞ்சொற்கவிகாள்! உயிர்காத்து ஆட்செய்மின்) **ஆற்ற...எம்பாவாய்** க்ருஷ்ணனை உன்னிடமே விரும்பி இருக்கும் படியான **சுக்ருதம்** நிரம்பப் பெற்ற அருங்கலமே! (செம்மையான பாத்திரமானவள்), (அவன் அன்பிற்குப் பாத்திரமானவள்). நாங்கள் வாசலில் இருக்கிறோமாகையால் படுத்திருந்தபடியே வராமல், ஸதஸ்யையாய் வந்து கதவைத் திறந்து எங்களுடன் கலந்து கொள். (உன் ஆடை ஆபரணங்களைத் திருத்திக் கொண்டு கோஷ்டியில் கலக்க யோக்யதையாய் வா என்கிறார்கள்).

**பெருந்துயில்** - ஸ்ரீக்ருஷ்ண சமாதியில் ஆழ்ந்துகிடப்பவர்கள். இவர்களின் நிலையை ஆண்டாள் வெறும் சுயநலமே ஆகையால் இதைத் தவிர்க்கவேண்டும் என்கிறாா். **நோற்று** - பகவானே ரக்ஷகன் என்று அவனை நாம் பற்றினால்; **புண்ணியன்** - சித்த தர்மமான அந்த பகவானே; **பறைதரும்** - நம் அநிஷ்டத்தைப் போக்கி இஷ்டத்தைக் கொடுத்து ரக்ஷிப்பான் என்கிறார்.

**விசேஷார்த்தம்:-** சித்ததர்மம்

நாம் செய்யும் சரணாகதியோ, பக்தியோ, மோக்ஷோபாயமன்று, சித்த தர்மமான பகவானே உபாயம் என்பது தான் தத்வம். நாம் செய்யும் **பகவத்பக்தி, பஜனம், சரணாகதி** இவையெல்லாம் நம் ஸ்வரூபத்திற்குச் சேரச் செய்யும் சைதன்ய கார்யமே ஒழிய பலன் கொடுப்பவன் சித்த தர்மமான பகவானே என்பதுதான் உண்மை. இப்படிச் செய்வது எல்லாம் அதிகாரி விசேஷணம் என்பர். இவையெல்லாம் அவன் ரக்ஷணத்திற்கு நம்மை தகுதியுள்ளவர்களாயாக்குகிறது.



ஸ்ரீக்ருஷ்ணனுக்கு எல்லாவற்றிலும் ஒத்தவளாய் இருப்பாள் ஒருத்தியை, எழுப்புகிறார்கள். கோவலர்தம் பொற்கொடி, புற்றரவல்குல் புனமயில், செல்வப் பெண்டாட்டி என்கிற பதங்களை கவனிக்கும் போது குலத்தாலும், ரூபத்தாலும், குணத்தாலும், எல்லாவற்றிலும் மேம்பட்டு விளங்கும் ஒரு கோபிகை என்று தெரிகிறது.

**கற்று...பொற்கொடி** ஸ்ரீக்ருஷ்ணனின், கை ஸ்பரிசத்தாலும், அவன் குழலிசையையுமே கேட்டு வளர்ந்த பசுக்களானபடியாலே எப்போதும் இளமையாகவும், வயதாகாமலேயே கன்று போட்டு பால் கறக்கும் பசுக்கூட்டங்கள் பல உடைய ஒரு கோபாலன். இப்பசுக்களையெல்லாம் அவன் ஒருவனே பாலைக்கறந்து, தன் குல தர்மத்தை விடாமல் செய்பவன். ஸ்ரீக்ருஷ்ணனின் பெருமையை சகியாதவர்களின் மிடுக்கை அழியச் செய்கிறவன். இப்படி நித்யகர்மாவை பகவத் கைங்கர்யமாகச் செய்யும் ஒரு கோபாலனின் தங்கையை எழுப்புகிறார்கள். கர்ம, ஞான, பக்தி யோகங்களைக் குற்றமில்லாமல் பகவதர்ப்பணமாகவே செய்கின்றவர்களும், ப்ரயோஜனத்தையிட்டு கர்மாவை செய்யும் தோஷமில்லாதவர்களுமான, ஆயர்களுடைய குலத்தில் பிறந்தவளே! ஆயர்குலத்திற்கே ஒரு அலங்காரமாய் விளங்கும் பொற்கொடியே! என்கிறார்கள். (கண்ணன் ஆய்ப்பாடிக்கு அணிவிளக்கென்றால்-நீ கோவலர்தம் பொற்கொடி என்கிறார்).

**புற்று....போதராய்** பெண்களும் மயங்குபடியான மயிலைப் போன்ற அழகுடையவளே! "**எங்களைப்பிரிந்து தரியேன்**" என்றவளே! எழுந்திரு என்கிறார்கள். உடனே அவள் மற்றெல்லாரும் வந்து விட்டார்களோ? என்று கேட்கிறாள்.

**சுற்றத்து...பாட** இவ்வூரிலுள்ள அனைத்து தோழிமார்களும் வந்து உன் வீட்டு முற்றத்தில் உன் வருகைக்காகக் காத்து நிற்கிறார்கள். ஸ்ரீக்ருஷ்ணனை உன்னுடைய ரூபலாவண்யத்தால் பிச்சேற்ற வைப்பவளே! நீ வந்தாலன்றோ, பகவான் எங்களுக்கு முகம் கொடுப்பான். நீ இப்படி அசையாமல் (ஆடாமல்) க்ருஷ்ணனுக்கு பக்தி பண்ணிப் படுத்துறங்குவதில் ப்ரயோசனம் என்ன? க்ருஷ்ணவல்லபையான உன்னுடன் கூடி நாங்களும் அந்த அனுபவத்தைப் பெற வேண்டாமா! அத்துடன் க்ருஷ்ண ஐசுவர்யத்தை உன்னிடமே வைத்திருக்கும் செல்வப் பெண்டாட்டியன்றோ நீ! எதனால் இன்னும் உறங்கிக் கொண்டிருக்கிறாய்? க்ருஷ்ண பக்தியால் உண்டான உன் தேஜஸாலே எங்களையும் சோபிக்கும்படி செய்யவேண்டும் என்கிறார்கள். க்ருஷ்ணன் மட்டும்தான் உன் வீடே கதியென்று இருக்கிறான் என்பதில்லை. பாகவதர்யகளாகிய நாங்களும் உன் வீட்டு வாசலில் வந்து **முகில் வண்ணன்** பேர்பாடும் படியான செல்வத்தை உடையவளன்றோ நீ! தனி அனுவம் கூடாது. எழுந்து வந்து எங்களுடன் கலந்து கொள் என்கிறார்கள். (பொதுவாக பகவதனுபத்தின் போது தனி அனுபவம் கூடாது. (உபாசனை) இது கைவல்யத்தில் கொண்டுவிடும்)



*உசேனி ராகம் - திரிபுடை தாளம்*

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து*
    செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்*
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!*
    புற்றர வல்குற் புனமயிலே போதராய்*
சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்து* நின்
    முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட*
சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டி* நீ
    எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய். (11)

**விசேஷார்த்தம்**:- கர்மானுஷ்டானம் செய்தல்

ஒருவன் பகவானைச் சரணம் பற்றி தன் பரத்தை (ரக்ஷணத்தை) அவனிடம் சமர்ப்பித்தபின் தன் ஆத்மக்ஷேமத்திற்காக ஒன்றும் செய்வதற்கில்லை, என்று மார்பில் கை வைத்து நிர்பரனாய் உறங்கலாம். இவனை **வாழும் சோம்பர்** என்றே சொல்லுவர்.

ஆனால் இவன் இருக்கும் நாளில் வர்ணாச்ரம தர்மத்திற்குச் சேர கர்மாவை பகவத் **ஆக்ஞா** கைங்கர்யமாய் ஒரு பலனையும் இச்சியாமல், ப்ரீதியுடன், உபாய புத்தியோடு செய்யாமல் கர்மா செய்வதையே ப்ரயோஜனமாகச் செய்வான். (உதாரணம்) ஒரு பதிவ்ரதா ஸ்திரீயானவள் பர்த்தாவிற்கும், அவன் சொந்தங்களுக்கும், குழந்தைகளுக்கும் பலவிதமான கைங்கர்யங்களைச் செய்கிறாள், அவர்கள் தனக்கு ஏதேனும் திருப்பிச் செய்வார்கள் என்னும் எண்ணத்துடன் செய்வதில்லை. அவர்கள் மேல் உள்ள ப்ரீதியினால்தான் செய்கிறாள். அதேபோல் எம்பெருமானிடத்தில் உள்ள ப்ரீதி, அவன் விபூதி வரையிலும் செல்லும். அதனால் அவர்கள் செய்யும் ஒவ்வொரு கர்மாவும் பகவத் ப்ரீதியாகவே இருக்கும். (நித்ய கர்மானுஷ்டானமும் - பகவத் கைங்கர்யமே) இப்படி இருப்பதால் செய்யும் செயல்கள் மிகவும் ஒழுக்கமாகவும் நேர்த்தியாகவும் அமையும். இப்படியான பயிற்சியில் ஸ்வதர்மத்தைச் செய்தால் ஒரு நல்ல சமுதாயம் உருவாகும். செல்வம் முறை நீங்கிச் செழிக்கும் என்ற ஒரு நல்ல பண்பைத் தெரியப்படுத்துகிறார் இப்பாட்டில்.



## 12ஆம் பாசுரம் கனைத்திளங் கற்றெருமை

ஸ்ரீக்ருஷ்ணனுக்கு (லக்ஷ்மணனைப் போல்) அந்தரங்க கைங்கர்யம் செய்பவனும், க்ருஷ்ண பக்தியிலேயே எப்போதும் ஈடுபட்டு ஸ்வதர்மத்தை மறந்த உத்தமனுமான ஒரு கோபாலகனுடைய (ஜ்ஞானி) தங்கையை எழுப்புகிறார்கள்.

**கனை...நங்காய்** இவனுக்கு இளங்கன்றுகள் உள்ள எருமைகள் பல உண்டு. இவன் இப்படி ஸ்வதர்மத்தை மறந்து க்ருஷ்ண கைங்கர்யத்திலேயே ஈடுபட்டிருந்ததால், இவன் அந்த எருமைகளுக்குப் பால் கறக்கவில்லை. இதனால் எருமைகள் கதறித் தம் கன்றுகளை நினைத்துப் பால் சொரிந்தனவாம். அப்பால், பூமியில் பரவ, அந்த எருமைகள் அப்பாலைக் காலால் துகைத்துச் சேறாக்கி விடுகின்றனவாம்.

இப்படி "**ஸ்வதர்மத்தை விட்டு வருவது குற்றமில்லையோ? கீழ்ப்பாட்டிலே ஸ்வதர்மத்தை ஒழுங்காகச் செய்ய வேண்டும் என்றாரே**" என்னில், இவனை ஆண்டாள் **நற்செல்வன்** என்கிறார். ஏனெனில், இந்த மாதிரியான பக்தி ஒரு சிலருக்கே வாய்க்கும். அப்படிப்பட்டவனின் தங்கையே! நீயும் க்ருஷ்ணானுபவம் பண்ணிக் கொண்டு பேருறக்கம் கொண்டாயோ! நல்லது போ.



*கேதார கௌள ராகம் - ஆதி தாளம்*

*கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி**
*நினைத்து முலைவழியே நின்றுபால் சோர**
*நனைத்தில்லம் சேறுக்கும் நற்செல்வன் தங்காய்!**
*பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றி**
*சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற**
*மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்**
*இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்**
*அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்.* (12)

**பனி..... திறாவாய்** நாங்கள் உங்கள் முற்றத்தில் காலுக்கடியில் பால் வெள்ளம் மேலே பனிவெள்ளம். நெஞ்சிலே அன்பு வெள்ளம் இவற்றால் தாளிர்ந்து நடுங்கி, உன் வாசலில் நின்று கொண்டிருக்கிறோம். இனியும் எழுந்திராமல் இராதே, க்ருஷ்ணனைப் போல் தீம்பனன்றி, கோபம் வராத இராமனுக்கும் கோபம் உண்டாகும்படி துஷ்டச் செயலைச் செய்த இராவணனை நிரசித்த, மனத்திற்கு இனியவனான அந்த ஸ்ரீராமனை நீ வாய்திறந்து பாட வேண்டாவோ! **இனி...பாவாய்** இனிமேலாவது எழுந்திரு, கீழ்ப்பாட்டில் க்ருஷ்ணானுபவம் பண்ணுகிறவளை **எற்றுக்குறங்கும்** என்றார்கள், இவளை **ஈதென்ன பேருறக்கம்** என்கிறார்கள். இத்தனை பேர் உன்வீட்டு வாசலில் ராம நாமத்தை உரக்கச் சொல்லிக் கொண்டிருக்கும் போது! அதையும் மீறி மிகவும் ஆழ்ந்து க்ருஷ்ணானுபவம் பண்ணுகிறாயோ! உன் உறக்கத்தை அண்டை வீட்டார் அனைவரும் அறிந்து கொண்டார்கள். (உன் ப்ரபாவத்தால் ஊரெல்லாம் பகவத் ப்ரவணர் ஆனார்கள்) அதனால் உடனே எழுந்து வந்து எங்களுடன் கலந்து ஸ்ரீராமனை பஜனம் பண்ணு என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்:-** கர்மா செய்யாமை (**அநநுஷ்டானம்**).

விசேஷ தர்ம நிஷ்டனுடைய ஆசாரத்தைச் சொல்கிறார். தசரதன் சாதாரண தர்மமான சத்யத்தைக் கடைப்பிடித்து விசேஷ தர்மமான இராமனைக் காட்டிற்கு அனுப்பி நன்மையிழந்து போனான், ததிபாண்டன் க்ருஷ்ணனைப் பானையில் மறைத்து, "**ஸ்ரீக்ருஷ்ணன் இங்கு வரவேயில்லை**" என்று பொய் சொல்லி மோக்ஷமடைந்தான். சித்த தர்மமான எம்பெருமான் கைங்கர்யத்தில் ஈடுபடும் போது சாதாரண கர்மம் கை நழுவினாலும் தோஷ கோடியில் சேராது. ஒன்றைச் செய்யும் போது ஒன்றை விட வேண்டியிருந்தால் விசேஷ தர்மத்தைப் பற்றி சாதாரண தர்மத்தைவிட வேண்டியது. விசேஷதர்மம்-பகவத் பாகவத கைங்கர்யம், சாதாரணகர்மம்- சரீரஸம்பந்தப் பட்டதும், கர்மமடியாய் வருவதுமாகும்.

**(எருமை கன்றுக்கிறங்கி நினைத்து முலைவழியே நின்று பால்சோர)** எம்பெருமான் அடியார் விஷயத்திலும், ஆசார்யன் சிஷ்யர்கள் விஷயத்திலும் இரங்குவதற்கு அறிகுறி. **(நனைத்து இல்லம் சேறாக்கும்)** - கேட்பவர்கள் நெஞ்சைக் குளிரப்பண்ணும்.

(பாகவத அபிமானத்தைச் சொல்லுவது, பகவத் குணானுபவத்தைக் களிக்கச் செய்வது).

| | | |
|---|---|---|
| *தலைமேல் சொரியும் பனிவெள்ளம்* | - | ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களால் வரும் பகவத் குணானுபவம் |
| *கால் கீழ் ஓடும் பால் வெள்ளம்* | - | ஆசார்ய உபதேசத்தால் வரும் பகவத் குணானுபவம் |

*மனதில் பெருகும் அன்பு வெள்ளம்* - நடுவே பாகவத சம்பந்தத்தாலே சத்சங்கத்தால்) வரும் பகவத் குணானுபவம். (பகவந் நாமத்தால்)

இந்த மூன்று வெள்ளங்களும் ப்ரவாகத்ரயம் என்பர்.



## 13ஆம் பாசுரம் புள்ளின் வாய் கீண்டானை

கீழ்ப்பாட்டிலே, மிகவும் நன்றாகப் பாடக்கூடியவளைச் சொன்னார்கள். அவளை ஸ்ரீராமநாம கீர்த்தனம் செய்ய அழைத்தார்கள். இப்பாட்டில், இவள் கண்ணழகு மிக்கவள், இவளைக் கூட்டிக் கொண்டுச் சென்றால், க்ருஷ்ணன் பரம ரஸிகனாகையால் தங்கள் அபிமதம் ஸித்திக்கும் என்று இவளை எழுப்புகிறார்கள்.

**புள்ளின்.......கார்** ராம, க்ருஷ்ணாதிகளின் கல்யாண குணங்களைப் புகழ்ந்து பாடிச் செல்வோம் வா, நம்மையொத்த பாவைகள் எல்லோரும் பாவைக் களம்புக்கார், நாம் க்ருஷ்ணனுடன் நோன்பு நோற்க நிச்சயித்த இடத்திற்கு (காலக்ஷேபக்கூடம்) போய்க் கொண்டிருக்கிறார்கள். **வெள்ளி......காண்** என்னும் "**விடி வெள்ளி**" கீழ்வானத்தில் சூரியோதயத்தில் தோன்றும் நக்ஷத்திரம் (சுக்ர க்ரஹம்) தோன்றி, வியாழன் நக்ஷத்திரம் அஸ்தமித்து விட்டது. புள்ளும் சிலம்பினகாண் என்னும் இத்தொடர் 6ஆம் பாட்டிலும் வருகிறது. (விடியலை) காலத்தைக் குறிக்கும் இச்சொற்றொடர் இவர்கள் இத்தனை வீட்டைத் தாண்டி வந்த பிறகு எப்படிப் பொருந்தும்? என்னில், (6ஆம் பாட்டில் சிலம்புதல்- எழுந்து கூவி சோம்பல் முறிப்பதைக் குறிக்கிறது. இப்பாட்டில், சிலம்புதல்- கூவிக்கொண்டே இறை தேடச் செல்வதைக் குறிக்கிறது). 13ஆம் பாட்டான இதில் சுக்கிரன் உதயமாகிவிட்டதால் பறவைகள் இரை தேடிச் செல்லும் போது ஆரவாரஞ் செய்துகொண்டு ஒன்றை ஒன்று கூவி அழைத்து கூட்டமாகச் செல்லுதலை உணர்த்துகிறது. ஆகையால் ஆண்டாள் இவ்வடையாளங்களைப் பொருத்தமாகச் சொல்லி வருகிறார். **போதரி.....பாவாய்** தாமரைப் பூவிலே வண்டு படிந்தாற் போன்ற கண்ணழகு நிரம்பினவளே, நீ, (புள்ளின் வாய் கீண்டு), நாரையின் வாயைப் பிளந்த ஸ்ரீக்ருஷ்ணனையும், இராவணனின் தலைகளைப் புல்லைக் கிள்ளுவதுபோல் கிள்ளி எறிந்தவனான ஸ்ரீஇராமனின் வீரத்தையும், அவர்களின் கீர்த்தியையும் பாடி; க்ருணானுபவம் பண்ணலாம் என்று நாங்கள் சென்று கொண்டிருக்கும் போது, நீ "**அவன் படுத்த படுக்கை**" என்று படுக்கையை அணைத்துக்கிடக்கிறாயே! (கண்ட விடமெங்கும் நெல் விளைந்து கிடக்க உதிர் நெல் பொறுக்குகிறாயோ?).



அடாணா ராகம் - மிச்ரசாபு தாளம்

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா வரக்கனை*
　கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்*
பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார்*
　வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று*
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்
　குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே*
பள்ளிக் கிடத்தியோ பாவாய் நீ நன்னாளால்*
　கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய். (13)

**பாவாய் நீ** - க்ருஷ்ணனும் கூட கொண்டாடும்படியான அழகான கண்களையுடைய, பத்மம் போன்றவளே! **நன்னாளால்** - நம்மையும் கண்ணனையும் பிரித்து வைக்கும் ஊராரும், "**இசைந்திருக்கும் நல்ல நாளன்றோ**" இது! காலம் ஸாம்ராஜ்யம் செலுத்தும் தேசத்தில் ஆறியிருக்கின்றதென்? ஆகையால் "**கள்ளம் தவிர்ந்து எங்களுடன் கலந்து கண்ணனை குள்ளக்குளிரக் குடைந்து நீராடு, எழுந்து வா**" என்கிறார்கள். அவனை சூரிய உதயத்திற்கு முன்பு எழுந்து, நெஞ்சு குளிரும்படி பாடி, நம் விரஹதாபம் தீரும்படி ஸ்ரீக்ருஷ்ணானுபவம் பண்ணுவோம். க்ருஷ்ணனைத் தனியாக அனுபவிக்கும் கள்ளத்தனத்தை விட்டு எங்களுடன் வந்து கலந்து அனுபவி, உன்னுடைய அனுபவத்தை எங்களுக்கும் கொடு என்கிறார்கள்.

பொல்லா அரக்கன்- இராவணனை "**பொல்லா அரக்கன்**" என்று விசேஷித்துச் சொல்வானேன்? என்னில், அவன் தம்பி விபீஷணன் தர்ம சிந்தனை மிக்கவனாய், இராமன் திருவடியை ஆசிரயித்து, "**நல்ல அரக்கனாய்**" வாழ்ந்து போனான். ஒரே குடும்பத்தில் பிறந்தவர்களான, இராவணன் பெருமாள் வீரத்திற்குக் கலங்கினான், அவன் தங்கை பெருமாள் ஸௌந்தர்யத்திலே கலங்கினாள், அவன் தம்பி சீலத்துக்கிலக்கானான். ஆக மூன்று பேர்களும் இராமனின் ஒவ்வொரு அழகுக்கு இலக்கானார்கள்.

**விசேஷார்த்தம்**:-ஸ்வரூபஜ்ஞானம்

நமக்கு ஸ்வரூபஜ்ஞானம் உண்டாகில் அவன் தானே வருகிறான் என்றிருக்குமிவள். **புள்ளின் வாய் கிண்டானை** ஆச்ரிதர்களின் அனுபவ விரோதியான காம, க்ரோத, மோக, லோப, மதமாத்ஸர்யங்களைப் போக்கியவனை; **பொல்லா அரக்கனை கிள்ளிக்களைந்தானை** - பொல்லாத அஹங்காரத்தை வேரோடு கிள்ளிக்களைந்தவனை;

அஹங்காரத்திற்கு நன்மை, தீமைகளாவன. (அஹம், மம) என்றால்:- ஈசுவரனும், ஈசுவரவிபூதியும் ஸ்வ அபிமான விஷயமாகத் தோன்றுகை - அஹங்கார நன்மை; தேஹமும் ஆத்மாவும் ஸ்வதந்த்ரமாகத் தோன்றுகை - அஹங்கார தீமை என்கிறார். (**வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று**) இதனால் ஸ்வரூப ஜ்ஞானம் சித்தித்து, அஜ்ஞானம் தலை முடிந்தது. இப்பாசுரத்தால் ஸ்வரூப ஞானம் பரிபூரணமாக உள்ள நீ, தனியாக பகவதநுபவம் செய்யாமல் எங்களுடன் ஒரு நீராய்க் கலந்து கொண்டு உன்னை எங்களுக்குக் காட்டு என்கிறார்.



14ஆம் பாசுரம் **உங்கள் புழக்கடை**

பாவத சமுதாயத்திற்கெல்லாம் முக்கியமானவளாய், தன் நாவன்மையால் (வாக்குச் சாதுர்யத்தால்) பலருக்கும் பகவத் சம்பந்தம் உண்டாக்கவல்ல ஒருத்தி. "**நானாயிற்று இதற்குப் பொறுப்பு, நானே**



ஆனந்தபைரவி ராகம் - மிச்ரசாபு தாளம்

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்*
செங்கழுநீர் வாய்நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பினகாண்*
செங்கற் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்*
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய், நாணாதாய்! நாவுடையாய்!*
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்*
பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய். (14)

**அனைவரையும் முதலில் வந்து எழுப்பி அழைத்துச் செல்கின்றேன்**" என்று சொல்லி, அதை மறந்து தூங்கும் ஒருத்தியை எழுப்புகிறார்கள். இவளும் விடியலுக்கு அடையாளம் கேட்கிறாள். இவள் தோட்டமும் துரவுமாய் வசதியாய் இருப்பவள். அவள் வீட்டுத் தோட்டத்தில் உள்ள சின்னகுளத்தையும், அதில் உள்ள புஷ்பங்களையும் விடியலுக்கு அடையாளமாக காட்டுகிறார்.

**உங்கள்....போகின்றார்** இவளை எழுப்ப வந்தவர்கள், "உன் வீட்டுத் தோட்டத்தில் உள்ள குளத்தில் சூரியன் வரவால் செங்கழுநீர் மலர்கள் மலர்ந்தும், சந்திரன் மறைவால் (ஆம்பல்) கரு நெய்தல் மலர்கள் குவிந்தும் கொண்டன காண்! மேலும், காஷாயம் தோய்ந்த வஸ்த்ரம் தரித்தவர்களும், தாம்பூலாதிகள் தரியாமல் போக்ய விரக்தருமான, வெண்மையான பற்களையுடைய சைவ ஸந்யாசிகள் தங்கள் கோயில்களிலும், திருவாராதன உபகரணமான சங்கை ஊதி, வைராக்கிய ஸ்ரீவைணவர்கள் தங்கள் அநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு, தங்கள் க்ருகங்களிலும் ஆராதனம் துவங்கியதை உணர்த்துகிறார்களே! நீ அறியவில்லையா!" என்று விடியலுக்கு அடையாளம் சொல்கிறார்கள்.

**எங்களை.......நாவுடையாய் "எங்கள் அனைவரையும் நீயே முன்னதாக எழுப்புகிறேன்"**, என்று உன் வாயலே சொல்லி வைத்துக் சொன்னபடி செய்யாதொழிந்தோமே என்னும் வெட்கமுமற்றவளே! பரிபூர்ணயே! இன்சொற்களைப் பொழியும் நாவன்மை உடையவளே! (உக்திமாத்திரமே யாய் அனுட்டானமின்றி இருக்கின்றாயே!) ஸ்ரீக்ருஷ்ணானுபவத்தை நீ தனித்து செய்வதால் அவன் பொய் உனக்கு ஏறிட்டதுபோலும். நல்ல பெண்போ! பார்க்கும் போதெல்லாம் "**உங்களையொழிய நான் தரியேன்**" என்பதும், பிறகு தனித்து அநுபவிப்பதுவும் நன்றாய் இருக்கிறது! சொல்லும் செயலும் சேராதார்க்கு குணபூர்த்தியுண்டோ?, உடனே அக்குறை தீர நீ எங்களுடன் வந்து கலந்து கொள், உனக்கு வெட்கமாக இல்லையோ? என்கிறாள்'அதற்கு அவள் 'இத்தனை சொல்கிறீர்களே நான் வந்து உங்களுக்கு என்ன செய்யப் போகிறேன்? என்று கேட்கிறாள். **சங்குகொடு...பாவாய்** அதற்கு அவர்கள், "**நங்காய்! கோபித்துக் கொள்ளாதே**" உன் சொல்லழகிலே மயங்கித்தானே, உன் வீடு ஏறி வந்தோம், நீ வந்து சங்குசக்கரங்களைத் திருக்கைகளில் ஏந்தி இருக்கும் செந்தாமரைக் கண்ணனை உன் வாயால் பாட நாங்கள் அதைக் கேட்க வேண்டாவோ! வா, எங்களுடன் வந்து கண்ணனைப் பாடு, உன் இனிமையான குரலைக் கேட்கவே வந்தோம், என்று பிடிவாதம் பிடிப்பவளையும் சாதுர்யமாய் அழைக்கிறார்.

**விசேஷார்த்தம்**:-ஆத்மகுணபூர்த்தி

இப்பாட்டில் பாகவத சமுதாயத்திற்கு முக்கியமானவளாய், பகவத் சம்பந்தத்தைப் பலருக்கும் உண்டாக்கவல்ல ஜ்ஞான பக்தி

வைராக்யங்களாலே பூர்ணரான ஒரு கோபிகையை (பாகவதரை) எழுப்புகிறார்கள். **உங்கள்...காண்** திருமந்த்ரத்தினுடைய மத்யே வர்த்திக்கிற **நமஸ்ஸிலே** பாரதந்த்ரயம் ப்ரகாசமாய், ஸ்வாதந்த்ரயம் மடிந்தது காண்! எங்களையெல்லாம் நாங்கள் அபேக்ஷிக்கும் முன்னமே ஜ்ஞானிகளாக்கும் படி ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்யும் பூர்த்தியையுடையவரே! எழுந்திராய், "**சொல்லும் செயலும் ஒத்திராதாருக்கு நாணமும் இன்றிக்கே ஒழிவதேன்**" என்ன! இப்படியெல்லாம் சொல்லியாகிலும் என்னிடம் வருவதேன்? என்ன, அதற்கு இவர்கள் "**வாங்மாதுர்யம் உள்ளவரே! உன்னுடைய பேச்சினிமையைப் பார்த்தால் பகவான் ஸந்துஷ்டியாவான் அல்லவோ!**" என்றார்கள், உடனே அவள், "**ஜ்ஞானமுண்டானால் என்ன செய்ய வேண்டும்?**" என்று கேட்க, "**பங்கயக் கண்ணனான, பகவானைப் பாடுவதே ப்ரயோஜனமாய் பாடுவோம், எழுந்துவா**" என்கிறாள்.



## 15ஆம் பாசுரம் எல்லே! இளங்கிளியே

ஆண்டாள் செய்து கொண்டு வருகின்ற பாகவத திருப்பள்ளி எழுச்சியிலே இதுதான் கடைசி பாசுரம், இப்பாட்டில் கேள்விகளும், பதில்களும் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. கீழே 6ஆம் பாட்டிலிருந்து 14வது பாட்டுவரை உள்ள 9 பாசுரங்களிலும் வெளிப்படையாகத் துயில் எழுப்புவோரின் பாசுரங்களே. இப்பாசுரத்தில் மட்டும் வெளியில் இருந்து துயில் எழுப்புவோருக்கு, உள்ளிருப்பவள் பதில் சொல்வது "**வினாவிடை**" ரூபமாக அமைந்துள்ளது.

எல்லா கோபிகைகளையும் ஒன்று சேர்த்துப்பார்க்க இச்சித்துப் படுத்திருக்கிறாள் ஒருத்தி, அவளை எழுப்புகிறார்கள்.

கீழ்ப்பாட்டிலே, "**பங்கயக்கண்ணானைப்பாட**" என்று ஆண்டாள், முந்தைய வீட்டுப் பெண்ணை எழுப்பிய இனிமையைக் கேட்ட இவள், தன்னையும் அவர்கள் அப்படி அழைக்கவேண்டும் என்னும் அவாவில் அப்பாசுரத்தை தன்மிடற்றில் நுண்ணிதாகப் பாடிக் கொண்டே படுத்திருந்தாளாம். **எல்லே...நானேதானாயிடுக** (எல்லே! இளங்கிளியே! கிளி-இவள் பேச்சுக்கும், பருவத்துக்கும் ஒப்புமையாயிற்று) கிளி போன்று குரல் இனிமையும், ரூபலாவண்யமும் உடையவள். இக்குரலினிமையைக் கேட்டுத்தான் இவர்கள் "**எல்லே இளங்கிளியே**" என்று அழைக்கிறார்களாம். இவர்கள் அழைத்தது இவளுடைய பாட்டுக்கு இடையூறாய் இருக்கவே, "**சில்லென்று அழையேன் மின் நங்கைமீர்**" பெண்களில் சிறந்தவர்களே சிலுக்கென்று அழையாதீர்கள். இதோ வந்து கொண்டே இருக்கிறேன் என்ன, வெளியில் உள்ளவர்கள் சிரித்துக்



*பேகடா ராகம் - மிச்ரசாபு தாளம்*

*எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ**
*சில்லென் றழையேன்மின், நங்கைமீர்! போதர்கின்றேன்**
*வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்**
*வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக**
*ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை**
*எல்லாரும்போந்தாரோ போந்தாபோந்தெண்ணிக்கொள்**
*வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க**
*வல்லானை* மாயனைப் பாடேலோ ரெம்பாவாய். (15)*

கொண்டே, "**உன் கட்டுப்பேச்சின் சாதுர்யங்கள் எல்லாம் எங்களுக்கு முன்னமே தெரியும்**", என்றார்கள். உடனே இவள் "**வல்லீர்கள் நீங்களே, உங்கள் பாசுரத்தை அனுபவிக்க இடைஞ்சல் செய்து, பிறகு பழியையும் போடும் ஸமர்த்தர்களன்றோ! நீங்கள் என்று சொல்லி, உடனே சடக்கென்று தெளிந்து, தெரியாமல் சொல்லிவிட்டேன் எல்லா தவறும் என்னுடையதுதான் (நானே தானாயிடுக) என்று அபராதக்ஷாமணம் செய்து கொள்கிறேன்**" என்கிறாள்.

இல்லாத குற்றத்தை ஒருவர் ஏறிட்டுச் சொன்னாலும் "**தலைவணங்கி பொறுத்தருள வேணும்**" என்று ப்ரார்த்திக்கும் முறையில் "**நானேதானாயிடுக**" என்றாள். **ஒல்லை....கொள்** இப்படி இவள், அவர்கள் கூறிய குற்றத்தை ஏற்றுக்கொண்டு, "**இனி உங்களுக்கு நான் வந்து செய்ய வேண்டியது என்ன உள்ளது?**" என்று உசாவுகிறாள் (பிகுசெய்து கொள்ளுதல்). உடனே இவர்கள், "**சீக்கிரம் எழுந்திரு, உனக்கு வேண்டிய பலன் என்ன?**" என்று கேட்க, அதற்கு எழுப்பப் பெற்றவள் "**எனக்கு நீங்கள்தான் வேண்டும், எனக்கு உங்களுடன் கூடி அனுபவிப்பதைக் காட்டிலும் சுகம் உண்டோ? எல்லோரும் வந்து விட்டார்களா? என்ன, வந்து விட்டார்கள் நீ வேணுமானால் எண்ணிப் பார்த்துக்கொள்**" என்கிறார்கள்.

**வல்லானை.......பாவாய்** ஆகையால், "**குவலயாபீடமென்னும் வல் ஆனையை கொன்றவனை, எதிரிகளைச் (கம்ஸன், மல்லர்கள்) எதிராக நின்று அழித்தவனை, எதிரிகளை வென்று நம்மிடம் தோற்று நம்மை அவனுக்கென்றே எழுதிக் கொண்டவனின் வெற்றிகளை மாறிமாறி இளங்கிளியான நீ உன்னுடைய இனிமையான குரலில் பாடி எங்களை மகிழ்விக்க வேண்டும் எழுந்து வா. அந்த உத்ஸாகத்தில் நாம் எல்லோரும் சேர்ந்து அவன் புகழைப் பாடுவோம்**" என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்**:- பாகவத ஸ்வரூபம்

பாகவத கோஷ்டியைக் காண ஆசைப்பட்டிருப்போரை உணர்த்துவது இப்பாசுரம், பாகவத நிஷ்டையைத் தெளியப்படுத்தி இந்நிலையே எல்லோரும் பெறவேணும் என்று முதலில் ஐசுவர்யார்த்தி நிலை, உபாசகர்களின் நிலை, ஞானி நிலை என்றிருக்கும் இவர்கள் அனைவரையும் ஒரே சமநிலையில் உயர்த்தி எல்லோருக்கும் பாகவத நெறியை ஏற்படுத்துகிறார். ஆகையாலேயே, **திருப்பாவையாகிறது இப்பாட்டிலே** என்பர் அழகியமணவாளப்பெருமாள் நாயனார்.

இதில் **அவதாரப்ரயோஜனம்** சொல்லப்படுகிறது. **பரித்ராணாய......யுகே யுகே** சாது சம்ரக்ஷணம், துஷ்ட நிக்ரஹம், தர்மஸம்ஸ்தாபனம் இவைகளே தன் அவதாரப்ரயோஜனத்தின் நோக்கம் என்கிறார் பகவான் கீதையில்.

இதையே ஆண்டாள் இப்பாட்டில், **வல்லானை கொன்றானை, மாற்றாரை மாற்றழிக்க வல்லானை, மாயனை** (ஆண்டாளை பொருத்தவரை) சாதுரக்ஷணம் என்றால் **அநிஷ்டநிவ்ருத்தியை** பண்ணி **இஷ்டப்ராப்தியை** சாதுக்களுக்குச் செய்து கொடுத்தல். இஷ்டப்ராப்தி- தன்னைக் காணத்துடிக்கும் பக்தர்களுக்குத் தன் திருமேனி சௌந்தர்யத்தைக் கொடுத்துத் தன் குண சேஷ்டிதங்களை அனுபவித்துத் தரிக்கும்படி செய்து, அதற்கு விரோதிகளை நிரஸனம் செய்வதே.அநிஷ்டநிவ்ருத்தி-இது இரண்டுபடிப் பட்டிருக்கும். தன்னிடம் விரோதமுள்ளவர்களின் விரோதத்தைத் தன் ஸௌந்தர்யத்தாலே போக்கி அவர்கள் தன்னை வந்து ஆச்சரியிக்கச் செய்கை. (கோபாலர்களுக்கு இவளிடமிருந்து சாத்ரவதத்தைப் போக்கியருளின வல்லான்) அப்படியல்லாமல் தன்னை அழிக்க நினைப்பவர்களை (சாணூர, முஷ்டிகன், கம்ஸன் போன்றோரை) நிரஸனம் செய்தருளின வல்லான்.

**மாயனை** கோபிகைகளிடம் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறி தன்னிடம் அன்பை உண்டாக்கி, அவ்வன்பை அவர்களுக்கு தன் குண சேஷ்டிதங்களால் பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி வரையில் வளரச்செய்து, அவர்கள் அநிஷ்டமான அஹங்கார, மமகாரங்களைப் போக்கி, அவர்கள அபீஷ்டமான பகவத் அநுபவ கைங்கர்யங்களைக் கொடுத்து ரக்ஷிக்கிறான்.

இப்பாட்டு பாகவத பாரதந்திரியத்தின் பெருமையை விளக்குவது:-

பாகவதர்கள் குரலைக் கேட்பதுமே, பாகவதர்களைக் காண்பதுமே எப்போதும் போதுபோக்கால் இருக்க வேண்டும்; பாகவதர்களைப் பிரிந்திருக்கக் கூடாது, அவர்களைக் கடுமையாகப் பேசக்கூடாது; அவர்களை (பரிபாஷை கலந்து) கௌரவமாகப் பேசவேண்டும்; பாகவதர்களால் சிக்ஷிக்கப்படும் போது "அது உத்தேச்யம்" என்றிருக்கவேண்டும். பிறர் குற்றத்தைத் தன்னுடையதாய் ஏற்றுக்கொண்டு மறுத்துப் பேசாதிருக்க வேண்டும்; பகவதனுபவம் பாகவத ப்ரீதிக்குறுப்பாய் எண்ணவேண்டும்; பாகவதர்கள் அனைவரும் பகவதனுபவத்திற்கு உத்தேசியம் ஒருவர் குறைந்தாலும் அனுபவத்திற்குக் குறை என்பதை உணரவேண்டும்; எப்போதும் எம்பெருமானின் கீர்த்தியைப் பாடிப் பாகவதர்களை உகப்பிப்பதே பாகவதக்ருத்யம் என்றுணர வேண்டும்; இவைகளையே ஸ்ரீவைஷ்ணவ பாகவதோத்தமர்கள் தங்கள் லக்ஷணமாகவும், கால க்ஷேபமாகவும் கொள்ளவேண்டும்; என்று - **ஸ்ரீவைஷ்ண லக்ஷணம்** உரைக்கின்றார் ஸ்ரீஆண்டாள்.



கீழே, முதல் 5 பாசுரங்களில் பகவான் எழுந்தருளியிருக்கும் ஐந்து நிலைகளைப்பாடியும், 6முதல் 15 பாசுரம் வரை பாகவத சுப்ரபாதமும் செய்தார்கள். இனி பகவானின் அந்தரங்கர்களையும், பகவானையும் எழுப்பி அவர்களையும் உணர்த்துகிறார்கள். முதலில் நந்தகோபன் திருமாளிகைக்குப்போய், அங்கே கோயில் காப்பான், வாசல் காப்பான் இவர்களின் அநுமதி பெற்று, உள்ளே போகப் பாரிக்கிறார்கள்.

கீழே, பத்துப்பாட்டுக்களால், பத்துப்பெண்களை, முற்பட எழுந்தவர்கள் துயில் உணர்த்தினார்கள். இது ஆய்ப்பாடியிலுள்ள பெண்களையெல்லாம் எழுப்பியதற்கு உபலக்ஷணம். இதுக்கு பாவமென்னவெனில்! ஏகாந்தமான ஜ்ஞானமார்க்கத்தினுடைய தனி மத்தைப் போக்கி, அவர்களின் ஜ்ஞானத்தை சமுதாயத்திற்கு சாதுர்யமாய் சேர்விக்கிறார் ஸ்ரீஆண்டாள்.

இப்பாட்டில் கண்ணனுடைய கோயில் காப்பான் (வீட்டுக்காவலனின்) பள்ளியெழுச்சி. கோபுரவாசல் போன்ற வெளிப்புற வாசலைக் காப்பவன் **கோயில் காப்பான்.** த்வஜஸ்தம்பம் தாண்டி உட்புற வாயிலைக் காப்பவன் **வாசல் காப்பான்.** தொண்டு காரணமாக வரும்பேரே ஆத்மாவுக்குச் சிறந்த பெயர். இதனால்தான் விப்ரநாராயணர் என்ற பெயரைக்காட்டிலும் "**தொண்டர்அடிப்பொடி**" என்னும் பெயரை ஆழ்வார் உகந்தருளினார்.

**நாயகனாய்.....திறவாய்** க்ருஷ்ணனே இவர்களுக்கு நாயகன் என்றாலும் அந்த **கோபால ரத்னத்தைக்** காத்துத் தங்களுக்கு உபகரிக்கும் அவர்களை **நாயகன்** என்ற உபசரிப்பது தப்பில்லை. நந்தகோபனுடைய (அரண்மனையைகாப்பவன்) கோயில் காப்பானின் அநுமதிபெற்று உள்வாசலுக்கு வந்து, உள்ளே சென்றவர்களை வாசல் காப்பான் தடுத்து, "**யார் நீங்கள்? இந்த அகாலத்தில் உள்ளே வந்து கதவைத்திறக்கச் சொல்வது ஏன்?**" என்று கேட்க, உடனே இவர்கள் "**நாங்கள் பூதனைபோல் கோபிகை வேடம்தரித்து வந்தவர்கள் அல்லோம், உண்மையான கோபிகைச் சிறுமியர்கள். க்ருஷ்ணன் எங்களுக்கு நோன்பிற்குப் பறை தருவதாய் முன்னமே வாக்களித்தான் அதைப் பெற்றுப்போக வந்தோம்**" என்கிறார்கள். உடனே அவன், "**அதற்குக் காலநேரம் கிடையாதா? ஒரு காரியத்தை உத்தேசித்து வந்தவர்கள்தானே நீங்கள்? அவன் எழுந்ததும் வாங்கி வைக்கிறேன், பிறகு வாருங்கள்**" என்றான். உடனே இவர்கள், "நாட்டாருக்கே பறை என்றோமே ஒழிய, நாங்கள் அநந்யப்ரயோசனர்களாய், தூய்மையுள்ளவர்களாய் க்ருஷ்ணனுக்கு திருப்பள்ளி எழுச்சி பாடவே தான் வந்தோம். தயவுசெய்து முதன்முதலில் உன் வாயால் முடியாது என்று சொல்லிவிடாதே, நீயே உன்கையால் அந்த நேச நிலைக்கதவின் தாளை நீக்கி எங்களுக்கு க்ருஷ்ணனைக் காண அநுமதி வழங்கு' என்று ப்ரார்த்திக்கிறார்கள்.



மோஹன ராகம் - ஆதி தாளம்

*நாயக ளுய்நின்ற நந்தகோ பனுடைய
    கோயில்காப் பானே கொடித்தோன்றும் தோரண
வாயில்காப் பானே* மணிக்கதவம் தாள்திறவாய்*
    ஆயர் சிறுமிய ரோமுக்கு* அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்*
    தூயோமாய் வந்தோம், துயிலெழப் பாடுவான்*
வாயால் முன்னமுன்னம் மாற்றுதே யம்மா* நீ
    நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய். (16)

**விசேஷார்த்தம்**:- ஆசார்ய ப்ரபாவம்

ஆசார்ய சம்பந்தமுடையவர்களை (ஸ்ரீவைஷ்ணவர்களை) முன்னிட்டு ஆசாரியனைத் தொழவேண்டும். இங்கு நந்தகோபன் ஆசார்யன் என்பதற்கு அறிகுறி. (பகவதனுபவத்தால் பிறக்கும் ஆனந்தத்தோடு கூடியவன் ஆசார்யன். பகவானைக் கிட்டும் ரஹஸ்யம் அறிந்தவன் ஆசார்யன்). கோயில் காப்பான்- திருமந்திரத்தைக் காப்பான்; மணிக்கதவு - ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் இடைப்பட்ட திரை; நேசநிலைகதவு நீக்கு - அஹங்கார மமகாரங்களை நீங்கள் தான் நீக்கவேணும் என்பதற்கு அறிகுறி. இதன்மூலம் ஸ்ரீவைஷ்ணவ சம்பந்தபடியாய் **ஸ்வருபசிக்ஷை செய்யப் பெற்று** அவர்களை முன்னிட்டு ஆசார்யனைக் கிட்ட வேணும் என்று சொல்லியாயிற்று.



## 17ஆம் பாசுரம் அம்பரமே தண்ணீரே

இப்படி சிக்ஷிக்கப்பட்ட பாகவதர்கள் அடுத்து நந்தகோபர், யசோதை, பலராமன் இவர்களைத் துயில், எழுப்பி அவர்களையும் துதிக்கிறார்கள்.

**அம்பரம் ..... அறிவுறாய்** பாட்டின் முதலடியில் நந்தகோபர் செய்யும் தர்மங்களின் சிறப்பை, **அம்பரமே**-துணி; **தண்ணீரே** - குடிநீர்; **சோறே** -உணவு என்று முறையே கூறுகிறார்கள். நந்தகோபர் உண்டியும், உடையும், நீரும், வேண்டுவோருக்கு வேண்டியபடியே பலனைக்கருதாது அறமாக அளிக்கவல்லவர் , நாட்டாருக்கு வேண்டிய பொருள்களைக் கொடுக்க வல்லவர். இச்சிறுமியர் வேண்டுகோளையும் அளிக்க உதவுவார் என்பது குறிப்பு. இவர்களுக்கு உண்ணும் சோறு, தின்னும் வெற்றிலையெல்லாம் கண்ணனாய் இருக்கிறபடியால், இவர்கள் நந்தகோபரிடம், "**எம்பெருமான்! சித்ததர்மமான கண்ணனை எங்களுக்குத் தானமாய்த் தந்தருள வேணும்**" என்கிறார்கள். அவரும் பெண்களென்று பாராமல், அதிகாரி (பாகவதர்கள்) விசேஷத்தை அறிந்து அனுமதியளிக்க, அவர் அனுமதியுடன் யசோதையைப் பார்த்து "**ஆயர்பாடிப் பெண்களுக்கு ஒரு குறைவுவரில் முதலில் உன்முகமன்றோ வாடுவது!**" என்கிறார்கள் (இது ஒரு த்ருஷ்டாந்தம் - ஒரு கொடியில், வேரில் ஏதேனும் ஒரு ஓரத்தில் உஷ்ணம் பட்டால் உடனே கொடியின் கொழுந்தான துளிர் வாடிவிடும்). அதுபோல் யசோதை ஆயர்பாடிக்குக் கொழுந்தாகவும் குலவிளக்காகவும், அறம் செய்யும் எம்பெருமானுக்கு ஏற்ற எம்பெருமாட்டியாய் இருக்கிறபடியால், அவளிடம், "**நீ பெண்கள் மனம் அறிந்து கண்ணனைத் தந்தருள வேணும்**" என்ன, அவளும் அதற்கு இசைகிறாள்.

**அம்பரமூடறுத்து.......எழுந்திராய்** க்ருஷ்ணனைப் பார்க்கும் வேகத்தில் அருகிலிருக்கும் பலராமனைக் கவனிக்க மறந்து, ஆகாயமெங்கும்



***கல்யாணி ராகம் - ஆதி தாளம்***

அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும்*
  எம்பெருமான் நந்தகோ பாலா எழுந்திராய்*
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே*
  எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுறாய்*
அம்பரம் ஊடறுத் தோங்கி யுலகளந்த*
  உம்பர்கோ மானே உறங்கா தெழுந்திராய்*
செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா*
  உம்பியும் நீயு முறங்கேல் ஓர் எம்பாவாய். (17)

ஊடறுத்து விம்பி வளர்ந்து **ரக்ஷகத்வமே** விளைநீராக வளர்ந்து விட்ட நிலையில் உலகமளந்தவனான ஸ்ரீக்ருஷ்ணனின் ஸ்வாமித்வமும், வாத்ஸல்யமும் மனத்தில் பெருக க்ருஷ்ணனை எழுப்புகிறார்கள்.

**செம்பொற் .....பாவாய்** ஸம்ஸாரிகள் உறக்கம் தீர்க்க அவதரித்த நீ, உறங்காதொழிய வேணும் என்று சொல்லியும், கண்ணன் திரும்பாதது கண்டு, நாம் என்ன தவறு செய்தோம்? ஏன் நம்மை கண்ணன் திரும்பிக்கூட பார்க்கவில்லை? ஓ! க்ருஷ்ணன் பின்னே பிறக்க, முன்னே **பொற்கால் பொலியலிட்டுப் பிறந்த சீமானான பலராமரை** மறந்தோமே என்று **"செம்பொற்கழலடிச் செல்வா"** என்று அவனை எழுப்புகிறார்கள். **"அந்தரங்க கைங்கர்யத்திற்கு இட்டுப்பிறந்த பலராமா! நீயும் உமது தம்பியும் உடனே உறங்காதெழுங்கள்"** என்கிறார்கள். (செல்வம் என்றால்- பக்தனுக்கு கைங்கர்யம்).

**விசேஷார்த்தம்**:- பரகதஸ்விகாரம்

பகவானே மேல் விழுந்து ஒருவனிடம் செய்யும் அன்பிற்குப் பெயர் **பரகதஸ்விகாரம்.** எங்களுக்காக ஏற்பட்ட சேஷியாயும் (தலைவன்), ஆச்ரித ரக்ஷகனாயும் விளங்கும் ஆசார்யனே! நீரே எங்களுக்கு உமது முகமலர்ச்சிக்காகவே கைங்கர்யம் பண்ணும் ஜ்ஞானத்தையும், கைங்கர்யமே ப்ரயோஜனமாய் இருக்கும்படியான ஜ்ஞானத்தையும் தந்தருளவேணும். (அருகால சிறுவண்டே) ஆசார்யர், ஆசார்யர் பத்தினி, ஆசார்ய புத்திரர் இவர்கள் திருவடி சம்பந்தமன்றோ எம்பெருமானைக் கொடுப்பது, இது பட்டர் நிர்வாகம். அதனால் முறையாக இவர்கள் சம்பந்தத்தையிட்டே ஸ்ரீக்ருஷ்ணனை ஆச்ரயிக்கிறார்கள் (நந்தகோபர், யசோதை, பலராமர்) கோபிகைகள். ஆசார்யனைப் பற்றிக்கொண்டு திருமந்திரத்தின் பொருளை உணர்ந்து இறைவனுக்கு அந்தரங்கமானவர்களை முன்னிட்டு இறைவனைத் துயிலுணர்த்துதல் இப்பாட்டின் உள்ளர்த்தம்.

**அம்பரம்** - ஆத்மா பெறவேண்டிய இறைவனுடைய முகமலர்ச்சி; **தண்ணீர்** - இதை வளர்க்க வல்ல மனநிலை; சோறு- கைங்கர்யம். இம்மூன்றையும் அளிப்பவர் **ஆசார்யன்** (நந்தகோபன்).

தேவகி வஸுதேவரின் புண்ய பலன் அவர்களுக்குப் புத்திரனாகக் கண்ணன் அவதரித்து அவர்களுக்கு சங்கு சக்கரங்களைக் காட்டினான். பிறகு அன்று இரவே கோகுலத்தில் எழுந்தருளி விட்டான். இது ஸ்வகதஸ்வீகாரம். ஏனெனில் அவர்கள் செய்த புண்யம் அத்துடன் தீர்ந்து விட்டது. நாம் அவனைப் பற்றுதல் **ஸ்வகதஸ்வீகாரம்** எனப்படும். எவனொருவனை பகவான் கடாக்ஷிக்கிறனோ அவனே புண்யசாலி. அவனுக்கு பகவதநுபவம் பரிபூரணமாயிருக்கும், பகவானே மேல்விழுந்து ஒரு சேதனனிடம் செய்யும் அன்பு அபரிமிதமாக இருக்கும் - இது **பரகதஸ்வீகாரம்** எனப்படும்.



*ஸாவேரி ராகம் - ஆதி தாளம்*

*உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்*
  நந்தகோ பாலன் மருமகளே நப்பின்னாய்*
கந்தம் கமழும் குழலீ கடைதிறவாய்*
  வந்தெங்கும் கோழியழைத்தனகாண்* மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்*
  பந்தார் விரலி உன் மைத்துனன் பேர்பாட*
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப*
  வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (18)

நந்தகோபர், யசோதை, பலராமன், கோபிகைகள் பகவானின் **பரகதஸ்வீகாரம்** பெற்றவர்கள். க்ருஷ்ணன் தானே இச்சித்து இவர்கள் இருக்குமிடம் போய் அவர்களுக்குத் தன்னை அனுபவிக்கக் கொடுத்திருக்கிறான். இவர்கள் பெற்ற பகவத் அனுபவம் மோக்ஷ ஆனந்தத்திற்கும் மேற்பட்டது. இப்படி பகவானே இச்சித்து ஒருவனுக்குச் செய்யும் நன்மையே மேலானது.



18ஆம் பாசுரம் **உந்து மதகளிற்றன்**

இப்பாசுரத்திலே ஆண்டாள், "**நப்பின்னைப் பிராட்டியை முன்னிட்டே கண்ணனைப் பற்றவேண்டும்**" என்பதை ஆய்ச்சியர் கருத்தாய்த் தெரிவிக்கிறார். ராதைக்கு வடநாட்டார் அளித்திருக்கும் மேன்மையை தமிழ் இலக்கியம் நப்பின்னைப் பிராட்டிக்கு அளித்திருக்கின்றது.

கீழ்ப்பாட்டிலே பலராமனை (பகவானுக்கு அந்தரங்கர்) முன்னிட்டு எழுப்பின பிறகும் ஸ்ரீக்ருஷ்ணன் எழுந்திராமையாலே, தங்களுக்கு புருஷகார பூதையான (பரிந்து சிபாரிசு செய்பவள்) நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகிறார்கள்.

**உந்து.....நப்பின்னாய்-** கீழ்ப்பாட்டிலே, **நந்தகோபன் குமரன்** என்று கண்ணனை தந்தைக்கு பரதந்திரம் தோற்றச் சொல்வதில் எப்படி உகப்போ, அதேபோல பிராட்டிக்கும் தன் மாமனார் பெருமையைச் சொல்லி அவருக்குப் பரதந்திரம் தோற்ற **நந்தகோபாலன் மருமகளே** என்று தன்னைச் சொல்வதிலே உகப்பு. நறுமணமுள்ள கூந்தலை உடைய நப்பின்னையே! பொழுது விடிந்ததற்கடையாளமாய்க் கோழி கூவிவிட்டது, உன்வீட்டு மாதவிப் பந்தல் (மெத்தைப்போல் அமைந்திருக்கும்) மேல் வசிக்கும் குயிலினங்களும் கூவிவிட்டன; **பந்தார்விரலி....பாட-** ஒருகையில் லீலா விபூதியான உலகத்தையும், மறுகையில் நித்ய விபூதி நாயகனான க்ருஷ்ணனையும் வைத்திருப்பவளே!, பகவானின் பேர்பாடி வந்த நாங்கள் மகிழும்படியாக; **செந்தாமரை...... பாவாய்-** எங்கள் தாபம் தீரும்படி, நோன்பு நோற்றதால் வறண்டு இருக்கும் எங்கள் இந்திரியங்களுக்குக் குளிர்ச்சி ஏற்படும்படி, நீ எங்கள் கண்களுக்கு இரையிடும்படி **வந்து**; எங்கள் செவிக்கு இரையிடும்படி **வளை ஒலித்து**; எங்கள் நாவிற்கு இரையிடும்படி **பேர்பாட**; ஸ்பர்ச நேத்திரியமும் வயிறு நிறைய **செந்தாமரைக் கையால்**; மூக்கிற்கு உணவிடும்படி, **கந்தம் கமழும் குழலி** இப்படி எங்கள் எல்லா இந்திரியங்களும் தாபம் தீர்வதைப் பார்த்து, உன் மனம் குளிர்ந்து மகிழ, அதைக் கண்டு எங்கள் உள்ளமும்

உ.கக்க வேண்டும் என்கிறார்கள். அதனால், "**உன் செந்தாமரைக் கையால் அபயக்கரம் நீட்டி உன்னுடைய சீர்மை குணம் தோற்ற, நீ கதவைத் திறப்பதை நாங்கள் அறியும் வகையில் கைவளைகளின் ஒலி கேட்கும்படி திறக்கவேண்டும்**" என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்**:- புருஷகார வைபவம்

பிராட்டியை புருஷகாரமாகப் பற்றவேண்டிய அவச்யம் என்ன என்னில்? முந்தைய அவதாரத்திலே காகாசுரன் பிராட்டியின் திருமார்பினை கொத்தி ரத்தம் வரும்படி செய்தான், இதனால் பெருமாளின் கோபத்திற்கு ஆளாகி, அவரால் எய்யப்பட்ட ராம பாணமானது, அவனைத் துரத்த மூன்று லோகமும் சுற்றிப் புகலற்று நிற்க இடமில்லாமல், ராமனிடமே வந்து விழ, அவன் துர்கதியைக் கண்டு பிராட்டி, இராவணனை விட மகா பாபியான இவனுக்கும் அவன் பாபத்தைக் கணிசியாமல் இராமனிடம் அவனை மன்னிக்கும்படி சொல்லி அவனுக்கு, இன்னருள் புரிந்தாள்; இராவணன் சீதையை அசோகவனத்தில் சிறை வைத்த போது அங்கு சீதையை நலிந்தார்கள் ராக்ஷஸிகள். அநுமான் இலங்கை சென்றிருந்த போது 'இந்த ராக்ஷஸிகளை சித்ரவதை செய்ய அநுமதிக்க வேணும்' என்று பிராட்டியிடம் கேட்கிறார். "**தேவ்யா காருண்ய ரூபயா**" என்கிறபடி - கருணையே வடிவான பிராட்டி அதற்கு, "**லோகத்தில் பாபம் செய்யாதவர் யாரும் இல்லை. இந்த ராக்ஷஸிகளை வதைக்கவேண்டாம். அவர்களாக எதையும் செய்யவில்லை அவர்களுடைய யஜமானரின் ஆணையால்தான் செய்தார்கள், அவர்களுடைய துர்கதியைக் கண்டு நாம் இரங்கவேண்டும்**" என்று, தனக்குத் துன்பம் விளைவித்தவர்களிடத்திலும் கருணை செய்து அருளினாள். ராக்ஷஸிகளோ, காகமோ அவளை சரணம் பற்றவில்லை. அப்படியிருக்கும் போதே அவர்களுடைய துர்கதிக்கு இரங்கி அவர்களைக் காப்பாற்றிய பெருமை பிராட்டிக்கே உண்டு. இந்த வ்ருத்தாந்தத்தில் இருந்து பிராட்டியின் பெருமையையும், கருணையையும் அறியலாம்.

உபதேசம் :-

நாம் பிராட்டியை ப்ரார்த்திக்க வேண்டுமென்பதில்லை, அவள் நம்மை ரக்ஷிப்பதை விலக்காதிருந்தாலே போதுமானது. பகவான் ஸ்வதந்திரன், அதனால் அவனை நேரடியாகப் பற்றக்கூடாது. பிராட்டியை முன்னிட்டே, அவளுடைய புருஷகாரத்தின் மூலமாகவே அவனைப் பற்றவேண்டும் என்கிறார். (பிராட்டியின் ஏற்றத்தை 18,19,20 ஆக மூன்று பாசுரங்களிலும் தெரிவிக்கிறார்).



இப்பாசுரத்தில், கண்ணபிரானையும், நப்பின்னைப் பிராட்டியையும் சேர்த்து துயிலுணர்த்துகிறார்கள் சேதனன் **ஆத்ம சிரேயஸ்** பெற வேண்டுமானால், பிராட்டியின் புருஷகாரத்துடன், பகவானின் க்ருபையையும் வேண்டும். பிராட்டியைப் பற்றியவனை நம்முடைய "**மஹிஷியைச் சேர்ந்தவன்**" என்று அவனும், பகவானைப் பற்றிவனை, "**நம் ஸ்வாமியைச் சேர்ந்தவன்**" என்று இவளும் அச்சேதனனிடம் போட்டியிட்டு அன்பைச் செய்வார்கள்.

கீழ்ப்பாட்டில், நப்பின்னையை "**வந்து திறவாய்**" என்று கோபிகைகள் ப்ரார்த்தித்தபோது, உடனே க்ருஷ்ணன் நப்பின்னையைப் பற்றினவர்களுக்குத் தானே உபகாரம் செய்யவேண்டும் என்று, நப்பின்னையை அணைத்துக் கொண்டு அவளைக் கதவை திறக்கவிடாமல் செய்துவிட்டான். உடனே கோபிகைகள் க்ருஷ்ணனைப் பார்த்து "**மலர்மார்பா வாய்திறவாய்**" என்று கண்ணனை வேண்டினார்கள். **குத்து.... வாய்திறவாய்** மங்களகரமான தீபங்கள் ப்ரகாசிக்க, வீர பத்தினியாகையாலே குவலயாபீடத்து யானையின் தந்தத்தினால் செய்யப்பட்ட கட்டிலின் மேல், அழகு, குளிர்ச்சி, வெண்மை, மென்மை, பரிமளம் ஆக பஞ்ச குணங்களோடு கூடிய படுக்கையின் மேல் ஏறிப் படுத்திருக்கிறாள் நப்பின்னை. பரிமள புஷ்பங்களைக் கொத்துக் கொத்தாய்த் தலையில் சூடிக் கண்ணனை மயக்கவல்ல கூந்தலை உடைய நப்பின்னையைப் பிரிய மாட்டாமல் அணைந்து, அதனால் மகிழ்ந்து கிடக்கும் கண்ணனைப் பார்த்து கோபிகைகள், "**மலர் மார்பா ! மாதவா ! எங்களுக்கு வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்லலாகாதா ?**" என்கிறார்கள்.

**மைத்தடம்...பாவாய்** க்ருஷ்ணனை வாய் திறவாய் என்றதைக் கேட்ட நப்பின்னை, அவனைப் பற்றினவர்கள் காரியத்தை நாமே செய்து தரவேணும் என்று, தன் கண் ஜாடையினாலே, க்ருஷ்ணனை வாய் திறவாமல் இருக்கச் செய்து விட்டாள். இதை அறிந்த கோபிகைகள் மங்களார்த்தமாக மை இட்ட உன் விசாலமான கண்கள் எங்கள் நன்மைக்குத் தான் என்று எண்ணியிருந்தோம்! ஆனால், இப்போது அக்கண்களால் பகவானை எங்களுக்கு ஒரு வார்த்தையும் சொல்லவிடாமல் தடுப்பது ந்யாயமா? உன் மணாளன் **கோபீஜன வல்லபன்** என்றும், **பதிம் விச்வஸ்ய** என்றும் லோகத்திற்கெல்லாம் நாயகனாகக் கொண்டாடப்படுபவனை, நீ உன் ஒருத்திக்கே சொந்தமாக்கிக் கொள்வது உசிதமா? உன்னை அணைந்து கிடக்கும் க்ருஷ்ணனை உன் கண்ணாலேயே கட்டிப்போட்டு வைத்துருக்கின்றாயே, இது ந்யாயமா? **இறையும் அகலகில்லேன்** என்று ஒரு க்ஷணமும் உன்னைவிட்டு அவனை எழுந்து வர விடுவதில்லை, நீயும் அவனைவிட்டுப் பிரிந்திருக்க இஷ்டப்படுவதில்லை! இந்த சேர்க்கை எங்கள் க்ஷேமத்திற்காகவன்றோ!



*ஸஹானா ராகம் - ஆதி தாளம்*

குத்து விளக்கெரியக் கோட்டுக்காற் கட்டில்மேல்*
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி*
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்*
வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்*
மைத்தடங் கண்ணினாய் நீயுன் மணாளனை*
எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண்*
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்*
தத்துவம், அன்று தகவேலா ரெம்பாவாய். (19)

**விசேஷார்த்தம்**:- புருஷகாரம்

இப்பாட்டில் புருஷகார பூதையான பிராட்டி கதவைத் திறக்கப் புக, நம் அடியாருக்கு இவள் காரியம் செய்வதென்! என்று அவளை எழுந்திருக்க ஒட்டாமல் கிடக்கிற ஈசுவரனை எழுப்ப, அங்கும் மறுமாற்றம் பிறவாமையால், மீண்டும் இவளையே எழுப்புகிறர்கள்.

**குத்துவிளக்கெரிய** - ஜ்ஞானம் ப்ரகாசிக்க; **கோட்டுக்கால் கட்டில்மேல்** - (யானை தந்தங்களால் செய்யப்பட்ட நான்கு கால்களையுடைய) இதனால் சதுர்வித கர்த்ர்த்வம் சொல்லப்பட்டது. அதாவது தர்ம, அர்த்த, காம, மோக்ஷங்களாகிற பட்டங்களை உடையதாயிருக்கிற ததநுஷ்ட்டான அபிநிவேசமாகிற கச்சையை உடையதாயிருக்கிற கட்டில் மேல்; **மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி**- அர்த்தபஞ்சக ஜ்ஞானமாகிற படுக்கை மேலேறி; **கொத்தலர் பூங்குழல்**-வர்க்கவர்க்கமாக விகஸித ஜ்ஞானரான ஆத்மாக்களாகிற புஷ்பங்களை போகோபகரணமாகத் தலையில் சூடியிருக்கும் பிராட்டியே, ஸ்வரூப யாதாத்ம்ய தர்சிநியான நீ, உனக்கு வல்லபனான க்ருஷ்ணனை உன் படுக்கையை விட்டு எழ சம்மதிக்கவில்லை, ஏனெனில், ஸம்ச்லேஷத்தில் சிறிது விச்லேஷமும் பொறுக்கிறதில்லை. அது உன் குற்றமோ! உன் பலஹானியின் குறை.

ஹே! கண்ணா! நீ உன் வீரபத்தினியுடன் அவள் பூங்குழல் மோஹத்தில் அவள் மார்பின் மேல் தலை சாய்த்து கிடக்கிறாய். அவள் பக்தி பரமபத்தியானது தான். ஆனால் எங்கள் புருஷகாரத்திற்காக அவளை விட்டுக்கொடு. நாங்கள் அவளுடைய பரிவாரமில்லையா! அவள் மூலம் உன் அன்பு எங்கள் வரையில் பெருக வேண்டும்.

ஹே! நீளே! நாங்கள் நோன்புக்கு அடையாளமாக மையிடாமலும், மலர் சூடாமலும், செய்யாதன செய்யோம் என்று நாங்கள் விரதமிருந்து கண்ணனை அடைய உன் உதவியை நாடி வந்தால், நீ உன் மையிட்ட கண்களாலும், கொத்துக்கொத்தாய் மலர்களைச் சூடிய கூந்தல் அழகாலும், நீ அக்கண்ணனை உன்னை விட்டு அகலாதவாறு வைத்திருப்பது தகாது. ஆகையால் புருஷகார பூதையான உனக்கு எம்பெருமானை நம்மோடே சேரவிடாமல் பண்ணுவது உன்னுடைய ஸ்வரூபத்திற்கும், ஸ்வபாவத்துக்கும் சேராது. ஆகையால் இருவரும் சேர்ந்து எழுந்து வந்து கதவைத் திறவுங்கள் என்கிறார்கள். இது லக்ஷ்மி நாராயண சுப்ரபாதம்.

ஸ்ரீவைஷ்ணவ மதத்தில், **பகவான், பிராட்டி, ஜீவன்** என்கிற மூன்று அதிகாரிகளும் எப்போதும் உண்டு. மோக்ஷ தசையிலும் உண்டு. பகவான் ஆனந்த மயன். அவன் ஆனந்தம் மனதுக்கும், வாக்குக்கும் எட்டாதது. அதே ஆனந்தம் பிராட்டிக்கும் நித்ய முக்தர்களுக்கும் உண்டு.

ஸ்ரீராமன், சீதை, லக்ஷ்மணன் இம்மூவரும் தண்டகாரண்யத்தில் இருந்த, ஆனந்த சாம்யத்தை **ரமமாணா வனே த்ரய**: என்று



செஞ்சுருட்டி ராகம் - மிச்ரசாபு தாளம்

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று*
கப்பம் தவிர்க்கும் கலியே துயிலெழாய்*
செப்ப முடையாய்! திறலுடையாய் செற்றார்க்கு
வெப்பங் கொடுக்கும் விமலா துயிலெழாய்*
செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்*
நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்*
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை*
இப்போதே யெம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய். (20)

சொல்லியிருக்கிறது. இங்கு க்ருஷ்ணனும், நப்பின்னையும் சேர்ந்து இருக்க நாங்களும் கூடவிருந்து எங்கள் **தாஸ்யஸ்வரூபத்திற்கு**ச் சேர கைங்கர்யம் செய்து, உங்கள் ஆனந்தத்தைக் கண்டுகளிக்க வேண்டாவோ!.

க்ருஷ்ணனும் நப்பின்னையும் ஒருபடுக்கையிலிருப்பது என்றால் என்ன? பகவானும் பெரிய பிராட்டியாரும் பரமபத்தில் திருமாமணி மண்டபத்தில் ஆதிசேஷனான படுக்கையில் இருக்கும் இருப்பைக் காட்டுகிறது. மோக்ஷம் அடையும் முக்த ஜீவன் அங்கு திருமாமணி மண்டபத்தைக் கிட்டி, ஆதிசேஷனான படுக்கையை மிதித்து ஏறி பகவானுடைய மடியில் உட்காருகின்றான் என்று வேதம் சொல்கிறது. இதையே இங்கு கோபிகைகள் ப்ரார்த்திக்கிறார்கள்.

**விசேஷ குறிப்பு** :

பிராட்டியின் கண்ணழகு பகவானின் கண்ணழகைக் காட்டிலும் விஞ்சியது என்பதைக் குறிக்கவே, "**மைத்தடங்கண்ணினாய்**" என்றார் என்று, பெரியோர் பணிப்பர். இதிலும் கண்ணனின் ஏற்றம்தான் மறைந்துள்ளது. பிராட்டியின் திருமேனி அழகையும், அவன் திருமுகமண்டலத்தின் குறிப்பறிந்தும் காரியமியற்றுவதால் கண்ணன் **செந்தாமரைக்கண்ணனானான்.** கண்ணனின் கார்வண்ணத் திருமேனியையும், திருமுகமண்டலத்தின் குறிப்பையும் அறிந்து காரியமாற்றுவதால் பிராட்டி **மைத்தடங் கண்ணி** ஆனார், என்று நம்பூர்வர் பணிப்பர்.



20ஆம் பாசுரம் **முப்பத்து மூவர்**

இப்பாசுரத்தில் ஸ்ரீகண்ணபிரானைத் தந்தருள வேண்டுமாறு நப்பின்னைப் பிராட்டியைப் பிரார்த்தித்தல். கீழ்ப்பாட்டிலே, **குழந்தை இடறி விழுந்து தாயின் முதுகைக் குத்துமாப்போலே** நம்பின்னை பிராட்டியை கோபிகைகள் "**தத்துவமன்று, தகவன்று**" என்று சொன்னார்கள். இது நப்பின்னையிடம் இவர்கள் அபசாரப்பட்டதாக க்ருஷ்ணனுக்குத் தோன்றியதால், அவன் இவர்களுக்கு பதில்சொல்லாமலும், முகம்கொடாமலும் இருக்கிறான். அதனால் அவன் மனம் குளிரும்படி நப்பின்னையைக் கொண்டாடிப் பேசுகிறார்கள் கோபிகைகள்.

'பகவான் **நிரங்குச ஸ்வாதந்த்ரியம்** பெற்றவன், ஆகையினால் அவனிடம் சமயம் பார்த்துக் காரியம் கொள்ள வேணும், என்று நப்பின்னை பேசாதிருக்கிறாள். இப்பாட்டில் முற்பாதியில் அவனை எழுப்பிய கோபிகைகள் அவன் வாய்திறவாமையாலே, பிற்பாதியில் பிராட்டியின் பெருமைகளைப் பேசி, அவளிடம் தம் விருப்பத்தை விண்ணப்பிக்கிறார்கள்.

**முப்பத்து..... துயிலெழாய்** முப்பத்து முக்கோடி தேவர்களான (12 ஆதித்யர்கள், 11 ருத்திரர்கள், 8 வசுக்கள் (அஷ்டவசுக்கள்) 2 அச்வினி தேவதைகள் ஆக 33 தேவர்களைக் கூறுவது முப்பத்து முக்கோடி, தேவதைகளுக்கு உபலக்ஷணம்).

நீ ரக்ஷிக்க வேண்டுமென்றால் முப்பது மூவராக வேணுமோ?; அஞ்சு லக்ஷம் குடியாகாதோ?; தங்களை ரக்ஷிக்க தானே முயற்சி செய்வார்க்குத்தான் உதவுவாயோ?- தங்கள் ரக்ஷணத்திற்கு உன்னை நம்பியிருப்பவர்க்கு உதவலாகாதோ?; "**நாங்கள் தேவர்**" என்று அபிமானித்திருப்பவர்களைத் தான் ரக்ஷிப்பாயோ?-அடிச்சியோம் என்று அடி வணங்கியிருப்பார்க்கு அளிப்பதில்லையோ?;அந்ய ப்ரயோஜனங்களைப் பெற்று அகல விரும்புவாரைத்தான் ஆதரிப்பாயோ?- அநந்யப்ரயோஜனராய் அணைக்க விரும்புவாரை ஆதரிக்கலாகாதோ?; ரக்ஷித்தவுடன் எதிரம்பு நோக்குமவர்களுக்குத் தான் உதவுவாயோ?- ரக்ஷிக்காவிடினும் உன்னை நேசிப்பார்க்கு உதவுவதில்லையோ?; உன்னை எழுப்பி அரக்கரின் அம்புக்கு இலக்காக்குவார்க்கோ காரியம் செய்வது? - உன்மேல் பசும்புல் விழுந்தாலும் சகியாதவர்களாய், உன் அழகைக் காண ஆசைப்பட்ட எங்களுக்கு காரியம் செய்யலாகாதோ?; (அமரர்) மரண மற்றவர், கொன்றாலும் சாகாதார்க்குத்தான் உதவுவாயோ?-உன்னைக் கணம் பிரிந்தால் மரணமடையும் எங்களை நோக்குவதில்லையோ?; உப்புச்சாறு போன்ற அமிர்தத்தை விரும்புவார்க்குத் தான் உதவுவதென்று விரதமோ?- தெவிட்டாத அமுதாகிய உன்னை விரும்புவாரை உபேக்ஷிப்பதே உன் கொள்கையோ?; சக்தியுள்ளவர்க்குத்தான் காரியம் செய்வாயோ?- அபலைகளுக்கு அளிக்கலாகாதோ? என்று பலவிதமாய் தேவர்கள் நிலைக்கும்- பாகவதர்களான கோபிகைகளின் நிலைக்கும் உள்ள வித்தியாசங்களை பகவானுக்கு உணர்த்தி எழுப்புகிறார்கள்.

**"அமரர்களுக்குத் துன்பம் வரும் முன் சென்று துடைக்கும் நீ, துன்பமுற்ற எம்மைத் தேற்றாதிருப்பதேன், அவர்களின் நடுக்கத்தை (பயத்தை) போக்கிய நீ, எங்களை நடுங்கப் பண்ணுவது நியாயமோ? பலமே ஒரு வடிவெடுத்தது போலிருப்பவனே, ஸகல தேவதைகளையும், அந்யப்ரயோஜனர்களையும் ரக்ஷிப்பவனே, எங்களிஷ்டத்தைத் தாராய்**" என்கிறார்கள்.

**செப்பமுடையாய்...... துயிலெழாய்** அடியார்கள் விஷயத்தில் மநோ, வாக்கு, காயங்களால் ஏகரூபன் என்னும்படியான ஆர்ஜவம் உடையவனே, அவர்களோடு பொருந்தும் போது அவர்கள் ருசிக்கதக்கவாறு தன்னை அமைத்துக் கொள்பவனே, (இந்த மஹாகுணத்தை "**குணவாந் ருஜு:**" என்று ஆளவந்தார் கொண்டாடுகிறார்). ஆச்ரிதர்களை ரக்ஷித்தும், ஆச்ரிதவிரோதிகளை அழியச்செய்யவல்ல பலத்தை உடையவனே! "**அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா**" என்று

நம்மாழ்வார் சொல்கிறபடி, இவர்களும் "**இவன் செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலன்**" (ஆச்ரிதர்களுக்கு செய்யும் உபகாரத்தைத் தன் காரியம் என்று எண்ணுபவன்) என்று கொண்டாடுகிறார்கள்.

"**இப்படி குணவானாயிருக்கும் நீ அநந்யப்ரயோஜநர்களான எங்களை ரக்ஷித்ததாலுண்டான பெருமைகளை அழித்துக் கொள்ளாதே, நீ எங்களுக்கு எந்த அருஞ்செயலும் செய்ய வேண்டா, எழுந்து வந்து எங்களை நோக்கினால் போதும்**" என்கிறார்கள். இதுவரை கண்ணனை எழுப்பியவர்கள் அவன் முகங்கொடாமையை கண்டு, நப்பின்னையைத் துதிக்கிறார்கள்.

**செப்பன்ன.......துயிலெழாய்** வேதாந்த சாஸ்த்திரம் சேதனர்களுக்கு சரீரத்தாலே பேறு (பலன்) என்கிறது. சரீரத்தாலே கர்ம, ஞான பக்தியைச் செய்து மோக்ஷம் பெறலாம் என்கிறது. த்வயத்திலே - பிராட்டியாலே பேறு என்கிறது. (ஸ்வரூப ரூப குண விபவை) (திருவே, பூர்ணையானவளே) ஸ்வரூபத்தாலும், குணத்தாலும் கண்ணனின் குணபூர்த்திக்கு கொள்கலமே! பெண்ணின் வருத்த மறியாத அவனைப் போலே இருப்பதோ நீயும். நீ உணர்ந்தெழுந்து எங்களுக்கு ஸத்தை உண்டாக்க வேணும் என்ன, பிராட்டியும், "**நான் உறங்கவில்லை எழுந்திருந்து உங்களுக்கு என்ன செய்வதென்று நினைத்துக்கிடக்கிறேன்**" என்கிறாள். **உக்கமும்......பாவாய்** இதற்கு கோபிகைகள், "**திருவே! எங்களுக்கு நோன்புக்கு உபகரணமான திருஆலவட்டம், கண்ணாடி, (அதாவது கைங்கர்யத்தில் அஹங்கார மமகார நிவர்த்தியும், யதாவஸ்த்தித ஸ்வரூபஜ்ஞானமும்) இவ்விரண்டையும் தந்து உனக்கு பவ்யனான ஸ்ரீக்ருஷ்ணனையும் தரவேண்டும். எங்களுடன் இருப்பது நீ தந்த க்ருஷ்ணன் என்று அனைவரும் உகக்கும்படியாகத் தந்து, எங்களை நீராட்டி எங்களையும் க்ருஷ்ணகைங்கர்யம் பண்ணவிடு**" என்கிறார்கள்.

**உபதேசம் :-**

ஸ்ரீய: பதியான பகவான் **ஸ்வதந்திரன்.** இருந்தாலும் தன் இச்சையினாலே, தன் பக்தர்களிடமும் பிராட்டி, ஆசார்யர்களிடத்திலும் தன்னை பரதந்திரனாக அமைத்துக் கொண்டிருக்கிறான். அதனால் பிராட்டியை முன்னிட்டு பகவானைப் பற்றினால் அவளுடைய புருஷகாரபலத்தினால் பகவானைப் பெறலாம் என்கிறார். இங்கு க்ருஷ்ணாவதாரத்தில் **புருஷகாரபூதை நப்பின்னை.** ஆகையால் அவர்கள் இருவரும் சேர்ந்திருக்கும் மிதுனத்தில் அவர்களைப் பற்றுவோம் என்கிறார். பகவானும் "**பிராட்டியைச் சேர்ந்தவர்கள்**" என்பதால் இவர்களிடம் அதிப்ரீதி செய்கிறான். பகவானை அடையும் சாதனையில்



*நாதநாமக்கிரியா ராகம் - மிச்ரசாபு தாளம்*

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப*
    மாற்றாதே பால்சொரியும் வள்ளற் பெரும்பசுக்கள்*
ஆற்றப் படைத்தான் மகனே அறிவுறாய்*
    ஊற்ற முடையாய் பெரியாய்* உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே துயிலெழாய்*
    மாற்றா ருனக்கு வலிதொலைந்துன் வாசற்கண்*
ஆற்றாது வந்துன் அடிபணியு மாபோலே*
    போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய். *(21)*

செய்யப்படும் பக்தி அவரவர் ஜ்ஞானத்திற்குச் சேர வித்யாசப்படும். ஆனால் பகவானைக் கிட்டி அநுபவிக்கும் போது எல்லோருக்கும் ஒக்க அநுபவமே கிட்டுகிறது.



21 ஆம் பாசுரம் **ஏற்ற கலங்கள்**

கீழ்ப்பாட்டில், நப்பின்னையைப் பார்த்து "**இப்போதே எங்களை நீராட்டு**" (க்ருஷ்ணானுபவம் பண்ணுதல்) என்று வேண்டிக் கொண்டபடியே, "**பகவானுக்கு அடிமை செய்வதில் எனக்கும்/ உங்களுக்கும் வாசியில்லை**" என்று சொல்லி நம்பின்னை கோபியருடன் வந்து ஆண்டாள் கோஷ்டியில் சேர்ந்து கொள்கிறாள். எல்லோருமாகச் சேர்ந்து இப்பாட்டில் கண்ணனை எழுப்புகிறார்கள்.

"**உந்து**" பாசுரத்தில்: பிராட்டிக்கு பகவானைவிட ஏற்றம் சொல்லப்பட்டிருக்கிறது. தாயானபடியால் நம்மிடம் அன்பு அதிகம். நாம் பற்றினாலும் பற்றாவிட்டாலும் நமக்கு கருணை செய்யக்கூடிய ஏற்றம் பெற்றவள்.

"**அன்று**"பாசுரத்தில்:பிராட்டிக்கு பகவானோடு ஸாம்யம் சொல்லப் பட்டிருக்கிறது.இருவருடைய சேர்த்தியில் தொண்டு செய்வதே நம் ஸ்வரூபம். நம்மிடம் கைங்கர்யம் கொள்வதில் பகவானுடன் சமானமாய் உள்ளவள்.

"**ஏற்ற**" பாசுரத்தில் : பகவானுக்குத் தொண்டு செய்வதால் இவள் பகவானைவிட தாழ்ந்தவள் என்கிறது. "**ஈச்வர: ஸர்வபூதானாம்**" என்று பிராட்டி உட்பட ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அவன் ஈசுவரன் என்கிறபடியால், பிராட்டியும் **அவனுக்கு சேஷ பூதையே** விஷ்ணு பத்நீயாகையாலே ஜகத்திற்கெல்லாம் ஈசுவரி. ஆனால் பகவானுக்கு பரதந்திரைதான். நமக்கெல்லாம் **ஸ்வாமிநி** என்பது தான் தத்வம்.

**ஏற்ற.... அறிவுறாய்.** கண்ணனை அழைக்கும் போது "**ஆற்றப்படைத்தான் மகனே**" என்று அவன் தந்தையை இட்டுச் சொல்கிறார்கள்.கண்ணனுடைய தந்தையின் பெயரை முன்னிட்டு இங்கு கண்ணனை எழுப்புகிறார்கள். நந்த கோபனுக்கு, மடியின் கீழ் குடத்தை ஏந்தினால் கை மாற்றமுடியாத அளவு குடம் குடமாய்ப் பால் சொரியும் வள்ளல் போன்ற பெரும்பசுக்கள் அனேகம் உண்டு. அந்த ஐஸ்வர்யத்துடன் உபயவிபூதிக்கும் நாயகனான ஸ்ரீக்ருஷ்ணனை மகனாகப் பெற்றதனால் ஏற்பட்ட பெருமையையும் உடையவனானான். அப்படிப்பட்ட நந்தகோபனின் மகனே! நீ துயில் எழ வேண்டும். (ஆற்றப்படைத்தான் - வளமான பசுக்களையும், அறம் செய்து புகழையும் பெற்ற நந்தகோபர்).

**உற்ற.......பாவாய்** "வேதப்ரதி பாத்யனே! ஆச்ரிதரக்ஷணத்தில் ஊற்றமுடையவனே! ஆச்ரிதரக்ஷணத்தில் பக்ஷபாத முள்ளவனே! (பாண்டவ துரியோதனாதிகளை நினைப்பது) பிறப்பேயில்லாத நீ இச்சையால் அவதரித்து, பிறக்கப் பிறக்க தேஜஸ் வ்ருத்தி அடைந்து, தேஜோமயமாய் விளங்குபவனே! அப்படிப்பட்ட நீ உன் பள்ளியறையிலிருந்து எழுந்தருளவேண்டும். சத்ருக்களானவர்கள் உன் வலிமையைக் கண்டு, தங்கள் வலிமை மாண்டு போய், உன் எதிர் வர சஹியாமல், உன் திருவடிகளிலே வந்து விழுமாப்போலே! தாஸ பூதர்களான நாங்கள் உன் அழகில் தோற்று, உன்னை துதித்து, உனக்கு பல்லாண்டு பாடி மகிழ்ந்து வந்தோம்" என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்**:-"ஸ்வரூப க்ருத தாஸ்யம்"

பகவான் நமக்கு ஸ்வாமி என்கிற சம்பந்தத்தையிட்டு நாம் அவனுக்கு தாஸனாயிருப்பது, **"ஸ்வரூப க்ருத தாஸ்யம்"** எனப்படும் இதுவே சிறந்தது. பகவானுடைய ரூப குணங்களில் ஈடுபட்டு அவனுக்கு தாஸனாயிருப்பது **"குண க்ருத தாஸ்யம்"**. ஸ்ரீராமாயணத்தில், சீதையை அலங்கரித்து அழகுபார்த்த அநசூயை, **"சீதே! நீ அரண்மனை வாசத்தையும், பந்துக்களையும் விட்டு இராமன் பின் வந்தது மிகவும் போற்றத்தக்கது"** என்றாள். இதற்கு சீதை லஜ்ஜையுடன் **"அம்மா ஒரு ஸ்திரீக்கு பர்த்தாவே தெய்வம், ஸ்ரீராமன் எனக்கு கணவன் என்கிற சம்பந்தத்தையிட்டே நான் அவர் பின் வந்திருக்கிறேன். ஆனால் ராமன் திருமேனி அழகும், ஆத்மகுணங்களும் நிரம்பப்பெற்றவர். லோகத்தார் அவர் அழகையும் குணங்களையும் பற்றியே அவரைப் பிரிந்திருக்கமாட்டாமல் நான் காட்டுக்கு வந்ததாய் நினைப்பார்கள். அவருக்கு அழகோ, குணமோ இல்லாதிருந்து, நான் அவரைப் பின் பற்றி வந்திருந்தாலன்றோ எனக்குப் பெருமை"** என்று தன்னுடைய பத்தினி ஸ்வரூப லக்ஷணத்தை மிக அழகாகச் சொல்லியிருக்கிறார். இதிலிருந்து **ஸ்வரூப க்ருத தாஸ்யமே** சிறந்ததெனத் தெரிகிறது.

**உபதேசம் :**

பொதுவாக லோகத்தில் போக்யங்களை அனுபவிக்கும் வரையில் ஸ்திரீகளுக்கு தன் கணவரிடம் அன்பு இருக்கும், பின்பு கஷ்டம் வந்தால் **"நாம் ஏன் இந்த புருஷனைக் கணவனாக அடைந்தோம்"** என்று கூடத்தோன்றும். இது பத்நீ ஸ்வரூபத்திற்குச் சேராது. ஆகையால் கணவன் அழகாகவும், வசதியுள்ளவனாகவும் இல்லாதிருக்கச் செய்தேயும் அவனிடத்தில் பிரியமாகவும், பத்னி ஸ்வரூபத்தைக் குலைத்துக் கொள்ளமாலும், ஸ்வரூப க்ருத தாஸ்யம் தோற்ற கைங்கர்யம் செய்து தர்மபத்நீயாய் மிளிர வேணும் என்கிறார்.

**மற்றுமொரு விசேஷார்த்தம் :**

நல்லாசிரியரின் உபதேசத்தாலே பரிபூர்ண ஞானம் நிரம்பி வழியப்பெற்ற சத்சிஷ்யர்கள், ஆசார்யனுக்கு யுக்தி உபதேசம் செய்ய

வல்லவராய் இருக்கின்றார்களாம். வள்ளல் பெரும் பசுக்களான ஆசார்யர்களின் நல்ல உபதேசத்தாலே இத்தகைய சிஷ்யர்களையுடைய ஆசார்யனுக்கு பகவானும் பரதந்திரனாகிறானாம். இப்படிப்பட்ட உன்னுடைய நிருபாதிக சேஷித்வத்திற்குத் தோற்று, நாங்களும் எங்கள் ஆத்ம விரோதிகளான "**தேஹாத்ம அபிமானம், ஸ்வாதந்த்ரியம், அந்யசேஷத்வம், ஸ்வாதீன கர்த்ர்த்வ போக்த்ர்த்வங்களையும், பந்துக்கள் பக்கல் ஸ்நேகத்தையும், உபாயாந்தர உபேயந்தரங்களையும்**" விட்டு உன் திருவாசலில் நீயே ஸமஸ்தவித ப்ராப்ய, பராபகங்களும் என்று, உன் திருவடிகளை ஆச்ரயித்து மங்களாசாஸநம் பண்ணி வந்தோம்.



## 22 ஆம் பாசுரம் : அங்கண்மா ஞாலத் தரசர்

இப்பாசுரத்தில், ஸ்ரீய: பதியான சர்வேச்வரனை ஒரு சேதனன் பற்றும்போது, தன் அநந்யகதியையும், ஆகிஞ்சந்யத்தையும் முன்னிட்டே பற்றவேண்டும். முக்கியமாக அந்ய சேஷத்வம் கூடாது. அதாவது இந்த ஜீவன் தனக்கோ, பிறருக்கோ உரித்தவனன்று பகவானுக்கே உரியவன் என்கிற ஜ்ஞானம் அவசியம் வேணும். அப்போதுதான் ஆத்ம சிரேயஸ் சித்திக்கும். நாங்கள் எங்கள் தேக பந்துக்களையெல்லாம் விட்டு வந்தோம். நீ எங்கள் சாபத்தைப் போக்கி எங்களை அனுக்ரஹித்தருள வேண்டும் என்கிறார்.

**அங்கண்.......தலைப்பெய்தோம்** ப்ரஹ்மா முதல் ஈ, எறும்பு வரை அவரவர்க்குத் தகுந்த போகஸ்தானங்களும், போக்யப் பொருள்களும் நிறைந்த இந்த லீலா விபூதியில், பல அரசர்கள் பரிபாலித்து, தங்கள் செல்வச் செருக்கால், லோகத்தில் "**தங்களைத் தானே தெய்வம்**" என்று அபிமானிப்பதனால் அவர்களுக்குப் பல எதிரிகள் ஏற்பட்டு அவர்களால் பங்கமும் உண்டாகிறது. அப்போது அவர்கள் ஸர்வேசுவரன் ஒருவனே ராஜாதி ராஜன் என்பதை அறிந்து, இந்த பதவியும் வேண்டாம், பங்கப்படவும் வேண்டாம், என்று பகவான் சந்நிதியில் கூட்டம் கூட்டமாய் வந்து வர்த்திக்கிறார்கள்.

அவர்களைப் போல் நாங்களும், நீ இருக்குமிடத்திற்கு வந்து உன்னை ஆச்ரயித்தோம் (ஆனால் அவர்களுக்கும் எங்களுக்கும் என்ன வித்யாசம் என்றால்) நாங்கள், உன் அன்பிற்கும், அழகிற்கும், குணத்திற்கும் தோற்று வந்தோம். இதுவரை தேகாத்ம அபிமானத்துடன் இருந்தோம், இப்போது ஸ்ரீவைஷ்ணவர்கள், ஆசார்யன், பிராட்டி இவர்கள் சம்பந்தத்தால், சரீரம் வேறு, ஆத்மா வேறு; சரீரம் அழியும், ஆத்மா நித்யன்; பகவான் சேஷி (தலைவன்), நாம் பகவத் சேஷ பூதர்கள் என்றும், ஆத்மா பகவானுக்கே உரியவன், பகவானை விட்டுப் பிரிக்க முடியாத சம்பந்தத்தை உடையவன் என்றும் உணர்ந்து பகவத் சம்பந்தத்திற்கு விரோதியான எங்கள் தேஹாத்ம



*யமுனு கல்யாணீ ராகம் - மிச்ரசாபு தாளம்*

அங்கண்மா ஞாலத் தரசர்* அபிமான
    பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே*
சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்*
    கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே*
செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ*
    திங்களு மாதித் தியனும் எழுந்தாற்போல்*
அங்கண் இரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல்*
    எங்கள்மேற் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய். (22)

அபிமானம் தொலையப்பெற்று ஆத்ம பரமாத்ம ஜ்ஞானம் பிறந்து வந்தோம், அதுவும் அறிவோடு நில்லாமல், ருசி பிறந்து அனுஷ்டானம் (செயல்) வரையில் வரப்பெற்றோம் என்கிறார்கள்.

பகவானுடைய திருவடிவாரத்தில் வர்த்திப்பவர்களுக்கு ஒருவித பரிபவமும் ஏற்படாது. அதிலிருந்து விலகி இருப்பவர்கள் பக்தர்களாயிருந்தாலும் பரிபவப்பட நேரிடும். பரதன் உத்தம அதிகாரி, அவனைப் போல ராம பக்தனில்லை, இருப்பினும் சில காலம் ராமனைவிட்டுப் பிரிந்திருந்ததால் பல பரிபவங்கள் அவனுக்கு நேரிட்டன. லக்ஷ்மணன் ராமனை விட்டுப் பிரியாமல் இருந்ததனால் கைங்கர்யஶ்ரீயைப் பெற்று வாழ்வு பெற்றார்.

**ஜீவ - பர சம்பந்தம் விளக்கப்படுகின்றது:-** விசிஷ்டாத்வைத மதத்தில் ஈசுவரனும், ஜீவனும் தனிப்பட்ட தத்துவங்கள் - நித்யமானவை. ஆனால் இரண்டும் எக்காலத்திலும் சேர்ந்தே இருக்கும் ஒன்றை ஒன்று பிரிக்கமுடியாது.

ஜாதி என்றும் குணம் என்றும் இரண்டு. மனுஷ்யனிடம் மனுஷ்யத்வமும், பசுவினிடம் மிருகத்வமும் ஜாதி உசிதமான விசேஷணங்கள். "வெண்மையான வஸ்த்ரம்" என்றால் வெண்மையை குணமாக உடைய வஸ்த்ரம். இது குணப்ரகாசமான விசேஷணம். இந்த ஜாதி, குண விசேஷங்களை அந்தந்த வஸ்துவிடமிருந்து பிரிக்கமுடியாது. இது "**அப்ருதக்சித்த விசேஷணம்** " என்பர்.

ஒருவன் ஒரு குண்டலம் போட்டிருக்கிறான் என்றால் அதை அவனிடமிருந்து அகற்றி விடலாம், இது "**ப்ருதக்சித்த விசேஷணம்** " என்பர். பகவானுக்கும் ஜீவனுக்கும் உள்ள சம்பந்தம் ஜாதி, குண விசேஷணங்களைப் போல் பிரிக்க முடியாதது. சேதனாசேதனங்களோடு கூடிய ப்ரஹ்மம் ஒன்று என்பதுதான் **விசிஷ்டாத்வைதம்**.

**கிங்கிணி........பாவாய்** சூரியனும், சந்திரனும் ஏக காலத்தில் மெல்ல மெல்ல உதிப்பது போலவும், அப்படி உதிப்பதனால் சூரியனால் மலர்வதுவும், சந்திரனால் குவிவதுமான தாமரை மலர், (கிங்கிணி வாய்போல்) பாதி மலர்ந்தும், குவிந்தும், சிவந்தும் இருப்பதுபோல் இருக்கும் உன் செந்தாமரைக் கண்களால் எங்களை சிறிது சிறதாக நோக்கி எங்கள் மேல் உள்ள சாபங்களைப் போக்கியருளவேண்டும்.

இங்கு 10 வகையான சாபங்கள் கண்ணன் பார்வையால் படிப்படியாக நீங்கப்பெற்றதைத் தெரிவிக்கிறார்கள். உன் குளிர்ந்த காடாக்ஷத்தால் எங்கள் சாபம் தீர்ந்து ஆத்மசிரேயஸைப் பெறுவோம். (மந்திர சித்தி பெற்றவன் கண் பார்வையால் விஷம் நீங்குமாப்போலே). சேதனர்களின் சாபமாவது :

1. தேகமே ஆத்மா என்கிற அஞ்ஞானம் நீங்கி ஆத்ம ஸ்வரூபம் சித்திக்கிறது. பிறகு,
2. சர்வ ஸ்வதந்திரன் என்கிற எண்ணம் நீங்கி சேஷத்வம் சித்திக்கிறது. பிறகு,
3. எது தொண்டு என்று அறியமுடியாத கலக்கம் தொலைந்து பகவத் கைங்கர்யம் 'சித்திக்கிறது. பிறகு,
4. ஏனைய விஷயாந்திரங்களிலே மண்டாமல் பகவத் கைங்கர்ய, காலக்ஷேபம் சித்திக்கிறது. பிறகு,
5. தனக்கு, என்று வாழும் எண்ணம் மாறி உகந்து பகவதாஞ்ஞா கைங்கர்ய நிஷ்டை சித்திக்கிறது. பிறகு,
6. ஸ்வரக்ஷணம் மாறி பகவத் ரக்ஷணத்தில் கால் தாழ்ந்திருக்கும் எண்ணம் சித்திக்கிறது.பிறகு,
7. ஸ்வகர்மநிஷ்டையின் நிலையறிந்து கர்ம யோகம் சித்திக்கிறது. பிறகு,
8. சோம்பேறித்தனம் (எல்லாம் அவன் செயல்) என்னும் நிலைமாறி வாழும் சோம்பர் என்னும் நிலை சித்திக்கிறது. பிறகு,
9. உபாய புத்தியில் ப்ரவேசிக்கும் நிலைமாறி உபாயோ பேயம் அவனே என்ற நிலை சித்திக்கிறது. பிறகு,
10. இவை அனைத்தும் நான் செய்தேன் என்ற மமதா புத்தி நீங்கி அதுவும் அவனது இன்னருளே என்றநிலை சித்திக்கிறது.

இவற்றால், சேதனன் பகவானுக்குப் பரதந்திரனாகி, பரதாழ்வான் நிலையில் பகவானின் திருவுள்ளமறிந்து காரியமாற்றும் அனுக்ரஹம் கிட்டுகிறது. இந்த பக்குவ நிலையின் முடிவு பாகவத சேஷத்வமான எல்லை நிலத்தில் கொண்டுவிடுகின்றது.

இப்படி உன்னுடைய சந்திரன் போன்ற குளிர்ந்த பார்வையால் ஆத்ம சேஷமம் ஏற்பட்டு, சூரியன் போன்ற பார்வையால் ஆத்ம விரோத குணங்களும் கழியப் பெற்று, இதனால் எங்கள் சாபங்கள் படிப்படியாக நீங்கப்பெற்று, உன் கல்யாண குணங்களிலேயே ஈடுபட்டு, உண்மையான பக்தி ஏற்பட்டு, இவற்றுடன் காரியங்களை சுலபமாகச் செயலாற்றும் தன்மை ஏற்படுகிறது. இதனால் ஏற்படும் ஆனந்தமும், உன்னுடையதே என்று சமர்ப்பிக்கும் மனப்பான்மையும் ஏற்படுகிறது. ஆகையால் உன் கடாக்ஷத்தை சிறிது சிறிதாகவும் பூர்ணமாகவும் எங்களுக்கு அருளவேண்டும்.

**உபதேசம்** : - அநந்யார்ஹ சேஷத்வம்

க்ருஷ்ணனின் கடாக்ஷம் ஒன்றே சுகரூபமாயும், அஜ்ஞான நிவர்த்தகமாயும் இருக்கும். அதனால், நீங்கள் அவனையே அனைத்து விதமான பந்துவாய்க் கொண்டு, அவனுடைய வஸ்துவாய் வந்து ஆச்ரயியுங்கள் என்கிறார். பதிவ்ரதா ஸ்திரீயைப் போல வாருங்கள் என்கிறார். பகவான் அந்யசேஷப்பட்ட பொருளை விரும்பமாட்டான். (பூதனை விடப்பாலை கண்ணனுக்கென்றே வைத்திருந்தபடியால் அதை அமுதமென்று உண்டு, அவளுக்குத் தாய் ஸ்தானத்தையும் கொடுத்தானன்றோ! என்று உதாரணமும் சொல்கிறார்).



புன்னாகவராளி ராகம் - ஆதி தாளம்

*மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்*
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து*
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி*
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு*
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா* உன்
கோயில்நின்று இங்ஙனே போந்தருளி* கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து* யாம்வந்த
காரியம் ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய். (23)

## 23ஆம் பாசுரம் : மாரி மலை முழைஞ்சில்

கீழ்ப்பாட்டில் கோபியர்கள், "**கதியற்ற ராஜாக்கள் உன் திருவடிகளிலே வந்து படுகாடு கிடக்குமாப் போல, நாங்கள் உன் குணத்திற்குத் தோற்று வந்தோம். நீ கடாக்ஷித்தால் எங்கள் சாபமும், பாபமும் போகும்**" என்று ப்ரார்த்திக்கிறார்கள். இதனால் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு இவர்கள் பேரில் அநுதாபம் ஏற்பட்டு, "**நான் இப்போது உங்களுக்கு என்ன செய்யவேண்டும்**" என்று கேட்க, இவர்கள், "**நீ உன் திருப்பள்ளியறையிலிருந்து எழுந்து நடந்து வந்து உன் தர்மாதி பீடமான சீரிய சிங்காசனத்தில் அமர்ந்து நாங்கள் வந்த காரியத்தை, எங்கள் உள்ளக் கிடக்கையை ஆராய்ந்தறிந்து அருளவேணும்**" என்று ப்ரார்த்திகிறார்கள். உத்தம ஸ்திரி தன் ரக்ஷணத்தை தானே தேடிக் கொள்ளக் கூடாது, தன் பர்த்தாவைத் தவிர இதர புருஷனாலும் தேடிக் கொள்ளக் கூடாது.

ஜீவாத்மாவின் புருஷனான பரமாத்மாவே நம்முடைய ரக்ஷணத்தைச் செய்யவேணும் என்கிறார்கள். இதையே ஸ்ரீராமாயணத்தில் சீதாபிராட்டி "**ஸ்ரீராமனே, ராவணனை பந்துமித்திரர்களுடன் அழித்து, என்னை மீட்டுப் போனாலன்றோ அவனுடைய புருஷோத்தமத்வத்திற்குச் சேரும்**" என்கிறார்.

**மாரி........போலே** பகவான் எந்த நிலையில் இருந்தாலும், பக்தர்கள் அந்தந்த நிலையிலேயே அவன் அழகை அநுபவிப்பார்கள். வர்ஷாகாலத்தில் பர்வதகுஹையில் "சிம்ஹம், சிம்ஹி" என்கிற ஆண் பெண் சிங்கங்கள் ப்ரணயரஸம் தோற்ற தூங்குகின்றன. பிறகு காலம் உணர்த்த உணர்ந்த சிங்கம், கர்ஜித்துக் கொண்டு, கண்களில் தீப்பொறிபரக்க, ஸ்வாதீநமாக சரீரம் மூரி நிமிர, கம்பிரமாய் வெளியில் வரும், அது போல நீ நடந்து வரவேணும். அந்த அழகுக்கு நாங்கள் பல்லாண்டு பாட வேண்டும்' என்று பாரிக்கிறார்கள். பகவானுக்கு சிம்ஹ நடை, கஜ நடை, வ்ருஷப நடை, புலிநடை என்று நான்கு வித நடை சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த நடை அழகை இன்றும் "**திருவரங்கச் செல்வனிடம்**" காணலாம். அறிவுற்று- "**பூ அலர்ந்தாற்போலே காலம் உணர்த்த உணருகை**"-சம்ஸாரிகள் காலமுணர்த்த உணர்வார்கள்; இவன் ஆச்சிரிதர்களின் ஆர்த்தி உணர்த்த உணர்வன்.

**பூவை.....பாவாய்** பூவைப் பூ போற்றவனே, இவ்வழகு வெள்ளத்தை உன் திருமாளிகைகுள்ளேயே தேக்கி வைத்துக்கொள்ளாமல், உன் நடையழகையும், நீ சீரிய சிங்காதனத்திலே வீற்றிருக்கும் அழகையும் நாங்கள் காணும்படி, நப்பின்னைப் பிராட்டியுடன் நடந்து வரவேண்டும். பிறகு உன் **தர்மாதிபீடத்தில்** அமர்ந்து நாங்கள் உன்னைத் தேடி, நாடி வந்த காரணத்தை (காரியத்தை) எங்கள் உள்ளத்தை ஆராய்ந்து நீயே எங்களுக்கு அருள் புரியவேண்டும் என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்**:- பகவத் க்ருபை

பகவான் ஸ்வதந்திரன், இக்குணமே அவனுடைய பரத்வத்திற்கு அசாதாரண சின்னம். ஆகையால் இதையறிந்த ஆண்டாள் சமயம் பார்த்து அவனிடத்தில் நம்முடைய ஆர்த்தியை தெரிவிக்க வேணும் என்றும், "**உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை, நீயே ஆலோசித்து எங்களுக்கு நன்மையைச் செய்ய வேணும்**" என்கிறார். ஒரு பட்டத்து யானை ஒரு தரித்திரன் கழுத்தில் மாலையைப் போட்டால் அது ஏன் அப்படி செய்தது? என்று கேட்கமுடியாது, அது போன்று பகவான் தன் இச்சையால் சிலரிடம் க்ருபை செய்கிறான். இது சாஸ்திர மரியாதையைக்கூட மீறியிருக்கும். இது அவன் இச்சாக்ருபை. இப்படி இவன் செய்வதை யாரும் தடுக்க முடியாது. ஆகையால், இதை அறிந்த ஆண்டாள் "**நீயே ஆராய்ந்து அருள்**" என்று சாதுர்யமாய் விண்ணப்பிக்கிறார்.

**உபதேசம்**:-

ஆர்த்தியோடு ஒருவன் பகவானை சரணம் பற்றினால் கட்டாயம் பலன் சித்திக்கும். ஆனால் அந்த சரணாகதியே உபாயமென்றாகாது. சித்த தர்மமான பகவானே உபாயம். அவன் இச்சையே உபாயம். இதை நிரூபிப்பதே பரத சரணாகதி. தாஸ்ய ஸ்வரூபம் பெற்ற சேதனனுடைய ப்ரார்த்தனை பகவானுடைய இச்சைக்கு மாறி இருத்தல் கூடாது.



24ஆம் பாசுரம்: **அன்றிவ்வுலகம்**

அர்ஜுனன் சொன்னபடி தேரையே நடத்தினவன். அவனைவிட உத்தம அதிகாரிகளான கோபியர் சொன்னால் செய்யாமல் இருப்பானோ! இவர்கள், கீழ்ப்பாட்டில் ப்ரார்த்தித்தபடி க்ருஷ்ணன் நடந்து வந்து சீரிய சிங்காசனத்தில் வீற்றிருக்கிறான். அவனுக்கு இப்பாட்டில் பல்லாண்டு பாடுகிறார்கள்.

**அன்று.....அடிபோற்றி** கோபிகைகள் எல்லோரும் க்ருஷ்ணனை வலம் வந்து அவன் திருவடிகளைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்கிறார்கள். வெண்ணையுண்டு வளர்ந்த திருமேனியாகையாலே அவை சிவந்து காணப்படுகின்றன. இப்படி சுகுமாரமான திருவடிகளைக் கொண்டு, அவன் செய்த அமானுஷ்யமான கார்யங்களை நினைத்து இங்கு ஆண்டாளும், தன் திருத்தகப்பனாரைப் போலவே வயிறு பிடித்து அத்திருவடிகளுக்குப் பல்லாண்டு (போற்றி) பாடுகின்றார்.

அன்று இவ்வுலகத்தை இப்பஞ்சுத் திருவடியால் அளந்தாயே, மமகாரமே உடைய இந்த லோகத்தவர் மாயையினால் உறங்கியிருக்க, அவர்கள் அறியாமலேயே, எல்லோர் தலையையும் உன் திருவடியால்



குறிஞ்சி ராகம் - கண்டசாபு தாளம்

*அன்றிவ் வுலக மளந்தாய் அடிபோற்றி*
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி*
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி*
கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி*
குன்று குடையா எடுத்தாய் குணம்போற்றி*
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி*
என்றென்றுன் சேவகமே யேத்திப் பறைகொள்வான்*
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய். (24)

ஸ்பரிசித்தாயே. (உறங்குகின்ற ப்ரஜையை தாய் அணைத்துக்கிடந்து சத்தைப் பெறுமாப்போலே, தாயாயிருக்கும் வண்ணமாக பகவான் சத்தை பெற்றான்). அன்று உன் திருவடிக்கு பல்லாண்டுப் பாடுவாரில்லை, அந்தக் குறைதீர இன்று நாங்கள் உனக்குப் பல்லாண்டு காப்பிடுகிறோம். இங்கேயும், **திருவிக்கிரம** அவதாரத்தைத்தான் முதலில் கொண்டாடுகிறார்.

**சென்று.......போற்றி** ராமாவதாரத்தில் அயோதிக்கும் இலங்கைக்கும் இடையில் எத்தனை தூரம், அவ்வளவு தூரம் பிராட்டியும் பிடிக்கும் மெல்லடிகளால் நடந்து சென்று "**புலி இருக்கும் குகையில் அதைத் தட்டி எழுப்புவார்போல, இராவணனுடன் யுத்தம் செய்து அவனை நிரஸனம் செய்த அந்த (திறல்) பலத்திற்கு போற்றி**"; ஸ்ரீக்ருஷ்ணவதாரத்திலே, அப்பிஞ்சுக் காலால், உன்னை நலிய, வண்டிச் சக்கரத்தில் ஆவேசித்து வந்த சகடாசுரனை உதைத்து நிரஸனம் செய்து, "**சின்ன சிசு உதைத்து சகடாசுரன் மாண்டான்**" என்னும் புகழைப் பெற்றாயே! அப்புகழுக்குப் பல்லாண்டு. க்ருஷ்ணன் சிறு பாலகனாய் இருக்கும் போது கன்றுகள் மேய்ப்பான். ஒரு சமயம் இரு அசுரர்கள் ஒருவன் கன்றின் மேலும், மற்றொருவன் விளாமரத்தில் விளாங்கனியிலும் ஆவேசித்து க்ருஷ்ணனைக் கொல்லயத்தனித்தார்கள். க்ருஷ்ணன் அக்கன்றின் கால்களைப் பிடித்து விளாங்கனிமேல் எறிந்து ஒரே நேரத்தில் இரண்டு அசுரர்களையும் கொன்றார். இந்த வ்ருத்தாந்தத்தில் "**எறிந்தாய் கரம் போற்றி**" என்று சொல்லாமல் "**கழல் போற்றி**" என்று சொல்லுவானேன்? என்றால் கன்றை வீசி எறிந்த போது காலைத் தூக்கி வளைத்து நின்ற அந்த திருவடிக்குப் பல்லாண்டு. அந்த இரண்டு பேரும் சேர்ந்து உன் தலைமேல் விழுந்திருந்தால் என்னவாகியிருக்கும் என்று அந்த குஞ்சித்த பாதங்களுக்குப் பல்லாண்டு என்று காப்பிடுகிறார்.

**குன்று..........போற்றி** அநுகூலரும் சிலசமயம் பகவானிடம் விரோத பாவத்துடன் நடந்து கொள்வர். அப்போது பகவான் அவர்களை நிரஸனம் செய்யாமல், அவர்களுக்குக் கஷ்டங்களைக் கொடுத்து புத்தி புகட்டி, அவர்களே தன்னை ஆச்ரயிக்கும்படி செய்வான். இக்குணம் நித்யமாய் இருக்கவேணும் என்று காப்பிடுகிறார். (இந்திரன் க்ருஷ்ணனுக்குச் செய்த கோவிந்த பட்டாபிஷேகமே த்ருஷ்டாந்தம்) இந்திரன் இவனுக்குப் பகையாகி மழையைத் தொடர்ந்து வர்ஷிக்க, உடனே க்ருஷ்ணன் கோவர்த்தனமலையைத் தூக்கி குடையாகப்பிடித்து கோக்களையும், இடையர்களையும் ரக்ஷித்து, அவர்களுக்கு இந்திரனால் வந்த ஆபத்தைப் போக்கி இந்திரனுக்கும் புத்தி புகட்டிய அக்குணத்திற்கு பல்லாண்டு. தசரதன் வில்லைப் பிடித்ததால் - ராமனும் வில்லைப் பிடித்தார், நந்தகோபர் "**வேல்**" பிடித்திருந்ததால் - க்ருஷ்ணனும் வேலைத் தனக்கு ஆயுதமாகக் கொண்டான் **வென்று........வேல்** ஆச்ரிதர்களுக்கு பாதுகாப்பாய், ஆச்ரித ரக்ஷணத்திற்கு உறுப்பாய், ஆஸ்ரித விரோதிகளைப் போக்கி அவர்களை வென்று நிற்கும் அவ்வேலுக்கும் போற்றி என்று, இப்படி உன் பல



*பெஹாக் ராகம் - ஆதி தாளம்*

ஒருத்தி மகனாய்ப் பிறந்து* ஓரிரவில்
    ஒருத்தி மகனாய் ஒளித்து வளர*
தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த*
    கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்*
நெருப்பென்ன நின்ற நெடுமாலே* உன்னை
    அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்*
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
    வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (25)

செயல்களுக்கும் பல்லாண்டு பாடி, உன் நித்ய கைங்கர்யத்தைப் பெற நாங்கள் (இற்றைப் பறை கொள்வான்) இன்று வந்திருக்கிறோம் என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்**:- மங்களாசாஸனம்

நாவுக்கு ஷட்ரஸமாய், அறுஞ்சுவையாய் இருந்தபடி அடிபோற்றி, திறல் போற்றி, புகழ்போற்றி, கழல் போற்றி, குணம் போற்றி, வேல் போற்றி என்றார்கள். எங்கள் ஸ்வரூபத்திற்குச் சேர உன் வீரசரிதத்தைப் போற்றிப் பல்லாண்டு பாடி, உன் கைங்கர்யத்தை யாசித்துப் பெற இன்று வந்திருக்கிறோம். நீ எங்களுக்கு க்ருபையோடு அதை அருளவேண்டும் என்கிறார்கள்.

பெரியாழ்வார், ஜனகன், பெரிய உடையார் மூவரும் பகவானுக்குப் பல்லாண்டு பாடியவர்கள். ஜ்ஞானிகள், பகவானின் ஸ்வரூப குணங்களான ஜ்ஞான சக்திகளை அனுபவிக்கும் போது தெளிந்து, அவன் ரக்ஷகன் என அறிந்து, தம்மை ரக்ஷிக்க அவனை ப்ரார்த்திப்பார்கள்.

அதே ஜ்ஞானிகள், அவனுடைய ரூப லாவண்ய குணங்களான சௌந்தர்ய, ஸௌகுமார்யாதிகளை அனுபவிக்கும் போது அவன் ஜ்ஞான சக்திகளை மறந்து தட்டு மாறி, இந்த சுகுமாரமான திருமேனிக்கு என்ன தீங்குவருமோ! என்று கலங்கி அவனுக்குப் பல்லாண்டு பாடுவார்கள். இது ப்ரேமை முற்றின தசை -மிகவும் போற்றதக்கது.

**உபதேசம்**:-

சேஷிக்கு அதிசயத்தை (மேன்மையை) விளைவித்தலே சேஷனான (அடிமையான) சேதனனுக்கு ஸ்வரூபம், அவனுக்குப் பல்லாண்டு பாடுவதை விட மேலான கைங்கர்யம் (தொண்டு) வேறில்லை என்கிறார். இக்கன்னியர் செய்த அறுவகை மங்களாசாசனம் நாவுக்கு ஷட்ரஸமாய் இருப்பது போல், இப்பாசுரங்களை ஓத, ஓத இதன் இன்சொல்லும், புதை பொருளும் கதையமைப்பும், கவிநயமும், குணசித்திரமும், இசையின்பமுமாக நமது நாவிலும், செவியிலும் உள்ளத்திலும் தெவிட்டாது தித்திக்கின்றன.



## 25ஆம் பாசுரம் ஒருத்தி மகனாய்ப் பிறந்து

ஸ்ரீக்ருஷ்ணன் திவ்ய சிம்மாஸனத்திலிருக்க, கோபியர் அவனைச் சூழந்திருந்து அவனுக்குப் பல்லாண்டு பாடினார்கள். கீழ்ப்பாட்டில், அந்த கோபியர்களை நோக்கிக் கண்ணன், "**நீங்கள் இக்குளிரிலே இவ்வளவு சீக்கிரமாக எழுந்து வருந்தி வந்தீர்களே, உங்களுக்கு வேண்டுவது என்ன ?**" என்று கேட்க, அதற்கு, "**நாங்கள் உன்னை அர்த்தித்து வந்தோம், உன்னையே பரம ப்ரயோசனமாகப் பெற்று உனக்கு கைங்கர்யம் செய்ய வந்திருக்கிறோம்**" என்கிறார்கள் இப்பாட்டில்.

**ஒருத்தி......மாலே!** தன்னை ஆச்ரயித்தவர்களை பகவான் சிலசமயம் சோதிப்பதுண்டு. இப்போது இவர்களை நோக்கி, "**நீங்கள் பாபம் நிறைந்த சம்சாரிகள், உங்களிடம் எப்படி நான் கைங்கர்யம் கொள்வது?**"என்ன, அதற்கு கோபியர்கள், "நீ அரிய பெரிய செயலை செய்தவன் அல்லவா! தேவகி வயிற்றில் பிறந்து அதே இரவில் நீ கோகுலம் போய் யசோதையிடம் வளரவில்லையா! தேவகி வயிற்றிற்கு பிள்ளையாகவும், கம்ஸனின் வயிற்று நெருப்பாகவும் இருக்கவில்லையா! அடியவர்களை கம்ஸன் பயாக்னியால் ஹிம்சித்தான். அதே பயாக்னியை கம்ஸன் வயிற்றிலே சேர்ப்பித்தவனில்லையா நீ! உன்னால் ஆகாதது என்பது ஒன்றுண்டோ! ஆகையால் நீயே எங்கள் பாபத்தைப் போக்கி, எங்களிடம் கைங்கர்யமும் கொள்ளவேணும்" என்கிறார்கள்.

உபய விபூதியையும் நான் என் ஒரு அம்சத்தினாலேயே தரிக்கிறேன் என்று க்ருஷ்ணன் கீதையில் தன்னையே ஜகத்திற்கு காரண வஸ்துவாகவும், தரித்து நியமிப்பவனாகவும் சொல்லியிருப்பதனால், இந்த க்ருஷ்ணனே வேதத்தில் சொல்லப்படும் பரப்ரஹ்மம் என்று தேறுகிறது.

"அப்படிப்பட்ட ஜகத்திற்கு காரணமாயும், தரித்தும் நியமித்தும், போருகிற க்ருஷ்ணனை, தன் வயிற்றில் தரித்து நியமித்துப் போருகிற பெருமையைப் பற்றி தேவகியை "**ஒருத்தி, ஒப்பற்றவள்**" என்கிறார்கள். கம்பத்தைப் பிளந்து கொண்டு தோன்றினான் நரசிம்மன், கஜேந்திரனுக்காக பரமபதத்திலிருந்து நேரே தோன்றினான் நாராயணன். அப்படியல்லாமல் தேவகி வயிற்றில் கர்ப்பவாசம் செய்து அவளுக்கு புத்திரனாக அவதரித்து, மாதா பிதா சொற்படி உடனே கேட்டு, கோகுலம் சென்றான். குழந்தை பிறந்தால் கால்கட்டு என்பது போக க்ருஷ்ணன் அவர்கள் கால்கட்டை அறுத்துப்பிறந்தான். என்னே! அவன் மேன்மை; என்னே! அவன் நீர்மை" என்று அவன் பிறப்பைக் கொண்டாடுகிறார். (**"நான் உன் பிறவியை அறுப்பதற்கென்றே என் இச்சையால் பல அவதாரங்களைச் செய்கிறேன். இப்படி என் அவதார ரஹஸ்யங்களை நீ அறிந்தால், பல பிறவிகள் எடுத்து பிறக்கும் உன் பிறவி போய்விடும், உனக்கு மறுபிறவியில்லை**" என்கிறான் கண்ணன்- கீதையில்)

**உன்னை..........பாவாய்** பரஞ்சோதியான ஸர்வேச்வரனின் ஸௌலப்ய, பூர்த்தியை அனுபவித்த ஒருத்தி (யசோதை) "**அழுகையும், அஞ்சி நோக்கும் அந்நோக்கும், அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையும் இவை கண்ட யசோதை தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே**" என்ற குலசேகரர் வாக்குப்படி, யசோதை கட்டவும், அடிக்கவும் தன்னைக் கொடுத்த ஸௌலப்யத்திற்கு ஈடு உண்டோ! "**நேரினில் தோன்றினால் தன்னை சேதனர்கள் ஆணையிட்டு விலக்குவர்**" என்று பகவான் அவர்கள் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாய் இருப்பதுபோல, பகவான் கம்ஸனுக்குப் பயந்து ஆய்ப்பாடியிலே ஒளிந்து வளருகின்றான். பகவான் இருப்பதையே பொறுக்காத கம்ஸன், அவனுக்குப் பலபடிகளில் தீங்கு செய்து அஸக்யாபசாரம் பண்ணினபடியால், அவன் தீமைகளையே அவனுடைய நெஞ்சுக்கு நெருப்பாக்கினான் க்ருஷ்ணன்.

ஆச்ரித வாத்ஸல்யமானவன் நெடுமால், அப்படிப்பட்டவன் சத்ருக்களுக்கு நெருப்புப் போன்றவன். "**இத்தனை மேன்மையான குணங்களை உடைய, உன் கீர்த்தியைப் பாடுவதே புருஷார்த்தமாய்க் கொண்டு பாடி, உன்னையே பரம ப்ரயோஜனமாகப் பற்றிவந்தோம். அப்படிப்பட்ட எங்களுக்கு தாயாரும் மகிழத்தக்க செல்வத்தையும், லக்ஷ்மீ பதித்வத்தால் வந்த செல்வத்தையும், கைங்கர்யத்தையும் நீயே விரும்பித் தந்தருளவேணும், இதனால் உன்னை இதுநாள் வரையில் பிரிந்திருந்த எங்கள் வருத்தமும் தீர்ந்து மகிழ்வோம்**" என்கிறார்கள்.

உடனே கண்ணன், "**நாங்கள் இருவரும் உங்களிடத்தில் வருவதால் உங்கள் வருத்தம் எப்படி தீரும்?**" என்று கேட்க, இவர்கள் "**உபய விபூதி நாயகனான நீயே எங்களுக்குச் சொந்தமானால், உன் விபூதியும் எங்கள் சொந்தம் தானே! செல்வங்களுக்கு அதிபதியான திருத்தாயாருக்கும் நீதானே திரு! இப்படி அவனும் நீயும் எங்களிடம் இருக்க, எங்களிடம் வருத்தம் எவ்வாறு இருக்கும்?, அது தீருவதால் மகிழ்ந்தும் இருப்போம்**" என்கிறார்கள்.

(திருத்தக்க செல்வமும் சேவகமும்) என்பது தாயாரும் ஆசைப்பட்டு விரும்பும் பகவத் கைங்கர்யம். "**இதை யாசித்துப் பெறவே வந்தோம். (பகவத் கைங்கர்யம் யாசித்தே பெறவேணும்) இதை நீயே உன் திருஉள்ளத்தால் இரங்கி எங்களுக்குத் தந்தாயானால், உன்னால் எங்களுக்கு அநிஷ்ட்டம் நிவ்ருத்தியாகி, இஷ்டமானது ப்ராப்தமாகும்**" என்கிறார்கள்.



## 26ஆம் பாசுரம் **மாலே மணிவண்ணா**

கீழ்ப்பாட்டில், உன்னை அருத்தித்து வந்தோம் என்கிறார்கள் கோபிகைகள். இப்பாட்டில் கண்ணன், "**உங்களுக்கு வேண்டுவது என்ன?**" என்று கேட்கிறான். அதற்கு இவர்கள் நோன்பிற்கு வேண்டிய உபகரணங்களைத் தரச்சொல்லிக் கேட்கிறார்கள். "**முதலில் என்னைக் கேட்டீர்கள் இப்போது பறையைத் தரச் சொல்லிக் கேட்கிறீர்களே, அப்படியானால் நீங்கள் ப்ரயோஜனபரர்கள் தாம் போலும்**" என்கிறான் க்ருஷ்ணன். அதற்கு "**அப்படியல்ல க்ருஷ்ணா, கோபாலர்களுக்காக நோன்பு நோற்கின்றபடியால், அவர்களுக்கு உபகாரமாய், நோன்புக்கு அங்கமாய் இருப்பவைகளை உன்னிடம் கேட்கிறோம். எங்களுக்கு வேண்டியது உன்னுடைய சம்பந்தமே, எங்கள் மேல் கோபாலர்கள் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு அனுகூலமாய் அருள் செய்யவேண்டும்**", இப்படிக் கேட்ட அவர்கள் மீது அன்பு உண்டாயிற்று க்ருஷ்ணனுக்கு. அதனால் "**சரி கேளுங்கள் தருகிறேன்**" என்கிறான்.



குந்தலவராளி ராகம் - ஆதி தாளம்

மாலே மணிவண்ணா மார்கழிநீ ராடுவான்*
    மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்*
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன*
    பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே*
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே*
    சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே*
கோல விளக்கே கொடியே விதானமே*
    ஆலின் இலையாய் அருளேலோ ரெம்பாவாய். (26)

முதலில் **மாலே!** என்றார்கள். **மால்** என்றால் வாத்ஸல்யத்தோடு கூடிய வ்யாமோஹம் உடையவன் என்று அர்த்தம். தங்களுக்குத்தான் கண்ணன் மேல் அன்பு அவனுக்கில்லை என்று நினைத்திருந்தவர்கள், அவனை இப்போது நேரில் சேவிக்கும் போது, அவனுக்கு தங்களிடமுள்ள அன்பு, அதிகமாக அவன் கண்களிலே ப்ரகாசிக்க, வாத்ஸல்ய குணமே சொரூபமாக இருக்கும்படியைக் கண்டு "**மாலே**" என்று அன்பு தோற்ற அழைக்கிறார்கள். இதைக் கேட்டவுடன் பண்டையிலும் பெரும் பித்தனானான் கண்ணன் இவர்களிடம். **மணிவண்ணா!** அபரிசேத்யனாய் இருக்கச்செய்தேயும்(நெடுமாலாய் இருப்பினும்) முந்தானையிலே முடிந்தாளலாம்படியிருக்கை, வடிவிலே வ்யாமோஹம் நிழலிடுகை, இந்நீர்மையோடு விடவொண்ணாத வடிவழகு. பெண்கள் பிச்சுக்கு நிதானமான வடிவு, "**மாலாய் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை**"நா.திரு.

இப்படி இவனைப் பார்த்து மயங்கி நிற்கும் பெண்களைப் பார்த்து, "**நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்கள்**" என்றான் கண்ணன். அவர்களும் முந்துற முன்னம் "**மார்கழி நீராட்டம் தந்தருள வேணும்**" என்றார்கள். அஃதென்ன! என்கிறான் கண்ணன். உடனே இவர்கள் "**மார்கழி மாதத்தில் நோன்பிற்கு அங்கமாய்க் குளிக்கை - காம்யார்த்தனுக்கு இது ஸாதநம், நிஷ்காம்யனுக்கு இது நித்யம், ப்ரபந்நாதிகாரிகளுக்கு இது பகவத் கைங்கர்யம்**" என்றார்கள். இதற்கு ப்ரமாணமென்ன? என்கிறான் கண்ணன். அதற்கு அவர்கள் **மேலையார் செய்வனகள்** என்று நம் முன்னோர்கள் அநுஸந்தித்தது என்றார்கள். பெரியோர் தொழும் தெய்வத்தை நாம் குலதெய்வமாக வழிபடுவதில்லையா!. அதுபோலத் தான் இதுவும் **சிஷ்டாசாரம்** என்கிறார்கள். "**ஓ! அப்படியானால் அதற்கு வேண்டுவதென்ன?**" என்று கண்ணன் கேட்க, "**சொல்கிறோம் வேடிக்கை, பராக்கு பார்க்காமல் நாங்கள் சொல்வதை கவனமாய்க் கேள்**" என்கிறார்கள்.

**ஞாலத்தை.....சங்கங்கள்** - பூமிபரப்பிலுமுள்ள அஹங்காரி சேதனர்கள் நடுங்கும்படி த்வநிக்குமதாய், அதிபோக்யமாய், அதிபரிசுத்தமாய், உன் திருக்கையில் இருக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யம் போல பல சங்கங்கள் வேணும். (இதனால் அநந்யார்ஹசேஷத்வ ஜ்ஞானமும், ஓம்கார சப்த வாச்யனான திருமந்திர ஜ்ஞானமும் சித்திக்க வேணும் என்றாயிற்று).

**சாலப்பெரும் பறையே** மிகவும் த்வநிக்கிற மத்யத்திலே அதிக சப்தம் கொண்ட, பெரும் பறையென்கையாலே (மத்யே இருக்கிற "**நமஸ்**" சப்தார்த்தமான பாரதந்த்ரிய ஜ்ஞானமும், ஸ்வஸ்வாதந்திரியத்தைக் கழித்த சேஷத்வ ஜ்ஞானமும், கைங்கர்யத்தில் ஸ்வாதீந புத்தியும், போக்யதா

புத்தியும் நிவர்த்திக்கின்ற ஜ்ஞானமும் ப்ரகாசிக்கும் படி செய்யவேணும் என்றாயிற்று).

**பல்லாண்டிசைப்பாரே** "சாது ஸத் ஸஹவாஸம் வேணும், (கோலவிளக்கே) இப்படியான யோக்யதையை ஏற்படுத்திக் கொடுக்கும் பாகவத சேஷத்வ ஜ்ஞானமும் வேணும், (கொடியே) சேஷத்வ லக்ஷணமான கைங்கர்யமும் வேணும், (விதானமே) அக்கைங்கர்யத்தில் போக்த்ர்த்வ நிவர்த்தியும் வேணும்" என்றார்கள்.

இவற்றை உன்னித்துக் கேட்ட கண்ணன், "**இப்படி இல்லாததையெல்லாம் கேட்டால் எப்படி கொடுப்பது, புதிதாக உண்டாக்கலாமோ?**" என்கிறான். அதற்கு இவர்கள் **(ஆலினிலையாய்) "முன்பு இல்லாததை உண்டாக்கியவன் தானே நீ!, உனக்கு எங்கள் மீது (அருள்) க்ருபை உண்டானால் இது ஒன்றும் பெரிய காரியமில்லை**", என்கிறார்கள். ஆகையால் உன் அருளே எங்களுக்கு வேண்டுவது என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்**:- ஸாரூப்யம்

இப்படி "**மால்**" என்று அவனுடைய ஸௌலப்ய பூர்த்தியைச் சொல்லி, **மணிவண்ணா**! என்று அவன் பரத்வம் சொல்லப்படுகின்றது. மோக்ஷம் பெறும் ஜீவனுக்குள்ள பகவத் ஸாம்யத்தையே இப்பாசுரம் சொல்லுகிறது. அவனிடம் கூடி இருக்கவேண்டுமானால், அதற்கு இடையூறாய் இருக்கும் குணங்களை நீக்கி, அவனுடன் நித்யவாசம் செய்யும் நித்ய சூரிகளுக்கு ஒத்த குணங்களையும், ஜ்ஞானத்தையும் அவன் தானே தரவேணும். நித்யசூரிகள் பொன் போன்றவர்கள் அவர்களை நோக்கில் நாம் கரி போன்றவர்கள், பாபம் நிறைந்தவர்கள். இப்படி இருக்கும் நம்மை "**ச்ரேயஸ்**" ஆக்கும் சக்திவாய்ந்தவன் அவனே.

கோபிகைகள், "**கண்ணா!** "**அஹம்**" என்று சொன்ன, நீ தானே அதைச் செய்ய வேண்டும். "**மாமேகம் சரணம் வ்ரஜ**" என்று கையும் உழவுகோலும், பிடித்த சிறு வாய்க்கயிறும் ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாட்டின திருவடிகளுமாய் நிற்கின்ற ஸௌலப்யம் நிறைந்த சாரத்ய வேஷத்தை, "**மாம்**" என்று காட்டி, என்னை சரணம் பற்று என்றாயே, இவனையா சரணம் பற்றுவது?" என்று கலங்கின அர்ஜுனனுக்கு, ஸர்வஜ்ஞனாயும், ஸர்வ சக்தியாயும் உள்ள பகவான் நான் என்று சக்த்யதிசயம் தோற்ற "**அஹம்**" என்றாயே, "**ஆலினிலையாய்**" ப்ரளயகாலத்தில் சிறிய இளம் ஆலந்தளிரில் ஒரு பாலகனாய் கண்வளர்ந்த, **அகடி தகடனா** சாமார்த்தியம் உள்ளவனே, உன்னால் முடியாத தொன்றுண்டோ?

நீ எங்களை உனக்கேற்ற சாம்யமுள்ளவர்களாக ஆக்கவேணும் என்று ப்ரார்த்திக்கிறார்கள். பகவத் **ஸாரூப்யத்தைச்** சொல்லுகிறது இப்பாசுரம்.

## 27 ஆம் பாசுரம் கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா

கீழ்ப்பாட்டில், இந்த நோன்பு சுருதி, ஸ்மிருதிகளில் சொல்லப்படாவிட்டாலும், **சிஷ்டாசாரம்,** முன்னோர்கள் செய்து வந்த வழியில் நாங்களும் செய்தோம் என்றும், தங்களுக்கு வேண்டிய சங்கு, பறை, விளக்கு, கொடி, விதானம் ஆகியவற்றுடன் பல்லாண்டு இசைப்பாரையும் அருளவேணும் என்று ப்ரார்த்தித்த ஆயர்சிறுமியரை நோக்கிக் கண்ணன், நோன்புக்கு வேண்டியவற்றைக் கேட்டீர்கள், வேண்டியபடியே தருவோம், இவ்வளவு தானே நான் உங்களுக்குச் செய்ய வேண்டியது? என்றான். அதற்கு இவர்கள் இப்பாசுரத்திலே, கண்ணா! நோன்பு நோற்ற பின் உன்னிடம் பெற வேண்டிய சம்மானங்கள் சில உண்டு என்கிறார்கள்.

**கூடாரை.......நன்றாக** நாங்கள் கேட்டதையெல்லாம் கொடுத்து, அதனால் பேரின்பம் அடைந்து உன்னை எங்கள் அன்பால் ஜெயித்தோம் என்று உன்னைத் தோற்கடிக்க வந்த எங்களிடம் பரம வாத்ஸல்யத்துடன், நீயே உன் தோல்வியை ஒப்புக்கொண்டு, உன்னுடன் கூடமாட்டோம் என்பவர்களை ஜெயிக்கும் சீர்மைதான் உனக்கு உண்டே ஒழிய, உன்னுடன் கூடுபவர்களை (பக்தர்களை) உன்னால் ஜெயிக்க முடியாது. (அன்பிற்குத் தோற்க விரும்பும் கோவிந்தா) அந்த சீர்மையாலும் வெற்றிக் கொண்ட நீ உன் கல்யாண குணங்களாலும், ஸௌலப்யத்தாலும் சீர்மை தோற்ற பேரொளியுடன் நிற்கின்றாயே. கூடாதாரை சௌரியத்தாலும், கூடுவாரைச் சௌந்தர்யத்தாலும் வெல்லும் சீர்மை பெற்றவனே, உன்னைப் பாடுவதே எங்கள் பலன், க்ருஷ்ண கைங்கர்யமே எங்கள் உத்தேசம், நாட்டாருக்காக பறை வியாஜம். உன்னை பாடியதால் நாங்கள் பெற்ற பலனை நீ நாட்டார் அறிந்து புகழும்படி செய்யவேண்டும். நாடு புகழ்வதற்காக இதைச் செய்யவில்லை நாங்கள். நாட்டார் எங்களைப் புகழ்ந்து, அதனால் நாடு உய்ந்து போவதைப் பார்க்கிறோம். இதையே பரிசாகவும் நினைக்கிறோம் என்றார்கள்.

**கூடகமே.......பாவாய்.** விரததினங்களில் (நோன்பு காலத்தில்) நாங்கள் **நெய்யுண்ணோம், பாலுண்ணோம்** என்று உணவு நியமங்களை மேற்கொண்டிருந்தோம், அல்லவா? அதற்கு சம்மானமாக நாங்கள் உன்னோடு சேர்ந்து உண்போம்; நீயும், நப்பின்னைப் பிராட்டியும் உண்பிக்க நெய்பெய்த பால் சோறு உண்போம் என்றார்கள். **மையிட்டெழுதோம், மலரிட்டு நாம் முடியோம்** என்று அலங்காரங்களைத் துறந்து நோன்பு நோற்றோம் அல்லவா? இனி நீயும், நப்பின்னையும் எங்களை ஆடை ஆபரணங்களால் அழகு செய்யவேண்டும் என்றார்கள். விடியும் முன்பே எழுந்து பனி தலையில் விழ தெருவெல்லாம் அலைந்து துயிலெழுப்பி வருந்தி வந்திருக்கிறோம். அதனால் உன்னுடன் கூடி உன் திருவருள் பெற்ற ஆயர்பாடியில்



பூர்விகல்யாணி ராகம் - ஆதி தாளம்

*கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா* உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்*
நாடு புகழும் பரிசினால் நன்றாக*
சூடகமே தோள்வளையே தோடே, செவிப்பூவே*
பாடகமே, யென்றனைய பல்கலனும் யாமணிவோம்*
ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு*
மூட* நெய் பெய்து முழங்கை வழிவார*
கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்* (27)

மிருந்தபடியா பால், நெய் முதலியவற்றைச் சேர்த்து அன்னம் செய்து எல்லோரும் சேர்ந்து உண்போம் என்றார்கள். உடனே கண்ணனும் அவர்கள் கேட்டதையெல்லாம் கொடுத்து, அவர்கள் அன்புக்குத் தோற்று நின்றான்.

உன் சீர்மையைக் கண்ணால் கண்டபின்னும் எங்கள் கையில் உள்ள ப்ரஸாதத்திலிருந்து நெய்யானது முழங்கை வழியே வழிந்து போகுமே தவிர வாய்க்குப் போதுவது எவ்வாறு?

ஆச்ரிதர்கள் பகவானை பிரிந்திருக்கும் போது எப்படி இருப்பார்கள்! சேர்ந்திருக்கும் போது எப்படி இருப்பார்கள்! என்பதைத் தெரிவிக்கிறார்கள். (அசோக வனத்தில் சீதா பிராட்டி பகவானைப் பிரிந்து இருக்கும் நிலையை நினைப்பது) பிரிந்திருக்கும் போது அசோகவனம் போலவும், சேர்ந்திருக்கும் போது ப்ருந்தாவனம் போலவும் இருக்கும்.

பல பக்தர்களை ஒன்று கூட்டித் தான் கண்டு களிக்கத்தான், கோயில்களில் பகவான் அநேக உத்ஸவங்களை நடத்திக்கொள்கிறான் (கூடியிருந்த குளிர்வதற்காக தான்). மோக்ஷத்தில் பகவானுக்கு அன்னம் (போக்யப் பொருள்) - முக்தன் என்கிறான் பகவான். எல்லா கைங்கர்யங்களும் முக்தாத்மாவினால் செய்யப்பெற்று, பகவானுக்கு அதுவே அன்னமாகவும், போக்யமாகவும் உள்ளது. அதுபோல பகவானுக்கு எல்லா கைங்கர்யங்களும் செய்து உகப்பிப்பதே முக்தனுக்கும் **போக்யமாகவும், அன்னமாகவும்** உள்ளது. இதைத்தான் இங்கு கூடியிருந்து குளிர்ந்து என்கிறார்கள்.

பக்தர்களின் ஞான, பக்தி, வைராக்கிய பூர்த்தியிலும் அவைகளுக்கு இருப்பிடமான அவர்கள் சரீரத்திலும் பகவானுக்கு அன்பு அதிகம். **"வெட்டிவேர் சூடுவோர் மண்ணைக் கழித்துச் சூடுகிறதில்லை"** அதுபோல் பகவான் ஜ்ஞானியை குணங்களுடைய சரீரத்தோடே ஆதரிக்கிறான். அதேபோல் ஜ்ஞானிக்கும் பகவான் என்ற தத்துவம் போக்யமாயிருந்தாலும், அவனுடைய குணங்களிலும், அந்த குணங்களையுடைய திருமேனியிலும் ஆதரவு அதிகம்.

**விசேஷார்த்தம்**:- ஸாயுஜ்யம்

**பெருமாள் தோளில் மாலையை வாங்கியிட்டார்** என்று ஆழ்வான், பட்டர் இருவரும் பணிப்பர். அநாதிகாலம் எல்லாராலும் பட்ட பரிபவம் மறக்கும்படி கொண்டாடுகை. ஒருவன் கொடுக்கும்படியென்!, சிலர் பெறும்படியென்! என்று நாட்டார் கொண்டாட வேணும். ( பகவத், வஸ்த்ரம், மாலா ப்ரசாதம் ஸ்வீகரித்தல்)

(**அனைய பல்கலனும்**) பட்டாபிஷேக வைபவத்தின் போது பெருமாளும் பிராட்டியும் கூட இருந்து சிறிய திருவடிக்குப் (**அனுமன்**) ஹாரத்தைப் பூட்டினாற்போல் எங்களுக்குப் பூட்டவேணும்.

**சூடகமே** (கரபூஷணம்) - அஞ்சலிபந்தமே, (கை கூப்பியிருத்தல்)

**தோல்வளையே** - திருவிலச்சினை (சங்கு, சக்ர தாபஸம்காரம்)

**தோடே** - திருமந்திரமே (மந்த்ர ஸம்ஸ்காரம்) திருமந்திர உபதேசமே (தெரிந்தும் தெரியாமலும் காதில் புகவிடுவது)

**செவிப்பூவே** - த்வயமே - பிறகு அதன் அர்த்த விசேஷங்களைப் பரக்கக் கேட்பது.

**பாடகமே**(பாதபூஷணம்)- சரமசுலோகமே - அதன் எல்லையாய் பகவான் உகந்து எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசங்களில் யாத்திரை செய்வது.

இவை, ஸ்வரூப ஜ்ஞானமாய் முமுக்ஷுவான அதிகாரிக்கு அவசியமான அபேக்ஷிதங்கள் பகவத் ஸம்பந்த த்யோதங்களாயிருப்பன. இதில், ஞான, பக்தி, வைராக்கியங்களை வளர்க்கக் கூடிய, திருமந்திரம், த்வயம், சரமசுலோகம் இம்மூன்று ரஹஸ்யத்தாலும் ஆத்ம ஸ்வருபத்தையும், பக்தி ஸ்வரூபத்தையும், வைராக்கிய ஸ்வரூபத்தையும் பரக்க அறியலாம். ஆகையால் உன்னோடு கூடும் இவ்வேளையில் இவையனைத்தையும் (**பல்கலனும் யாம் அணிவோம்**) என்கிறார்கள். அதன் பிறகு சேஷத்வ ஜ்ஞானமாகிற வஸ்த்ரம் உடுப்போம், பிறகு கைங்கர்யமானது மறையும்படி பாரதந்த்ரியம் தோற்றும்படி போக்தாவான உன்னோடு போக்யரான நாம் ஸம்பந்தித்திருந்து வ்யஸநம் தீரப்பெற்றோம். இதுவன்றோ நாம் உன்பக்கல் பெறும் சம்மானம் என்கிறார். இப்பாட்டில் பகவானுடன் கூடியிருந்து பகவதனுபவ ஆனந்தத்தை அனுபவிக்கிறாள் என்று பகவத் **ஸாயுஜ்யத்தைச்** சொல்லுகிறது.

**மாலே மணிவண்ணா** பாசுரத்தை **"நம்மாழ்வாரின் சூழ்விசும்பணிமுகிலுக்கு"** ஒப்பிடுவார்கள். முக்தாத்மாவிற்கு பகவான் செய்யும் ப்ரஹ்மாலங்காரத்தைச் சொல்வது இப்பாட்டில் முக்தபோகாவளிகளைச் சொல்லிற்று. அதாவது, **அர்ச்சிராதி வைபவம், பஞ்சபூஷணம்** சொல்லிற்று. **தாப புண்ட்ர ஸ்ததாநாம மந்த்ரோ யாகச்ச பஞ்சம அமீ பரம ஸம்ஸ்காரா**: சோறு-பகவான்; பால் சோறு-உத்தமமான பகவதனுபவம்; நெய் பெய்த பால் சோறு-ஆசார்ய சம்பந்தத்தால் ஏற்பட்ட பகவத்குணானுபவம்.

**ஐதிஹ்யம்**: பட்டர் காலக்ஷேபத்தில் ஒருநாள் நம்பி திருவழுதி வளநாடு தாஸர் என்பவர், நெய் படாதோ முழங்கைவழிவார என்னுமிடத்தில் என்று கேட்கிறார். அதற்கு க்ருஷ்ண ஸந்நிதியிலே த்ருப்தைகளாயிருக்கிறவர்களுக்கு சோறு வாயில் தொங்கினாலன்றோ! நெய்வாயில் தொங்குவதற்கு! என்றாராம். இங்கு புஜிக்கை ப்ரயோஜனமன்று பகவத் சம்பந்தமுள்ள திருவாய்ப்பாடியில் ஸமிர்த்தியெல்லாம் ப்ரியம் தானே.

அண்ணங்கராசாரியார் ஸ்வாமி:முழங்கைவழிவார என்னுமிடத்தில், பெருவிடாயர்கள், தண்ணீர்ப் பந்தலில் ஒருவர் கரத்தினால் தீர்த்தம் விட, இரு கையேந்திக் குடிக்குமிடத்து, அவருடைய பின்னே நிற்கிற விடாயர்கள், தங்கள் விடாயின் மிகுதியால் தாமதிக்க இயலாமல் முன்னே குடிப்பாருடைய முழங்கை வழியாகப் பெருகும் தண்ணீரைக் குடிப்பார்கள். இங்ஙனே பரம்பரையாக அனுபவிக்கப் பெறவேணுமென்பது சூசிதம்.



## 28 ஆம் பாசுரம் **கறவைகள்**

கோபிகைகள் கீழ் இரண்டுபாட்டிலே, நோன்புக்கு வேண்டிய பறை முதலியவற்றையும் அதன்பிறகு தங்களுக்கு வேண்டிய ஆடை, ஆபரணங்களையும் சொன்னார்கள். ஆனால் தங்கள் மனத்தில் உள்ளதை கீழே பல இடங்களிலே **"உன்னை அர்த்தித்து வந்தோம், யாம்வந்த காரியம் ஆராய்ந்து அருள்"** என்றும் சொல்லியுள்ளார்கள். ஆதனால் கிருஷ்ணனும், 'நீங்கள் கேட்டவைகளையும் கொடுக்கிறோம், இன்னும் உங்கள் மனத்தில் உள்ளவைகளையும் கொடுக்கிறோம். ஆனால் புண்ணியம் உள்ளவர்களுக்கன்றோ, இவைகள் சித்திக்கும். நீங்கள் என்ன புண்ணியம் செய்திருக்கிறீர்கள்? என்று கேட்கிறான்.

(இங்கே பகவான் கீதையில் சொல்லியிருப்பதையே ஆண்டாள் சுருக்கிச் சொல்லியிருக்கிறாள். ஒரு ஜீவன் ஆத்மச்ரேயஸ் பெற முதலில் நல்ல ஆசார்ய சம்பந்தம் வேணும், ஆத்மஞானம் வேணும். கர்மயோகத்தை ஒழுங்காகச் செய்து வந்தால் சித்தம் சுத்தியாகி இந்திரிய ஜெயம் பெறலாம். இந்திரிய ஜெயம் பெற்றால்தான் ஆத்ம சிந்தனம் பெற முடியும். ஆத்ம சிந்தனப் பயிற்சியால் ஆத்ம தரிசனம் பெறலாம். பின்பு இவன் பகவத் சிந்தனம் செய்து பகவத் பக்தி உண்டாகி, அது பரபக்தி, பரஜ்ஞான, பரமபக்தியாக வளர்ந்து, பிறகு பகவானைக் கிட்டலாம். இதுவே பகவானை அடையதற்கான வழி. இதற்கு முதல்படி ஆசார்ய சம்பந்தம் என்பதைத் தெரியப்படுத்துகிறார்). உடன் கோபிகைகள் எங்களிடம் ஒருவித புண்ணியமுமில்லை, உன் க்ருபையினாலேயே எங்கள் விருப்பத்தை நீ பூர்த்தி செய்தருள வேண்டும் என்று தங்கள் ஆகிஞ்சன்யத்தை வெளியிடுகிறார்கள். ஆகிஞ்சன்யம் என்றால் பகவானைப்பெற அவனைத்தவிர வேறொன்றும் உபாயமில்லை, அவனேதான் உபாயம் என்பதை அறிந்து, கோபிகைகள் எங்களுக்கு ஒருவித புண்ணியமும் இல்லை, எங்களுக்கு ஆசார்யனும் இல்லை. எங்களுக்கு ஆசார்யன் யார் தெரியுமா?.

**கறவைகள்..........குலத்து "அறிவில்லாதவன் பசுவிற்கு சமானம்"** என்று சொல்லப் பட்டிருக்கிறது. இவைகளைப்



காம்போஜி ராகம் - ஆதி தாளம்

*கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம்*
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து* உன்றன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்*
குறைவொன்று மில்லாத கோவிந்தா* உன்றன்னோடு
உறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது*
அறியாத பிள்ளைகளோம் அன்பினால்* உன்றன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே*
இறைவா நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய். (28)

பின்பற்றியவர்கள் நாங்கள், காட்டிலிருந்து வரவழி தெரியாத எங்களுக்கு அவை வழிகாட்டியாகவிருக்கும். இவைகளைப் பற்றின எங்களுக்கு ஞானம் சிறிதுமில்லை. காட்டில் போய்ப் பசுக்களை மேயவிட்டு, ஸ்நானம் செய்யாமலும், ஒரு தேவதைக்கு உணவை அர்ப்பணம் செய்யாமலும், நின்று கொண்டே எந்த அநுஷ்டானமும் இல்லாமல் உண்போம். இப்படி எந்த கர்மாநுஷ்டானமும் எங்களிடம் முறையாகக் கிடையாது என்கிறார்கள் கோபியர். நாங்கள் சரீர ஆத்மஜ்ஞானமோ, ஆத்ம-பரமாத்ம ஜ்ஞானமோ பெற யோக்யதை இல்லாத குலத்தில் பிறந்தவர்கள் என்கிறார்கள். உடனே கண்ணன், "**இப்படியிருக்கும் உங்களுக்கு நான் எப்படி நீங்கள் கேட்டவைகளைத் தரமுடியும்**"? என்றான்.

**உன்..........உடையோம்** கண்ணா! எங்களிடம் கர்ம, ஞானம் இல்லையென்று சொன்னது உண்மைதான். ஆனால், **க்ருஷ்ணன் தர்மம் ஸனாதனம்** என்கிறப்படி சித்த தர்மமான நீ எங்களுக்கு இருக்கும்போது எங்கள் அபிமதத்தை (ப்ராப்தி) நாங்கள் இழக்க வேண்டியதில்லையே!. (பகவான் க்ருஷ்ணன் பரமபதத்திலுள்ள இருப்பை விட்டு பசு மேய்க்கப் பிறந்தது குறைவாளர்களை நிறைவாளராக்கவே என்பது குறிப்பு).

**குறை............ஒழியாது** புண்ணியமே வடிவமான கண்ணா! உனக்கு சோறிட்டு வளர்த்தவர்களன்றோ நாங்கள், இப்படி எங்களைச் சொல்லலாமோ நீ! நீயே விரும்பி நாங்கள் இருக்கும் இடத்திற்கு எங்களோடே ஸஜாதீயனாய் வந்து அவதரிக்கும்படியன்றோ எங்களுடைய ஏற்றம் இருப்பது!. அப்படிப்பட்ட புண்ணியத்தைப் பற்றினவர்களன்றோ நாங்கள்!. மேலும் நாங்கள் நினைத்தபடி உன்னை ஆளலாம்படி கை புகுந்து உன்னை யாமுடையோம்!. நாங்களோ அறிவொன்றுமில்லாதவர்கள், நீயோ குறை ஒன்றுமில்லாத கோவிந்தன்! எங்களுக்கு குற்றஞ்சொன்னாயே அன்றி, உன்னுடைய குணபூர்த்திக்கு நாங்கள் குற்றம் சொன்னோமோ! என்றார்கள்.

"**இப்பள்ளத்துக்கு, குறை ஒன்றுமில்லாத அம்மேடு நிரப்பப் போராதோ**"! என்றார்கள். உடனே "**கண்ணன் குறையே உள்ள குறைவாளர்க்கு, நிறைவாளர் கொடுக்கக் கடவர்கள் என்று ஒன்று உண்டா**" என்ன? என்னுடைய பூர்த்தியும் உங்கள் அபூர்த்தியும் சொல்வதென்ன என்கிறான். " **அதுவா, கண்ணா! நீ எங்களுக்கு உறவான படியாலும் நீயே எங்களுக்கு அனைத்தையும் செய்யக் கூடியவன் என்பதாலும், உனக்கும் எங்களுக்கும் உண்டான சம்பந்தம் ஒழிக்க ஒழியாது என்பதாலும் சொன்னோம்**" என்றார்கள். **நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நாரணனே நீ என்னையன்றியிலை** என்ற ப்ரமாணத்தையிட்டுச் சொல்கிறோம். உனக்கும் எங்களுக்கும் நவவித சம்பந்த உண்டு என்கிறார்கள்.

**அறியாத.......பாவாய்** உடனே கண்ணன், அப்படியானால், நீங்கள் உங்கள் சம்பந்தத்தையிட்டு என்னை அழைக்கவில்லையே ஏன்?

(கோவிந்தா, கோபாலா என்னும் பெயர்கள் இவர்களுடன் ஸஜாதீயனாயிருந்து தன் ஸௌலப்யம் தோற்ற நின்ற நாமம், இதையிட்டு அழைக்காதது குற்றம் என்கிறான்).

உண்மையில் நாராயண நாமம்தான் மேம்பட்டது. (அவர்களின் உறவு முறையும் நீர்மையும் தோற்ற கோவிந்தபட்டாபிஷேகம் செய்து கொண்டபிறகு, கோவிந்தன் என்கிற பெயர் பெரும் பேராகிவிட்டது. இதில்தான் அவனுக்கு உகப்பு. (இதனாலன்றோ இன்றளவும் திருவேங்கடவன் தன் பேரை மறந்து கோவிந்தநாமத்தை பாகவதர்கள் மூலம் ஏற்று இன்புற்றிருக்கிறான்). நாம சங்கீர்த்தனங்களும் (கோவிந்தநாமசங்கீர்த்தனமாயிற்று). அதனால் நாராயணன் என்னும் மேன்மையான நாமம் இப்போது சிறுபேராயிற்று. இது குற்றமாய் அவன் மனத்தில் பட்டது.

உடனே இவர்கள், "கண்ணா! நீ அதைப் பொருட்படுத்தாதே, அறியாமல் பிழை செய்தோம், அன்பினால் கலங்கித் தவறு செய்தோம், பிள்ளைத்தனத்தினால் பிழை செய்தோம் மன்னித்துவிடு என்று அபராதக்ஷாமணம் செய்கிறார்கள். ***ஒரு படுக்கையில் படுத்து கை பட்டது கால் பட்டது என்பாருண்டோ!***" என்கிறார்கள்.

இதற்கு கண்ணன், அப்படியானால் சரி, நீங்கள் கேட்டவையெல்லாம் நான் உங்களுக்கே செய்தேனாகில், மற்றவர்களுக்கு பதில் சொல்ல வேண்டாமோ? என்ன,

**இறைவா! நீ தாராய் பறை**-"ஸர்வ ஸ்வதந்திரனான நீ எங்களுக்கு க்ருபை செய்தால் உன்னைக் கேட்பாருண்டோ, எங்களுடைய ஆகிஞ்சன்யத்தைப் பார்த்தாலும் உன்னுடைய ஸர்வ சக்தியைப் பார்த்தாலும், நம் இருவருக்கும் உள்ள உறவு முறையைப்பார்த்தாலும் நீ எங்களுக்கு க்ருபையைச் செய்யத்தான் வேணும்" என்கிறார்கள்.

**விசேஷார்த்தம்**:- ப்ராபகம்

கீழே 20 ஆம் பாட்டில், நப்பின்னையைப் பார்த்து **உக்கமும் தட்டொளியும் தந்து, உன் மணாளனை இப்போதே எம்மை நீராட்டு** என ப்ராத்தித்தார்கள். அது அவளுக்கு முடியாததால் பேசாமலிருந்துவிட்டாள். பகவான் ஒருவனுக்கே தன்னை பலப்ரதானம் செய்ய (மோக்ஷம் கொடுக்க) சக்தியுண்டு. ஆகையால் இறைவா நீ தாராய் பறை என்றார்கள்.

இதிலிருந்து பகவான் ஒருவனுக்கே மோக்ஷ பல ப்ரதத்வம் என்கிற சக்தி உண்டு. பிராட்டிக்கு புருஷகாரத்வமே உண்டு என்பது தெளிவாகிறது. பகவானைச்சரணம் பற்றும்போது சேதனனுக்கு (ஜீவாத்மாவிற்கு) சில அம்சங்கள் வேண்டும். அவைகளை இப்பாட்டில் சொல்லியிருக்கிறார்.

1. என்னிடம் கர்ம, ஞான, பக்தி ; குருகுலவாஸம் முதலான ஸாதனங்கள் இல்லை,
2. எனக்கு ஞானம் பெற யோக்யதையில்லை என்பதை அறிவிக்கவேண்டும், (வித்யாகர்வம், ஜாதிகர்வம் இல்லை யென்று தெரிவித்தல்),
3. பகவானுடைய குணபூர்த்தியை அனுஸந்திக்க வேண்டும்,
4. பகவானுக்கும் நமக்குமுள்ள சம்பந்தத்தை உணரவேண்டும்,
5. நாம் செய்த பாபங்களுக்கு அபராதக்ஷாமணம் செய்தல் வேண்டும்,
6. நீயே மூலசுக்ருதம், நீயே க்ருபை செய்யவேணும் என்று பிராத்திக்கவேணும்.

இதன்மூலம் சரணாகதனுக்கு வேண்டிய **உபாய வரணத்தை** (ப்ராபகம்) இப்பாசுரத்தில் அருளுகிறார். மார்கழி முதல் பாசுரத்தில் ப்ராப்ய, ப்ராபகத்தை சூசகமாய்ச் சொன்னதை இப்பாசுரத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்கிறார்.



## 29ஆம் பாசுரம் சிற்றஞ் சிறுகாலே

ஸ்ரீய : பதியான ஸர்வேச்வரனுடைய முக மலர்ச்சிக்காகவே செய்யப்படும் கைங்கர்யமே, ஒரு சேதனனுக்கு புருஷார்த்தம், சிறந்தபலன். இதையே இப்பாட்டில் ஆண்டாள் அருளுகிறார். கீழ்ப்பாட்டில் உபாயத்தைச் சொல்லி இப்பாட்டில் உபேயத்தை சொல்லுகிறார்கள். இதுவரை "**பறை, பறை**" என்று சொல்லிவந்தது "**கண்ணன் திருவடிகளில் நித்ய கைங்கர்யம் பெறுவது தான்**" என்று தன் அந்தரங்க விருப்பத்தைத் தெரிவிக்கிறார்கள்.

(உன் பொற்றாமரை அடியே)- உன்அடி- ப்ராப்தமான ஸ்வாமியின் திருவடி; பொன்னடி - போக்யமான நன்மை பயக்கும் திருவடி; தாமரை அடி- பாவனமான திருவடி, (நம் தோஷத்தைப் போக்கும் திருவடி). ஸ்திரீகளுக்கு பொன்னிலும், பூவிலும் ஆசை அதிகம். இங்கே கோபிகைகள் இவை இரண்டும் பகவான் திருவடிகளே எங்களுக்கு என்கிறார்கள்.

**சிற்றஞ்.......கேளாய்** பகவானுக்குப் பல்லாண்டு பாடவேண்டும், இதுவே பரம புருஷார்த்தம் (சிறந்த தொண்டு) என்று இதுவரை சொல்லி வந்த இந்த கோபிகைகள் கண்ணனிடம், நாங்கள் அதிகாலையில் எழுந்து நீ இருக்குமிடம், வந்து வணங்கி, உன் பொற்றாமரை அடிகளுக்குப் பல்லாண்டு பாடி, உன்னைப் போற்றும் பொருள் என்ன! என்பதைக் காது



மலயமாருதம் ராகம் - ஆதி தாளம்

*சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து* உன்
பொற்ரு மரையடியே போற்றும் பொருள்கேளாய்*
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்திற் பிறந்து* நீ
குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது*
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும்* உன்றன்னோ
டுற்றோமே யாவோம் உனக்கேநா மாட்செய்வோம்*
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய். (29)

கொடுத்துக் கோவாய்! என்கிறார்களே, என்னில் க்ருஷ்ணனிடம் அந்தரங்க கைங்கர்யத்தை யாசிக்கிறார்கள்.

**பெற்றம்......பிறந்து** நீ பசுக்களை மேயவிட்டு அவைகள் வயிறு நிரம்பின பிறகு, தாங்கள் உண்ணக்கூடிய ஆயர்குலத்தில் பிறந்த நீ! எங்களுடைய அன்னமான கைங்கர்யத்தைக் கொடுத்தால் அல்லவோ! எங்கள் வயிறு நிரம்பும்.

**குற்றேவல்........போகாது** ஆகையால் நாங்கள் பரதனைப்போல் பிரிந்து கைங்கர்யம் செய்யாமல், லக்ஷ்மணனைப்போல் உன்னைப் பிரியாமல், உனக்கு நீ உகக்கும்படி அந்தரங்க கைங்கர்யங்களைச் செய்ய எங்களுக்கு அருளவேண்டும்.

நம்மாழ்வார், **திரு ஆணை நின் ஆணை கண்டாய்** என்று அந்த திவ்ய தம்பதிகள் மேல் ஆணையிட்டுச் சொன்னாற்போலே, இங்கு ஆண்டாள் **கொள்ளாமல் போகாது** என்று தடுத்தும், வளைத்தும் சொல்கிறாள்.

**இற்றை...........கோவிந்தா** எங்களிடம் குற்றேவல் கொள்ளாமலிருந்தால், நீ எடுத்த இந்த பிறவி (அவதாரம்) பயனற்றதாகுமே என்கிறார்கள் கோபிகைகள். உடனே கண்ணன், "**அப்படியே ஆகட்டும், குற்றேவல் கொள்கிறேன், நீங்கள் மார்கழி நோன்பு நோற்றுப் பறை வேண்டுமென்றீர்களே, இந்தாருங்கள்**" என்று அவர்கள் கேட்ட பறையைக் கொடுத்தான். உடனே கோபிகைகள், எங்களிடம் நீ கைங்கர்யம் கொள்ள வேண்டுமே தவிர, உன்னிடம் உன்னைத் தவிர வேறு ஒன்றையும் நாங்கள் கேட்கமாட்டோம். எங்கள் தேவையை நீ மறந்தாலும், உன் பிறப்பை மறக்காதே. கோவிந்தா! உன்னிடம் அப்போதே சொன்னோமே, **யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்** என்று கூற, இதுதான் நீ எங்கள் உள்ளங்களை ஆராய்ந்த அழகோ! நன்று. ராமபிரானின் அழகிலும், குணங்களிலும் லயித்து வேறொன்றும் விரும்பாத அனுமான் போலே, மற்றைய எங்கள் விருப்பங்களையெல்லாம் ஒழித்து, உன்னிடம் (கண்ணனான) உன்னுடைய கைங்கர்யத்தையே விரும்பும் பேற்றை நீயே எங்களுக்குக் கொடுக்கவேண்டும் என்று சொன்னார்கள்.

**எற்றைக்கும்....மாவாய்** மற்றைய அவதாரங்களைப் போல் அல்லாமல் நாங்கள் உறவு கொள்ளும்படி வந்து எங்கள் குடியில் பிறந்தவனே. எங்களுக்கு அனைத்து உறவுமாய் இருப்பவனே! இப்பிறவியில் மட்டுமல்ல, எத்தனை பிறவி எங்கெங்கு, எவ்வடிவில் எடுத்தாலும், நாங்களும் உன்னுடைய கைங்கர்ய பரர்களாகவே (பிறக்க) விளங்க வேண்டும்.

ஜ்ஞானிகளுக்கு அன்னம் பகவத்கைங்கர்யம் அதைப்பெறாதபோது வயிறு நிரம்புவதில்லை. இந்த பகவத் கைங்கர்யம் பணத்தினால்தான் செய்ய வேண்டுமென்பதில்லை. சரீரத்தினாலோ, வாக்கினாலோ, மானசீகமாகவோ (மனோ, வாக்,காயங்களால்) செய்யலாம். எப்படிச்செய்தாலும் பகவானிடம் உண்மையான அன்பு (பக்தி) இருக்க

வேண்டும். அதில் போக்யத்வமும், பாவனத்வமும் இருக்க வேண்டும்.

**விசேஷார்த்தம்**:- ப்ராப்யம்

**உபேய ஸ்வரூபத்தை** விவரிக்கிறார் இப்பாட்டில். சிற்றஞ்சிறு காலை - ஸத்வகுணம் விளங்குகின்ற காலம். "**கைங்கர்யத்தில் களையாகத் தோன்றும் ஸ்வப்ரயோஜன புத்தியைப் போக்கியருள வேணும்**" என்பது மற்றை நம் காமங்கள் மாற்று என்பதன் கருத்து.

உனக்கே நீ உகந்த கைங்கர்யங்களையே நாங்கள் செய்யவேணும். **மற்றை நங்காமங்கள் மாற்று** - நாங்கள் எங்களுக்கு என்றிருக்கும் படியையும், நீயும் இவர்களுக்கு என்றிருக்கும் படியையும் இவை இரண்டும் விரோதியாகையாலே அதை மாற்றி (தவிர்த்து) தரவேணும் என்கிறார்கள். நாங்கள் கைங்கர்யம் செய்யும்போது உன்னுடைய அழகானது எங்களை மயக்கி கைங்கர்யத்திலே ஈடுபடமுடியாமல் பண்ணும், இதை தவிர்க்க வேண்டும். கைங்கர்யத்தைச் செய்யும்போது செய்தவன், கொண்டவன் இருவருக்கும் ஆனந்தம் ஏற்படும், இது கூடாது போக்தாவான, நீ எங்களிடம் கைங்கர்யம் கொண்டு உகப்பதைக் கண்டு, நாங்கள் உகக்க வேண்டுமே தவிர அதில் எங்களுக்கு ஆனந்தம் கூடாது என்கிறார். இப்பாசுரத்தில் ப்ராப்ய ப்ரார்த்தனம் செய்கிறார்கள்.

**உபதேசம்**: பகவானை உபாயமாகப் பற்றினவர்கள் விடவேண்டிய விஷயங்கள் இரண்டு:

1. ப்ரயோஜனாந்தரங்களை விரும்புவது - பகவானைக் கிட்டும் போது அவனிடத்தில் காம்ய பலனை விரும்பிக் கேட்பது. (பகவான் இடத்தில் அவன் கைங்கர்யத்தைத் தவிர வேறு பலனைக் கேட்கக் கூடாது என்றறியவேணும்).

2. பகவத் கைங்கர்யம் தமக்கு ஆனந்தஹேது என்றிருப்பது- பகவானுடைய கைங்கர்யத்தைத் தன் சந்தோஷத்திற்காகச் செய்வது. (அவன் உகப்பிற்காகச் செய்யப்படுகிறதேயொழியத் தங்களுடைய ஆனந்தத்துக்காக அல்ல என்றறியவேணும்). இவை இரண்டும் விஷ போஜனம் போலவும், எச்சிற் சோறு போலவும் வெறுக்கத்தக்க அசுத்தியை உடையன என்கிறார்.

**உனக்கே** என்று ஏகாரம் தோற்றும் இவ்வடி, இப்பாசுரத்திற்கு உயிரான இடம். திருமந்திரத்திலே **நமஸ்** ஸப்தத்தாலே கழிக்கப்படும் ஸ்வப்ரயோஜன பரதையை உனக்கே என்ற ஏகாரத்திலே கழிக்கிறார்கள். இப்பாட்டு திருமந்திரத்திற்கு விவரணமாய் உள்ளது.

இப்படி சேதனனைத் திருத்திப்பணி கொள்ளக்கூடிய ஸர்வார்த்தங்களையும் தன்னிடையே கொண்டபடியால் நம் ஆசார்யர்கள் இப்பாட்டை மிகவும் ஆதரிப்பார்கள். விடிவோரை எழுந்திருந்து, 30 பாட்டையும் அநுஸந்தித்திருத்தல், அப்படி முடியவில்லையெனில்,

**சிற்றஞ்சிறுகாலே** என்கிற பாட்டை அநுஸந்தித்திருத்தல், அதுவும் முடியவில்லையெனில், (நாம் இருந்த இருப்பை நினைப்பது) பட்டர் அருளிச் செய்ததை நினைப்பது. இப்பாட்டையும், இதற்கடுத்தபாட்டையும் தினந்தோறும் ஒரு தடவையாவது ஓதாதார் வைஷ்ணவராகார் என்பர் நம் பூர்வர்.



## 30ஆம் பாசுரம் வங்கக் கடல் கடைந்த

இப்பிரபந்தத்தை ஓதுகிறவர்கள் திருமாலின் திருவருளுக்கு எங்கும் எப்போதும் இலக்காகி இன்புறுவர். பிராட்டியாலும் எம்பெருமானாலும் அருள் செய்யப்பெற்று. மார்கழி நோன்பை அநுஷ்டித்த, ஆயர் சிறுமியரைப் போலவும், அதனை அநுகரித்த (கோபிகைகளைப் போல பாவித்து நோன்பை அநுஷ்டித்த ஆண்டாளும் அவள் தோழிகளும்) எங்களைப் போலவும் பலனைப்பெற்று இன்புறுவார்கள்.

*"கன்றிழந்த பசு, தோல்கன்றையிட, அதுக்கும் இரங்கிப்பால் சுரக்குமாப் போலே,*
*அன்பு நிறைந்தார் சொன்ன இப்பாசுரம் கொண்டு புகுந்தால், நமக்கும் பலஸித்தியுண்டாம்"*

என்று பட்டர் அருளிச் செய்வர்.

**வங்க........கேசவனை** புருஷகார பூதையான பிராட்டியின் சம்பந்தத்தாலேயே பலஸித்தி உண்டாகும். ஆகையால், அவளைப் பெற வங்கக் கடல் கடைந்த மாதவனின் ஸாமர்த்தியத்தை முதலில் கொண்டாடுகிறார்கள். "**விண்ணவர் அமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே**" என்று ஆழ்வாரும் அருளிச் செய்தாரன்றோ! இங்கே இவர்கள் ஆசிரயித்தார் குற்றத்தைப் பொறுப்பிக்கும் பிராட்டியின் சம்பந்தத்தை அநுஸந்திக்கிறார்கள்.

(ஸ்ரீய: பதித்வ நாமம்- மாதவன்) ஆச்ரயிக்கும் போதும், போக வேளையின் போதும் ஸ்ரீமந்நாராயணனே சேதனனுக்கு உத்தேச்யன் என்று உணர்த்துகிறார். திவ்யதம்பதிகளின் சேர்த்தியில் (மிதுனத்தில்) தான் கைங்கர்யமும், சரணாகதியும் பண்ணவேணும். (கேசவன்) - தன்னிடத்தில் அன்புடையாரை அடைவதற்கு விரோதியாய் உள்ளவற்றை அழிக்கும் அவன். "**அசோதை முன் சொன்ன திருப்பாத கேசத்தை**" என்று பெரியாழ்வார் சொன்னாற்போல் இவரும் இதுவரை திருவடியைப் பாடி வந்து (பரமனடி பாடி) இப்போது கேசவன் என்று திருமுடியைப் பாடி தலைக்கட்டுகிறார்.

**வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை** என்கையால் ***ஸ்ரீமந்நாரயண சரணௌ*** என்னும் பகுதியின் அர்த்தம் அறிவிக்கப்படுகிறது; மாதவனை - ஸ்ரீமத் சப்தார்த்தம்; வங்கக்கடல் கடைந்த- என்கையாலே, "**கடல் கடைந்த செயல் தோற்றும்**



சுருட்டி ராகம் - ஆதி தாளம்

*வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை*
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி*
அங்கப் பறைகொண்ட வாற்றை* அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன*
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே*
இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்*
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவாய். (30)

**ஸௌலப்யம் ஸௌசீலயம், வாத்ஸல்யம், ஸ்வாமித்வ குணங்களோடு கூடியவன்**" என்னும் **நாராயண** சப்தார்த்தம்; கேசவனை- சரண சப்தார்த்தமான **விக்ரஹயோகம்** உணர்த்தப்படுகிறது.

இனி, ***சரணம் ப்ரபத்யே-*** என்னும் பதத்தில் உணர்த்தப்பட்ட அதிகாரிகளின் பெருமையைச் சொல்லுகிறது; **திங்கள் திருமுகத்து சேயிழையார் சென்று இறைஞ்சி**- 16 கலைகள் உடைய ப்ரஹம வித்தையை பரிபூர்ணமாக அறிந்து, ப்ரம்ம ஜ்ஞானம் அடைந்து மிகவும் அழகும், குஷியும், குளிர்ச்சியும் நிறைந்த முகத்தை உடையவர்களாய், "**நப்பின்னைக் கண்ணனால்**" ப்ரஹ்மாலங்காரங்கள் செய்யப் பெற்று பரபக்தி, பரஜ்ஞான, பரமபக்தியுள்ள சேயிழையர்களான கோபியர் கோகுலத்தில் கண்ணனைச் சென்று (இறைஞ்சி) ப்ரார்த்தித்து பெற்ற - என்று சரணம் ப்ரபத்யே என்பதன் அர்த்தம் சொல்லிற்று. ஆக இதன் மூலம் த்வயத்தில் உள்ள பூர்வகண்டார்த்தம் உரைக்கப்பட்டதாயிற்று.

**அங்கப்பறை கொண்ட ஆற்றை** - என்கையில், அவ்விடத்திலே பரமபுருஷார்த்தமான ***ஸ்ரீமதே நாராயணாய நம***: என்ற அர்த்தத்தின்படி கண்ணனிடத்தில் கைங்கர்யத்தைக் கேட்க, அவனும் கொடுக்க, இவர்களும் இவ்விதம் பறை பெற்ற ப்ரகாரத்தைச் சொல்லிற்று. (தங்களுடைய வெறுமையையும்-அவன் பூர்த்தியையும், பந்தத்தையும் முன்னிட்டு, அபராதங்களுக்கு க்ஷமைகொண்டு, ருசியையும் த்வரையையும் காட்டி இப்படி புருஷார்த்தத்தைப் பெற்ற வழியைச் சொல்கிறார்கள்.

**அணிபுதுவை**-ஸம்ஸாரத்திற்கு ஆபரணமாயுள்ள ஸ்ரீவில்லிபுத்தூர் திவ்ய தேசம் **அ**கார வாச்யரான வடபெருங்கோயிலுடையானும், **உ**கார வாச்யையான ஸ்ரீ ஆண்டாளும் **ம**கார வாச்யரான பெரியாழ்வாரும் ஒன்று சேர்ந்திருக்கையாலே, **ப்ரணவம்** போலே (முப்புரியூட்டிய) பெருமை பெற்றிருக்கும் ஊர்.

**பைங்கமலத் தண்தெரியல்** ஆச்ரிதரைக் குளிரச் செய்யும் தாமரை மாலையை அணிந்தவள். மேலும் தாபத்தை அதிகரிக்கும் துளசி மாலை போலன்றி, குளிர்ச்சியைத்தரும் தாமரை மாலையை அணிந்திருப்பவள். (பிரிந்தவன் மாலை போலன்றி சேர்ப்பிப்பார் மாலை).

**பட்டர்பிரான் கோதை சொன்ன** - வேதப்பயன் கொள்ளவல்லராய், வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை, வேதத்தின் உச்சிமிக்க நாதனான நாராயண பரத்வத்தை, விரித்தவரான பட்டர்பிரான். அவர் திருமகள் கோதையாகையாலே, சொன்ன அர்த்தத்தில் ***மிகைப்படக் கூறுதல்*** முதலான குற்றங்கள் சிறிதும் இல்லையென்றபடி. "**ஆற்றப்படைத்தான் மகன்**" என்று சொல்லுகை க்ருஷ்ணனுக்கு எப்படி ஏற்றமோ! அதுபோல "**பட்டர்பிரான் கோதை**" என்கை பூதேவியான இவளுக்கு ஏற்றத்தைத் தருகிறது, எப்படி? ***ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன்*** என்று பெரியாழ்வாரால் கொண்டாடப்படுபவளாயிருக்கை, திருமாலுக்கு பூமாலையும், பாமாலையும் தந்த கோதை; ஆயர்

சிறுமியர்களின் அனுபவத்தை அடியொற்றி, தான் அநுகக்ரித்து, உரைத்ததை **ச்ருதி சத சிரஸ் ஸித்தமான** அர்த்தத்தை பெண்ணுக்கும், பேதைக்கும் அறியலாம்படி சொன்ன கோதை; ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஒருத்தி மகனாய் வளர்ந்த கண்ணனைக் கவி பாடிய இப்படிப்பட்ட கோதை என்பதாலே சொல்லிற்று. (பட்டர்பிரான் கோதையைத் தவிர வேறொருவரால் இவனைக் கவிபாட வொண்ணாது அன்றோ!)

**சங்கத்தமிழ்மாலை** - பகவதனுபவத்தை ஒருவராகப் போய் அனுபவித்தால் அவனுடைய கல்யாண குணக்கடலில் மூழ்கிப் போக வேண்டியதுதான். (திரளாகச் சென்று மூழ்கினாலும் கரை காண இயலாதவன்). ஆகவே, திரள்திரளாகச் சென்று, தான் பெற்ற பரப்ரஹ்மத்தின் பேரானந்தத்தை உலகில் உள்ள அனைத்து ஜீவாத்மாக்களும் அறிந்து, அடைந்து, ஆனந்திக்கவேண்டி, ஆண்டாள் ஒரு முன் மாதிரியாய் இருந்து அநுகரித்துக் காட்டினாள்.

அதனால் பஞ்சலக்ஷம்குடியிலுள்ள பெண்கள் அனைவரும் அனுபவித்தாராகையாலே; ஆண்டாளுடன் சேர்ந்து ஸ்ரீவில்லிபுத்தூர் சிறுமிகளாலே அநுகரிக்கப் பெற்றதாகையாலே, குழாங்களாய் உடன் கூடி நின்று பாடி அனுபவிக்க வேண்டும் என்கிறார். சங்கத்தமிழ் என்பதாலே கூட்டம் கூட்டமாய் இருந்து அநுபவிக்கும் தமிழ்; புலவர் கூட்டத்தால் போற்றப்பெறும் தமிழ் என்கிறார். "**ஸங்கம்**" என்னும் வடசொல் "**திரள்**" என்னும் பொருளுடையது. **தமிழ்மாலை** பூமி பிராட்டி - ஆண்டாளானாற் போலவே, வேதமானது - வேதஸாரப் பாமாலையான திருப்பாவையாயிற்று **மாலை** போக்யமான, தலைமேல் வைத்துக் கொண்டாடும் படியானதாய் இருக்கை. (சிர பூஷணம் போல்)

**முப்பதும் தப்பாமே** - விலையில்லாத ரத்தினங்களாலே செய்த மாலையானபடியாலே ஒரு ரத்தினம் குறைந்தாலும் நெடும் பாடாயிருக்கும்- அப்படியே ஒரு பாசுரம் குறையிலும் பேரிழப்பாயிருக்கும். இப்பாசுரங்களில் ஒன்று கூட குறையாமல் முப்பது பாட்டும் சொல்லவேண்டும் என்று ஆணையிட்டுச் சொல்கிறார். **இங்கு இப்பரிசுரைப்பார்** பிற்பட்டார், (எங்களைப்போல்) இப்பாசுரங்களை அநுஸந்திப்பவர்கள்; **செங்கண் திருமுகத்துச் செல்வத்திருமால்**- இரண்டுக்கு, நான்கு கைகளை உடைய ஸ்ரீமந் நாராயணனான, உபயவிபூதிக்கும் நாயகனான ஸ்ரீய:பதியால், (இப்பாட்டிலே ஆரம்பத்திலும் முடிவிலும் பிராட்டி சம்பந்தஞ் சொல்லிற்று). எங்கும் திருவின் அருள் பெற்று இன்புறுவர் என்று சொல்லி திருப்பாவையைத் தலைக்கட்டுகிறார்.

**விசேஷார்த்தம்**:- அடையும் பலன்

நீங்கள் பெற்றப்பலனை பிற்பட்டார் இழக்க வேண்டியதுதானோ! என்று கண்ணன் கேட்க? அநுஷ்டித்தார்க்கும், அநுகரித்தார்க்கும் உள்ள பலன் இத்தைச் சொன்ன மாத்திரத்திலே சித்திக்கும் - **சேயிழையார் சென்றிறைஞ்சி** என்றதாலே **அநுஷ்டித்தார்** என்றது; **கோதை**

**சொன்ன** என்றதாலே **அநுகரித்தார்** என்றது; **இப்பரிசுரைப்பார்** என்றதால் **இத்தை பின்பற்றும் நம்மைச் சொன்னதாயிற்று.**

## ஆண்டாள் திருவடிகளே சரணம்!!!

ஆண்டாளின் இந்த சங்கத்தமிழ் மாலையை (திருப்பாவையை) ஆசார்யன் மூலமாக முறையாகப் படித்தால் தான் அதில் உள்ள சிறந்த நற்பொருள்களை அறியமுடியும். இவருடைய திவ்ய ஸூக்திகள் அதிகம்பீரமான அர்த்த ரத்தினங்களை அமையப்பெற்றன ஆதலால் அவற்றில் மேலெழ நோக்குவார் பயன் பெறார்கள். ஆழ்ந்து நோக்குவார்க்கே அறிய பெரிய பொருள்கள் கிடைக்கும் என்பதை ஸ்வாமி தேசிகன், **"தீர்த்தை:யதாவத் அவகாஹ்ய ஸரஸ்வதீம் தே"** கோதாஸ்துதி ஸ்லோகம்-4ல் அருளுகிறார். இந்த திருப்பாவையை ஆர்வத்துடனும், ஆனந்தத்துடனும் முறையாகப் படிப்பவர்கள், கேட்பவர்கள். அனைவரும் ராஜயோகத்தையும், வாழ்வியலையும், சமுதாய உணர்வினையும், அனைத்து ஜீவாத்மாக்களிடமும் பேரன்பை வெளிப்படுத்தவும், நாட்டுப்பற்றையும், ஜீவாத்ம - பரமாத்ம சம்பந்தத்தையும் உணர்ந்து அறிந்து கொள்ளமுடியும். இத்திருப்பாவை 30 பாசுரங்களையும் தினமும் சொல்லுபவர்கள், திருமகள், திருமால் இவர்களின் இன்னருளால் எங்கும் லக்ஷ்மிகடாக்ஷம் நிரம்பப் பெறுவார்கள் என்கிறார் நம் சூடிக்கொடுத்த நாச்சியாரான ஸ்ரீஆண்டாள்.

இந்த ***ஸ்ரீஉபதேச ரத்தின கோசத்தை*** கையில் கொண்டிருக்குமவர்களுக்கும், நெஞ்சில் கொண்டிருப்பவர்களுக்கும் மெய்யுரைக்கேன் பையரவில் மாயன் பரமபதம் உங்களுக்காம் கையிலங்கு நெல்லிக்கனி!

இத்துடன் திருப்பாவையின் மேலெழுந்த அர்த்தங்களும், ஸ்வாபதேச அர்த்தங்களும் யதா சக்தி விவரிக்கப்பட்டுள்ளது. மேலே, ஆண்டாள் திருக்கல்யாணமும், பிறப்பு குறிப்பும், அவர் ஊரின் பெருமையையும் விவரிக்கப்படுகின்றன.



வாழித்திருநாமம்

திருவாடிப்பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்கு பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்தொரு மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கற்கே கண்ணியுகந்தளித்தாள் வாழியே
மருவாறும் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர் பதங்கள் வாழியே

# ஆண்டாள் வாழித் திருநாமம்

*திருவாடிப்பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே*
*திருப்பாவைமுப்பதும் செப்பினாள் வாழியே*
*பெரியாழ்வார்பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே*
*பெரும்பூதூர்மாமுனிக்குப் பின்னானாள் வாழியே*
*ஒருநூற்றுநாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே*
*உயரரங்கர்க்கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே*
*மருவாருந்திருமல்லி வளநாடி வாழியே*
*வண்புதுவைநகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.*

★ ★ ★

*ஸ்வோச்சிஷ்ட மாலிகாபந்த கந்த பந்துர ஜிஷ்ணவே*
*விஷ்ணுசித்த தநூஜாயை கோதாயை நித்ய மங்களம்.*
*மாத்ருசா கிஞ்சன த்ராண பத்தகங்கணபாணயே*
*விஷ்ணுசித்த தநூஜாயை கோதாயை நித்ய மங்களம்.*

சூடிக்கொடுத்த நாச்சியார் திருவடிகளே சரணம்!!

★ ★ ★

இயல்-8

# ஸ்ரீ ஆண்டாள் ரங்க மன்னார் திருக்கல்யாண வைபவம்

சூடிக்கொடுத்த நாச்சியாரின் அவதார ரஹஸ்யம் இரண்டாவது இயலில் கொடுக்கப்பட்டுள்ளது. இனி ஆண்டாளின் திருக்கல்யாண வைபவமும், பிறப்பின் குறிப்பும், ஸ்ரீவில்லிபுத்தூர் ஊரின் பெருமையும் இவ்வியலில் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீஆண்டாள் நோன்பு நோற்றதின் (க்ருஷ்ணானுபவம்) மூலமாக திருப்பாவை வெளிவந்தாற்போல், ஸ்ரீஆண்டாள் க்ருஷ்ணனிடம் காதல் கொண்டதனால் வந்தது, இந்த நாச்சியார் திருமொழி என்னும் காதல் காவியம். இந்த இரண்டு ப்ரபந்தங்களின் வழியாக அவளுடைய பகவத் பக்தியின் ப்ரவாகத்தை நாம் இன்றும் கேட்டு ஆனந்திக்க முடிகிறது.

பெரியாழ்வாருடன் ஆண்டாளும் வடபெருங்கோயிலுடையானுக்கு அன்புடன் புஷ்ப கைங்கர்யம் செய்து வந்த காலத்தில், ஆண்டாளுக்குத் திருமணப்பருவம் வந்தது. அவள் கண்ணனிடம் கொண்டிருந்த அன்பு காதலாய் மாறியிருந்தது. அந்நேரத்தில் பெரியாழ்வார் தம் திருமகளுக்கு ஏற்ற வரனைத் தேட வேண்டும் என்று எண்ணி, முதலில் ஆண்டாளையே கேட்போம் என்று தீர்மானித்து அவளை அருகே அழைத்து, "**கோதை நீ யாரை மணந்து கொள்வதாக எண்ணியிருக்கிறாய்?**" என்று கேட்கிறார். அதற்கு அவள் "**நான் பெருமாளுக்கே உரியவள்**" என்கிறாள். அப்படியானால் எந்தப் பெருமாளை (108 திவ்ய தேசத்தில்) மணக்க உத்தேசித்திருக்கிறாய்? என்று கேட்கிறார் ஆழ்வார். அதற்கு ஆண்டாள், "**அனைத்து எம்பெருமான்களின் பெருமைகளையும் உங்கள் வாயால் கேட்டேன். ஆனால் ஏனோ! என் மனம் அரங்கநாதனிடமே அதிகமாக ஈடுபடுகிறது**" என்றாள். இதைக் கேட்ட ஆழ்வாரும் அது முதல் பெருமாள் நம் குழந்தை கோதையை மணப்பரோ? இது எப்படி நிகழும்? என்று ஆழ்ந்து சிந்திக்கலானார்.

ஆண்டாளும் அரங்கனையே தன் மணாளனாக எண்ணி அவனுடன் மானசிகமாகக் காதல் புரிந்து வரலானாள். அரங்கனும் அவள் கனவில் அடிக்கடி தோன்றி அவள் காதலை வளர்த்து வரலானான். இப்படி இருக்கையில் ஒருநாள், ஆண்டாள் இன்பக்கனவு ஒன்றைக் கண்டாள். அது:

(பெரியாழ்வாரின் மாளிகை முன் மலர்ப் பந்தலிட்டு, மகர தோரணம் கட்டி, வாழைகளும் கமுகுகளும் நாட்டப்பட்டிருந்தன. ஆழ்வாரும் மாணிக்கக் கால் நாட்டி மணப் பந்தல் அமைத்து மணஞ் செய்வதற்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் சேகரித்திருந்தார். மங்கள வாத்தியங்கள் முழங்கின. தோழிகள் கோதையை ஆபரணங்களாலும், பூமாலைகளாலும், பூவைப்போல் மென்மை வாய்ந்த பொற்பட்டாடையாலும் அலங்காரம் செய்து மணவறைக்கு அழைத்து வந்தார்கள்.

உடனே வானம் அளாவிய மணப் பந்தலுக்குள் நீல ஜோதி ஒன்று உதயம் செய்தத்போல், இறைவன் மணவாளக் கோலத்தோடு தோன்றினான். விண்ணும் மண்ணும் ஒருங்கே அந்த அழகிய மணவாளனைத் தொழுது புகழ்ந்தன. ஆழ்வார் பரமானந்தம் அடைந்தார்.

மணப்பெண்ணாகிய ஆண்டாள் மின்னல் ராணி போல தெய்விக அழகு பெற்றுத் திகழ்ந்தாள். அவள் உடுத்த நீல நிறமுள்ள சித்திரப் பட்டாடை நீல வானத்திலிருந்து கிழித்துக் கொண்டது போலத் தோன்றியது. பருத்த செங்கழுநீர் மாலையும், நெற்றியில் கஸ்தூரி திலகமும், கயல்போல் மிளிர்ந்து காதளவோடிய கண்களுமாய் அன்னம் போல் அடியிட்டு, வளையும் சிலம்பும் ஒலி செய்ய நடந்து வந்து காதலியான ஆண்டாள் காதலனான கண்ணன் அருகே வீற்றிருந்தாள். மணச் சடங்குகள் இனிது நிறைவேறின. மணவாளன் ஆண்டாளின் மலர்க்கரம் பிடித்ததன்றி, அவள் அடிகளையும் பிடித்து அம்மி மிதிப்பித்தான்.

கடைசியாக, ஆண்டாள் தன் மணவாளனோடு யானைமேல் ஊர்வலம் வந்தாள். அக்காட்சியின்பத்தைக் கண்குளிரப் பருகிய மக்கள், ஜய!ஜய!" என்று கோஷித்தார்கள். பெரியாழ்வார் பல்லாண்டு பாடினார். சுமங்கலிகள் மங்களம் பாடி ஆரத்தி எடுத்தார்கள்).

ஆண்டாள் பேராச்சரியத்தோடு கண்ணை விழித்தாள். அவள் பக்கத்தில் தோழி ஒருத்தி இருந்தாள். அவளை நோக்கி ஆண்டாள் தான் கண்ட அற்புதக் கனவைச் சொல்லத் தொடங்கினாள். அதன் வெளிப்பாடுதான் "**வாரணமாயிரம்**" என்னும் பாசுரம்.

*"வாரணம் ஆயிரம் சூழவலம் செய்து நாரண நம்பி நடக்கின்றான் என்றெதிர்*
*பூரணப் பொற்குடம் வைத்துப் புறம் எங்கும் தோரணம் நாட்டக்கனாக்கண்டேன்*
*தோழீ! நான்."*

இந்தப் பாடல்களின் மூலம் ஆண்டாள், தான் கனவிலே அனுபவித்த திருமண வைபத்தைத் தோழிக்குக் கூறினாள்.

இப்படி சிறிது காலம் செல்ல, ஆண்டாளின் காதல் பிச்சும், அரங்கனின் அமைதியும் ஆழ்வாரைக் கலைலப்பட வைத்தது. அடியார் மனம் நோகத் தாங்காத அரங்கன், உடனே அவர்கனவில் தோன்றி "**நம் கோயிலுக்கு உம் திருமகளான கோதையை அழைத்து வாரும், அவளை நாம் ஏற்றுக் கொள்வோம்**" என்று அருளினார். அவ்விதமே கோயில் கைங்கர்யபரர்கள் கனவிலும் அரங்கன் தோன்றி, "**நீங்கள் யாவரும் ஸகல விதமான பிருதுகளோடும் பல்லக்கு, சாமரங்கள், குடை, மங்கள வாத்யங்களுடனும் ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று பெரியாழ்வாரின் திருமகளான கோதை நாயகியை அந்தப்பல்லக்கிலே ஏற்றி இங்கு அழைத்து வரவேண்டும்**", என்று பணித்தருளினார். இவ்விஷயம் ஸ்ரீரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர் முழுவதும் அறிவிக்கப்பட்டு, ஜனங்கள் நாட்டின் பல பக்கங்களிலிருந்தும் திரண்டு ஸ்ரீவில்லிபுத்தூரை நோக்கி வந்தவண்ணமாக இருந்தனர்.

அந்தசமயம் மன்னன் வல்லபதேவன் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. அவனும் பெரிய பெருமாள் ஆணையைக் கேட்டு, ஆண்டாளுடைய பக்தியையும், ஆழ்வாருக்கு உண்டான சிறப்பையுங்கண்டு பெருமையடைந்து ஆண்டாளது திருக்கல்யாண வைபவத்தில் தானும் பங்கு கொள்ள வேண்டும், என்று எண்ணி தகுந்த அலங்காராதி ஏற்பாடுகளுடன் வந்து, ஆழ்வாருடன் சேர்ந்து கொண்டான்.

இதற்கிடையே, ஸ்ரீ ரங்கம் பெரிய பெருமாளின் கைங்கர்யபரர்கள் வில்லிபுத்தூரை அடைந்து, ஆழ்வாரிடம் பெருமாளின் அருளப்பாட்டைத் தெரிவிக்க, உடனே ஆழ்வாரும் ஆண்டாளும் வடபெருங் கோயிலுடையானிடம் ஸ்ரீரங்கநாதனின் ஆக்ஞையை விண்ணப்பித்து, அவர் அனுமதி பெற்றார்கள். அரங்கன் அனுப்பியிருந்த பல்லக்கில் ஆண்டாளை அமரச் செய்தார் ஆழ்வார். அங்கு கோலாகலமாக சூழ்ந்திருந்த பெருமக்கள் அனைவரும்,

*"கோதை நாயகி வந்தாள்! வேதநாயகி வந்தாள்!*
*வேள்வி நாயகி வந்தாள்! வேயர் குலவிளக்கு வந்தாள்!*
*போத நாயகி வந்தாள்! ஜ்ஞான நாயகி வந்தாள்!*
*சூடிக்கொடுத்தவள் வந்தாள்! சுரும்பார் குழலி வந்தாள்!*
*பாவை பாடியவள் வந்தாள்! பட்டர்பிரான் திருமகள் வந்தாள்!"*

என்று பலவாறாகப் பாராட்டுரை வழங்கி கோஷித்து ஆரவாரத்துடன் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள்.

மங்களவாத்யங்களுடனும், சத்ர சாமரங்களுடனும், பிருதுகளுடனும் ஆண்டாள் பல்லக்கில் நாடே புடை சூழ திருவரங்கம் வந்தார். அரங்கனின் கைங்கர்யபரர்கள் முத்துக்களிழைத்த மூடுபல்லக்கிலே ஆண்டாளை எழுந்தருளுவித்துக் கொண்டு திருவரங்கனின் பெரிய திருமண்டபத்தே சென்று இறக்கினார்கள், பின்பு மூடுபல்லக்கை மூடியிருந்த தட்டுப்பாயை அகற்றினார்கள். சூடிக் கொடுத்த நாச்சியாரும் அனைவரும் காணும்படி - உதறி உடுத்த பட்டுச்சேலையும், சுற்றிய செங்கழுநீர் மாலையும், திருநெற்றியிலே கஸ்தூரி திருநாமமும், காதளவும் ஓடிக் கயல்போல் மிளிரும் கடைக்கண் விழியும், கொடியோனையுமாய், சிலம்பார்க்க சீரார் வளையொலிப்ப, அன்னமென்னடையும் கொண்டு, அழகிய மணவாளன் திருமுன்பே சென்று, உள்ளே புகுந்து அரங்கனைக் கண்களாரக் கண்டாள்.

பெரியபெருமாளாய் இக்ஷ்வாகு குலதனமான, அரங்கநாதனின் ஸௌந்தர்ய ஸம்பத்தானது தெய்வத்திருமகளை வசீகரிக்க அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே, ஆண்டாள் மெள்ள நடந்து ஸ்ரீரங்கநாதனின் நாகத்தணையை மிதித்தேறி, எப்போதும் திருவரங்கனைத் திருவடி வருடவாம்படி! மறைந்தருளினார். இதைக்கண்ட ஆழ்வாரும், அவர் சிஷ்யரான வல்லபதேவரும், மற்றெல்லாரும் ஆச்சர்யப்பட்டார்கள். திருவரங்கனும் ஆழ்வாருக்கு அருளப்பாடு இட்டருளி, "**ஜனக சக்கரவர்த்தியைப் போல் நீரும் எனக்கு மாமனார் ஆகி விட்டீர்**" என்று மிகவும் உகந்தருளி அவருக்குத் தீர்த்தம், திருமாலை, திருப்பரியட்டத்துடன் ஸ்ரீசடாரி ப்ரஸாதித்து, "**நீர் வில்லிபுத்தூர் உறைவானுக்கே கைங்கர்யம் செய்து வாழ்ந்து வருவீர்**" என்றருளினார். ஆழ்வாரும் மனம் மகிழ்ந்து ஸ்ரீவில்லிபுத்தூர் சென்றார்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் **ஆண்டாளும்;** கோதை அரங்கராஜனைக் கண்ணனாகவே வரித்ததால், அரங்கனும் ஆயக் கோலுடன் **ரங்கமன்னாராகவும்;** ஆண்டாளைப் பற்றி பெருமாளுக்கு தெரிவித்து அவளை விரைவில் பெருமாள் திருமணம் புரிந்து கொள்ள புருஷகாரம் பண்ணியபடியால் **பக்ஷிராஜனும்** ஏகஸிம்மாசனத்தில் எழுந்தருளி இருக்கின்றார்கள். இங்கு ஆண்டாளுக்கு பெருமாள் பரதந்திரனாய், பக்தபராதீனனாய் இருக்கும் இருப்புத் தோற்றும்படி, நமக்கு சேவை சாதிக்கும் அழகை இன்றும் ஸ்ரீவில்லிபுத்தூரிலே காணலாம்.

**சுபம்**

# ஸ்ரீ ஆண்டாள் ஜாதகம்

கர்க்கடே பூர்வபல்குந்யாம் துளஸீகாநநோத்பவாம்!
பாண்ட்யே விஸ்வம்பராம் கோதாம் வந்தே ஸ்ரீரங்க நாயகீம்!!

## THE HOROSCOPE OF SRI ANDAL IN TAMIL AS FOUND IN THE MANUSCRIPT

| | | | |
|---|---|---|---|
| | | | கேது |
| | ராசி | | சூரி புதன் குரு சுக் சனி |
| | | | சந் |
| ராகு | | ல/ செவ் | |

| | | | |
|---|---|---|---|
| ல/ சுக் உச்சம் | | ராகு | |
| | அம்சம் | | குரு உச்சம் |
| செவ் உச்சம் | | | |
| | சந் கேது | சனி உச்சம் | சூரி புதன் உச்சம் |

ஸ்வஸ்திஸ்ரீ கலியுகர்தி சுத்த தினம் 35529, நாழிகை 17 விநாடி 30-க்கு, கலியுகாதி வருஷம் 97-க்கு மேற் செல்லாநின்ற நள வருஷம், தக்ஷிணாயணம், கிரிஷ்மருது, கடக மாதம், 18-ஆம் தேதி, செவ்வாய்க் கிழமை, நாழிகை 17, விநாடி 30-க்கு, துலா லக்னத்தில், மீன நவாம்சத்தில், பூரம்-4ஆவது பாதத்தில், பெரியாழ்வார் திருமகளாக ஸ்ரீ ஆண்டாள் அவதரித்தாள்.

If 5 planets were to be in the Zenith, the native will be a super person, a "loka-nayaka", An astrology book in Tamil states about the ultimate result that will accure from the planets being in the Zenith, ranging from one to five. The aphorism in Tamil runs as follows:-

உள்ளதொரு கிரகமுச்சமேவிற் கிராமணியாம்
உபயமுச்சம்பெறிற் பலவூர்க் கிராமணியுமாவான்
தெள்ளியதோர் ஒருமூன்று கிரக முச்சமாணாற்
கோன் மன்னவனாகிச் சிறிதவனி புரப்பன்
நள்ளியதோர் ஈரிரண்டு கிரக முச்சமானால்
நவிலொரு மண்டலந்தனக்கு நாயகனேயாவன்
புள்ளிசெறியோரைந்து கிரகமுச்சமானாற்
பூலோகநாயகனாமெனப் பலன்கள் புகல்வார்.[1]

Meaning :- If one planet is in the Zenith, the native will be village headman; If two planets were in the Zenith, then he will be the headman of more than one village; if three planets were in the Zenith, he will be a petty planets were in the Zenith he will be a ruler of Kingdom; if five planets were in the Zenith he will be a ruler of the world. We can compare here the horoscope of Sri. Ramachandra. In Rama's horoscope also, one can find 5 planets in the Zenith, the Venus, Jupiter, Saturn, Mars and the Sun.2

Thus, the conclusion is that Sri, Andal is superhuman/ highly erdite/ a paragon of virtue and above all divinity personified.

## கோதா சதுஸ்லோகீ

(ஸ்ரீஅநந்தாழ்வான் அருளிச்செய்தது)

சக்ரே கோதா சதுஸ்லோகீம் யோ வேதாந்த ப்ரகர்பி தாம்
ஸ்ரீவேங்கடேச ஸத்பக்தம் தமனந்த குரும்பஜே

நித்யா பூஷா நிகம சிரஸாம் நிஸ்ஸ மோத்துங்க வார்த்தா
காந்தோ யஸ்யா: கசவிலுலிதை: காமுகோ மால்யரத்தனை:
ஸூக்த்யாயஸ்யா: சுருதிசுபகயா ஸுப்ரபாதாதரித்ரீ
ஸைஷா தேவீ ஸகல ஜநநீ ஸிஞ்சதாம்மாம பாங்கை: (1)

மாதா சேத்துலஸீ பிதாயதி தவ ஸ்ரீவிஷ்ணுசித்தோ மஹான்
ப்ராதா சேத்யதிசேகர: ப்ரியதம: ஸ்ரீரங்க தாமாயதி
க்ஞாதாரஸ்தனயாஸ்த்வ துக்திஸரஸ ஸ்தன்யேன ஸம் வர்த்திதா:
கோதா தேவி கதம் த்வமன்ய ஸுலபா ஸாதாரணா ஸ்ரீரஸி. (2)

கல்பாதௌ ஹரிணாஸ்வயம் ஜநஹிதம் த்ருஷ்ட்வேவ ஸர்வாத்மனாம்
ப்ரோக்தம் ஸ்வஸ்ய சகீர்த்தனம் ப்ரபதநம் ஸ்வஸ்மை ப்ரஸூனார்ப்பணம்
ஸர்வேஷாம் ப்ரகடம் விதாது மனிசம் ஸ்ரீ தன்வி நவ்யேபுரே
ஜாதாம் வைதிக விஷ்ணுசித்த தனயாம் கோதா முதாராம் ஸ்தும: (3)

ஆகூதஸ்ய பரிஷ்க்ரியாமநுபமாமாஸேசநம் சக்ஷுஷோ:
ஆநந்தஸ்ய பரம்பரா மநுகுணாம் ஆராமசைலேசிது:
தத்தோர் மத்ய கிரீட கோடிகடித ஸ்வோச்சிஷ்ட கஸ்தூரிகா
மால்யாமோத ஸமேதிதாத்மவிபவாம் கோதாமுதராம் ஸ்தும: (4)

ஸ்வோச்சிஷ்ட மாலிகாபந்த கந்த பந்துர ஜிஷ்ணவே
விஷ்ணுசித்த தநூஜாயை கோதாயை நித்ய மங்களம்.
மாத்ருசா கிஞ்சன த்ராண பத்தகங்கணபாணயே
விஷ்ணுசித்த தநூஜாயை கோதாயை நித்ய மங்களம்.

# ஸ்ரீஆண்டாள் அவதரித்த ஸ்ரீவில்லிபுத்தூரின் விவரங்கள்

"*மின்னார் தடமதிள் சூழ் வில்லி புத்தூரென்று ஒரு கால் சொன்னார் கழற் கமலம் சூடினோம்*"

-பாண்டியபட்டர்

**ஸ்ரீவில்லிபுத்தூர்** என்று ஒரு முறை ஊரின் பெயரைச் சொன்னவர்களுடைய திருவடியை சென்னியில் சூடுவேன் என்று பரவசத்தால் மொழிந்தார் பாண்டிய பட்டர் ஸ்வாமி. அத்தகைய சிறப்பு வாய்ந்த ***வில்லிப்புத்தூர் வேதக் கோனூர்*** என்னும் இந்த ஸ்ரீவில்லிபுத்தூரிலேதான் பெரியாழ்வாரும் வாழ்ந்து வந்தார். ஆண்டாளும் அவதரித்தார். இக்காரணம் பற்றியே கோவிந்தனும் இவ்ஊரிலே ரங்கமன்னாராய் வாழ்கிறான்.

***கோதை பிறந்த ஊர் கோவிந்தன் வாழும் ஊர்; சோதி மணி மாடங்கள் தோன்றும் ஊர்***

***நீதியால் நல்ல பத்தர் வாழுமூர்; நான் மறைகளோதும் ஊர்.***

என்கிறபடி, பெரியாழ்வாராலும், ஆண்டாளாலும் பாடல் பெற்றது இந்த திவ்ய தேசம். இத்தலத்தை புதுவை, தென்புதுவை என்று ஆழ்வார் குறிப்பிடுகிறார். ஆதியில் இவ்வூர் **வராஹக்ஷேத்திரம்** என்று பெயர் பெற்றிருந்தது. நிலமகளைக் கவர்ந்து சென்ற **இரண்யாக்ஷன்** என்ற அசுரனைத் திருமால் இங்கே வதஞ்செய்ததாக ஐதிஹ்யம். அவ்வரக்கனை வதம் செய்த பிறகு இறைவன் நிலமகளோடு பல கல்பங்கள் இங்கே தங்கியிருந்ததாக வரலாறு சொல்கின்றது.

பிற்காலத்தில் இவ்விடம் மரங்கள் அடர்ந்து காடானது, அக்காட்டில் பிருகு, மார்க்கண்டேயர் ஆகிய முனிவர்கள் தவம் செய்து வந்தனர். அத்தவத்திற்கு இடையூறு விளைவித்து வந்த **காலநேமி** என்னும் அசுரனை தன் சக்கராயுதத்தால் கொன்று சாது ரக்ஷணம் செய்தார் திருமால். பின்பு அச்சக்கராயுதத்தில் தோய்ந்த ரத்தத்தை நீராட்ட வருணனை அழைக்க, வருணன் "**கங்கை, யமுனை, சரஸ்வதி**" ஆகிய மூன்று புண்ய தீர்த்தங்களை அழைத்து அத்திருவாழியை நீராட்டினான். இவ்வூரில் இந்த மூன்று தீர்த்தங்களும் கலந்து பெருகிய திருக்குளமே **திருமுக்குளம்** என்னும் புஷ்கரணியாயிற்று. இப்படி உபகரித்த திருமாலை, முனிவர்கள் அவ்வூரிலேயே சேஷசாயியாக எழுந்தருளியிருக்க வேணும் என்று ப்ரார்த்திக்க, அவனும் **வட பத்ரத்தின்** மேல் (ஆலிலை), ஆலமரத்தின் கீழ், வடபத்ர சாயியாக எழுந்தருளினார். அவரே தற்போது எழுந்தருளியிருக்கும் வடபத்ர சாயி பெருமாளாகும். பின்னர் பல ஆயிரம் ஆண்டுகள் சென்றபின் அப்பிரதேசம் மீண்டும் நெருங்கி அடர்ந்த காடாகி விட்டது. வில்லி என்ற வேடர் தலைவன் அக்காட்டில்

வசித்து வந்தான். அவனுடைய தம்பி (புத்தன்) வேட்டையாடச்சென்ற கானகத்தில் இறந்துவிட்டான். அவனைத் தேடி வந்த வில்லி அவன் பிணத்தைக் கண்டு மூர்ச்சையாக, அப்போது கனவில் வடபத்ர சாயி தோன்றி ***"நான் உன் தம்பியை எழுப்பித் தருகிறேன், எனக்கு நீ கோயில் கட்டு"*** என்று பணித்து, அவனை எழுப்பித் தந்தார்.

இதானல் உடனே வில்லி பெருமாளுக்கு பெரிய அழகான கோயிலைக் கட்டினான். காட்டை அழித்து நாடாக்கினான். அடுத்த ஊரிலுள்ள அந்தணர்களை அழைத்து வந்து அவ்வூரில் குடியேற்றினான். இப்படி வில்லியால் நிருமிக்கப்பட்ட புதிய ஊர் **புத்தூர்** என்றும், வில்லி சிருஷ்டித்த புதிய ஊர் என்பதால் **வில்லிபுத்தூர்** என்றும் வழங்கலாயிற்று.

இந்த வில்லிபுத்தூரில் ஒரு நந்தவனம் அமைத்து பல புஷ்பச்செடிகளை வைத்து வடபத்திரசாயிக்கு நிஷ்காம்யமாய் புஷ்பங்களைக் கொண்டு மாலை கட்டி சாத்தும் திருப்பணியை செய்து வந்தவரே **பட்டர்பிரான்** என்றும் சதா விஷ்ணுவையே சித்தத்தில் வைத்து த்யானம் செய்வதால் **விஷ்ணு சித்தர்** என்றும் பெயர் போந்த பெரியாழ்வார். இவருக்குத் திருமகளாய் அவதரித்தவரே ***சுரும்பார் குழற் கோதையான ஸ்ரீஆண்டாள்***. இவர்கள் இருவரும் அவதரித்து பெருமாளை மங்களாசாசனம் செய்த பிறகு முக்கியமான திவ்ய தேசமாயிற்று.

ஸ்ரீஆண்டாள் கோயில், நகரின் நடுவே நான்கு ரத வீதிகள் சூழ அமைந்துள்ளது. ஆலயத்துக்குள் செல்ல முன் வாயிலையும், பல மண்டபங்களையும் தாண்டித்தான் உள்ளே செல்ல வேண்டும். இங்கு வடபத்திரசாயிக்கு ப்ரதான கோயில் உள்ளது. ஆண்டாள், ரங்கமன்னார், கருடர் ஏகசிம்மாசனத்தில் எழுந்தருளியிருக்கிறபடியால் ஆண்டாள் கோயிலும் பெரியதாக தனிக்கோயிலாக உள்ளது. ஆண்டாள், வடபத்திரசாயி, பெரியாழ்வார் மூவருக்கும் தனித்தனி த்வஜஸ்தம்பம் உண்டு. இன்றும் பெரியாழ்வார் நந்தவனம் தனியாகப் பராமரிக்கப்பட்டு மிக அழகாக உள்ளது.

வடபத்திரசாயி கோயில் ராஜகோபுரம்தான் இந்தியாவிலேயே மிக உயர்ந்த கோபுரம். 192 அடி உயரமுள்ளது. இதுதான் தமிழக அரசு போக்குவரத்து கழகச் சின்னமாக விளங்குகிறது. (தற்போது சமீபத்தில் ஸ்ரீரங்கம் ராஜகோபுரம் இதைவிட சிறிது உயர்வாக கட்டப்பட்டுள்ளது).

ஸ்ரீஆண்டாளின் திருத்தேரும் அப்படியே, மிகப்பெரியது. இவ்வூரில் திருவாடிப்பூரத்தன்று ஆண்டாள் திருத்தேரில் பவனி வரும் காட்சியைப் பார்க்க ஆயிரம் கண்கள் காணா. ஒரு ஊர் காரர்களாகச் சேர்ந்து வடம்பிடித்துத் தேரிழுப்பார்கள். சில வருஷங்களுக்கு முன்பு (15 வருட காலம் முன்பு) வரை ஆண்டாள் தேர் நிலைக்கு வர குறைந்தது மூன்று மாதமாகும். பக்தர்கள் கடிதப் போக்குவரத்தில் கூட ***"ஸ்ரீஆண்டாள் தேர் நிலைக்கு வந்து விட்டதா? இப்போது எந்த வீதி***

***வந்துள்ளார்*"** என்று விசாரித்து எழுதுவது வழக்கத்தில் இருந்து வந்தது. (தற்போது B.H.L நிறுவனத்தாரால் சக்கரம் நுதனமுறையில் அமைக்கப்பெற்றுள்ளதால் சீக்கிரம் நிலைக்கு வருவதாகச் சொல்லப்படுகிறது)

திருமலை நாயக்கர் ஒரு விஷ்ணு பக்தர். அவர் ஆண்டாள் மீது பெரிதும் ஈடுபாடு கொண்டவர். அவர் இவ்வாலயத்தில் பல திருப்பணிகளைச் செய்தார். மதுரை சிற்பங்களின் கைத்திறன்களை முழுவதுமாக ஆண்டாள் கோயிலில் காணலாம். இதை அமைத்தவர் திருமலை நாயக்கர் மன்னர்.

ஸ்ரீஆண்டாள் ஸந்நிதி கர்ப்பக்ருகத்தின் மேலுள்ள விமானத்தில் ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவைப் பாசுரங்களின் தாத்பர்யத்தை அறியுமாறு சுதை விக்ரகங்கள் அமைத்துள்ளார்கள்.

இரண்டாம் ப்ராகாரத்தில் கல்யாண மண்டபம், பரமபத வாசல், ஏகாதசி மண்டபம் உள்ளன. இங்குள்ள கல்யாணமண்டபத்தில் தான் ஆண்டாளின் திருக்கல்யாண வைபவத்தைச் சிறப்புடன் நடத்துகிறார்கள். இங்கு திருவாடிப்பூர உத்ஸவத்தில் 5ஆம் திருநாளன்று 5 கருட ஸேவை என்று சொல்லப்படும் உற்சவத்தில் 5 திவ்ய தேசத்து எம்பெருமான்கள் கருட வாகனத்தில் எழுந்தருள, ஆண்டாள் அன்ன வாகனத்தில், எழுந்தருளுவார். அப்போது பெரியாழ்வார் மங்களாஸாசனம் செய்வார். இந்த உற்சவத்தில் பெரியபெருமாள், திருத்தண்காலப்பன், அழகன், திருவேங்கடமுடையான், ரங்கமன்னார் ஆக ஐந்து பெருமாளும் ஐந்து கருடனில் எழுந்தருள, ஆண்டாள் ரங்கமன்னாரைத் தேர்ந்தெடுத்து அவருடன் சேர்ந்து வரும் அழகைச் சொல்லிமாளாது.

மற்றைய நான்கு பெருமாளும் ஆண்டாளைச் சுற்றியே கோவில் அமைத்துக் கொண்டு அங்கயே இருக்கிறார்கள். இவ்வூரின் வடமேற்கே 3 கி.மீ. தூரத்தில் மலையடிவாரத்தில் திருவேங்கடமுடையானும், மேற்கே 12 கி.மீ. தூரத்தில் ஒரு குன்றில் காட்டழகரும், 12மைல் தூரத்தில் திருத்தண்காலப்பனும் எழுந்தருளி இருக்கிறார்கள்.

ஸ்ரீஆண்டாளின் கோவில் பிற்காலத்துச் சேர்க்கை, சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்புதான் ஏற்பட்டது. வடபெரும் கோயிலுடையான் ஆலயம்தான் மிகப் பழைமையானது. வடபத்ர சாயி கோவிலின் கீழே லக்ஷ்மி நரசிம்மர் ஸந்நிதி இருக்கிறது. அதைத் தாண்டி சிறிது தூரம் சென்றால் மாடிக்குச் செல்லும் படிக்கட்டுகள் இருக்கின்றன. இதில் மேல் புறத்தில்தான் வடபத்திரசாயி பெருமாள் சயனத் திருக்கோலத்தில் எழுந்தருளியிருக்கிறார்.

**மாலே மணிவண்ணா!** என்று தொடங்கும் திருப்பாவை 26ஆம் பாடலின் முடிவில் **ஆலினிலையாய்** அருள் என்ற ப்ரயோகம் இந்த வடபத்திரிசாயிக்கே. இவரைக் கொண்டுதான் ஆண்டாள் நோன்பு நோற்றாள். இன்னும் மார்கழி மாதம் நோன்பை **பிரியாவிடை** உற்சவமாகவும், நீராட்ட உற்சவமாகவும் 8 நாட்கள் கொண்டாடுகிறார்கள். அப்பொழுது, ஆண்டாள் வடபத்ரசாயியிடம் வந்து உத்தரவு பெற்றுக்கொண்டு (கைத்தல சேவை) நோன்பு நோற்கச் செல்வார். மேலும் கிழக்கே உள்ள மண்டபத்தில் (இராப்பத்து மண்டபம்) வங்கக்கடல் கடைந்த என்ற **அமிர்த்த மதன** வைபவம் பகற்பத்தின் கடைசி நாளன்று நடைபெறும். (இங்கும் திருவரங்கம் போல் அனைத்து பிரபந்தங்களும் அரையர் சேவையுடன் சேவிக்கப்படுகின்றது.) அன்று இரவு ஆண்டாள் பெரியபெருமாளுடன் தங்கியிருப்பார். இதற்கு மறுநாள் நீராட்ட உற்சவத்திற்கு எம்பெருமானிடத்தில் பிரியாவிடை கொள்வார். இதுவும் முக்கியமான உற்சவம் இங்கு.

தினப்படி ஆண்டாள் சாற்றிக் கொள்கின்ற ஜடையைத் தன் நெற்றிப்பட்டையிலும், அவள் புடவையையும், சூட்டிக்கொண்ட மாலையையும் சாத்திக் கொண்டு ஸ்ரீஆண்டாளுக்குத் தன்னுடைய பாரதந்திரியம் தோற்ற மிக அழகாகவும், கண்ணுக்கு விருந்தாகவும், சயனித்துக் கொண்டு, அருள்பாலிக்கிறார் ஸ்ரீவடபத்ரசாயிப் பெருமாள். நம் நாட்டிலிருந்தும், வெளிநாட்டிலிருந்தும் பல ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஆண்டாளின் திருவாடிப்பூர உற்சவத்திற்கும், மார்கழி நீராட்ட உற்சவத்திற்கும் திரளாக வந்திருந்து, ஸ்ரீஆண்டாள் இன்னமும் தங்களுடன் ஜீவ தசையில் இருப்பதுபோலவே பாவித்து ஒவ்வொருவரும் அவளைத் தோழியாகவும், தாயாராகவும் பாவித்து, கொண்டாடும் அழகையும், நீராட்ட உற்சவத்தில் அவள் எண்ணைக் காப்பு செய்து கொள்ளும் அழகும், திருத்தேரில் பவனி வரும் அழகும், பிரியாவிடை கொள்ளும் அழகும், திருக்கல்யாண உற்சவமும் பார்க்க ஆயிரம் கண்போதா. அவ்வூரை மிதிப்பதும், திருமுக்குளத்தில் நீராடுவதும், அவ்வூரிலேயே தங்கி அவள் உற்சவத்தைக் காண்பதும் தான் நாம் பிறவி எடுத்த பயன்

சதமகமணிநீலா சாருகல்ஹாரஹஸ்தா
ஸ்தநபரநமிதாங்கீ ஸாந்த்ரவாத்ஸல்யஸிந்து:,
அலகவிநிஹிதாபி:ஸ்ரக்பிராக்ருஷ்டநாதா
விலஸது ஹ்ருதி கோதா விஷ்ணுசித்தாத்மஜா ந:

-கோதா ஸ்துதி (27)

# ஐதிகங்கள்

## ஆண்டாளும் - ஸ்வாமி எம்பெருமானாரும்:

1. "***பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே***" என்பதன் ஐதிகம் ஸ்ரீஆண்டாள் நாச்சியார் திருமொழியில்,

*நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு*
*நாறு தடாவில் வெண்ணைய் வாய் நேர்ந்து பராவி வைத்தேன்*
*நூறு தடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்*
*ஏறு திருவுடையான் இன்று வந்து இவை கொள்ளுங்கொலோ.*

என்று பாடினாள். அவள் திவ்ய சரித்திரத்தில், அவள் பகவானுக்கு தருவதாகச் சொன்ன இவைகள் வெறும் பாடலாய்த்தான் நின்றுள்ளன. செய்ததாகத் தெரியவில்லையே! என்று, "**ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்களைப் பரப்புவதையே இலட்சியமாகக் கொண்ட**" நம் இதத்தாய் ராமானுஜர், "**ஆண்டாள் வாய் நேர்ந்தாள், ஆனால் அவற்றைச் செயலாக்குவது நம் கடமையல்லவா!**" என்று உடனே திருமாலிருஞ்சோலை அழகருக்கு நூறு அண்டாவில் அக்கார வடிசிலும் (பால் சக்கரைப் பொங்கல்) வெண்ணையும் சமர்ப்பித்துவிட்டு, உடன் ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஆண்டாளை அடி பணிந்து நின்றார். தான்முன்பு பாடியதைச் செயல்படுத்திய இராமானுசரின் அச்செயல்பாட்டிற்கு உகந்து ஸ்ரீஆண்டாள் கர்ப்பக்ரகத்திலிருந்து சிறிது முன் இருக்கும் அர்த்த மண்டபம் வரை நகர்ந்து வந்து "**வாரும் நம் அண்ணலே**" என்றார். அன்றிலிருந்து **ஆண்டாள் ராமானுஜருக்கு தங்கை** என்பது தோற்ற, "***பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே***" என்று அப்பிள்ளை ஸ்ரீஆண்டாளின் வாழித் திருநாமத்தில் பாடியுள்ளார்.

2. பகவத் ராமானுஜர் திருப்பாவையை தாரக, போஷக, போக்யமாய் அநுஸந்தித்து "**திருப்பாவை ஜீயர்**" என்னும் பெயர் பெற்றவர். அவர் அதை **கோதோபநிஷத்** என்று அருளினார். அவர் தினமும் பிக்ஷைக்குச் செல்லும் போது கோதோபநிஷத்தைத் தான் அநுஸந்தானம் செய்து கொண்டு போவார். ஒரு சமயம் உடையவர் திருக்கோட்டியூர் எழுந்தருளியிருந்தபோது, வழக்கம்போல் தன்னுடைய வர்ணாசிரம தர்மத்திற்கு ஏற்ப **கோதோபநிஷத்** சொல்லிக்கொண்டு திருக்கோட்டியூர் நம்பியின் திருமாளிகைக்கு பிக்ஷைக்கு எழுந்தருளினார். அப்போது அவர் இல்லக்கதவு தாளிட்டிருந்தது. வாசலில் நின்றிருந்த ராமானுஜர் "***உந்து மதகளிற்றன்***" பாசுரத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார், அப்பாசுரத்தில், ***செந்தாமரைக்கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய்*** என்னும் போது நம்பியின் பெண்

தேவகிபிராட்டி கதவைத் திறந்து கொண்டு வந்தார். இதைக் கண்ட ராமானுஜர் அவளை நப்பின்னைப் பிராட்டியாகவே கருதி மெய் மறந்து வணங்கி மூர்ச்சித்தார். உடனே தேவகி பிராட்டி நம்பியிடம், "**ராமானுஜர் என்னைக் கண்டதும் மூர்சித்து விழ்ந்து விட்டார்**" என்று தெரிவித்தார். உடனே நம்பி, "**உந்து மதகளிற்றன் பாசுரத்திலேயே உடையவர் மூழ்கிவிட்டாரம்மா, அதனால் தான் இப்படியாயிற்று**" என்றார். இதிலிருந்து எம்பெருமானார் ஆண்டாள் திருப்பாவையில் எப்படி ஆழங்கால் பட்டார் என்று தெரிகிறது.

3. எம்பெருமானாரை ஒர் உரு திருப்பாவைக்கு அர்த்தம் அருளிச்செய்யவேணும் என்ன, "**திருப்பல்லாண்டுக்கு ஆள் கிடைக்கிலும் திருப்பாவைக்கு ஆள் கிடையாது**" என்று அருளிச் செய்தார். மேலும் "***மோவாயெழுந்த முரடர் கேட்கைக்கு அதிகாரிகள் அல்லர். முலையெழுந்தார் கேட்கவேணும். அவர்களிலும் எம்பெருமானைத் தாங்கள் அநுபவிக்கவேணும் என்றிருக்கும் பரிவாணிச்சிகளான பிராட்டிமார்க்கும் கேட்க நிலமல்ல. பலசொல்லியென்! பத்து ஆழ்வார்களுடைய ஸாரபூதையான தானே சொல்லத் தானே கேட்குமத்தனை என்றருளிச்செய்தார்***" - ஈராயிரப்படி. இதிலிருந்து திருப்பாவையின் ஏற்றம் தெரிகிறது.

## ஆண்டாளும் ஸ்வாமி தேசிகனும்:

ஸ்வாமி தேசிகன் ஆண்டாளை சேவிக்க ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் போது, ஆண்டாள் எழுந்தருளும் ரத, மாடவீதிகளைத் தாண்டி எழுந்தருளியிருந்தார். அந்த சமயத்தில் ஆண்டாள் மாத திருநக்ஷத்திரப் (பூரம்) புறப்பாடு நடக்கவிருக்கும் தினம். அன்று ஸ்வாமிக்கு திருமேனி பாங்கில்லாமல் தாயாரை நினைத்துக் கொண்டு எழுந்து வரமுடியாமல் தவித்துக்கொண்டிந்தார். என்ன அதிசயம், ஆண்டாள், வழக்கமாக எழுந்தருளும் வீதியில் ஒரு அசௌகர்யத்தை ஏற்படுத்திக் கொண்டு அன்று ஸ்வாமி தேசிகன் எழுந்தருளும் வீதிவழி எழுந்தருளி, ஸ்வாமியின் திருமாளிகைக்கு முன் எழுந்தருளினார். ஸ்வாமி உடம்பு முழுக்கப் பதறி "***அம்மா! என்னே உன் கருணை! என்னே உன் தயை! ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலா மிவாந்யாம் கோதாம் அநந்ய சரண: சரணம் ப்ரபத்யே!***" என்று தாயாரை சேவித்து, அப்படியே உடனடியாக ஆண்டாளின் கருணையைப் பற்றி **கோதாஸ்துதி**யாக அருளினார்.

இந்த கோதாஸ்துதியில் நான்காவது சுலோகத்தில், அவர் கோதாவரியைப்பற்றிச் சொல்லும்போது "***கங்கை முதலிய பாபங்களைப் போக்கும் பலநதிகள் கூட ஸமய விசேஷங்களில் கோதவரி நதியில் நெடும்போது வாஸம் பண்ணித் தூய்மை பெறக்கடவன***" என்று **தேவதாநுக்ரஹம்** ஏற்பட்டதாகப் புராண



ஸ்ரீ மணவாளமாமுனிகள், திருவல்லிக்கேணி

வரலாறு உள்ளது. அத்தகைய கோதாவரி பஞ்சவடியில் இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது பிராட்டி, **"வந்தே கோதாவரீம் நதீம், க்ஷிப்ரம் ராமாய சம்ஸத்வம் ஸீதாம் ஹரதிராவண:"** என்று கோதவரியை நோக்கி என்னை இராவணன் கவர்ந்து சென்றதாக ஸ்ரீராமனிடம் சொல்லு என்று வேண்டிக்கொண்டாள். இராவணனுக்கு பயந்து பிராட்டிச் சொன்னதை ராமனிடம் அறிவிக்காமல், பிராட்டிக்கு கிஞ்சித்கரிக்கும் படியான பாக்கிய விசேஷத்தை இழந்து அபரிசுத்தியை ஏற்படுத்திக் கொண்டாள் கோதாவரி. கம்ஸனுடைய மாளிகையின் கீழே பெருகியிருக்கும் யமுனை வசுதேவர் கண்ணனைக் கோகுலத்திற்கு எடுத்தச்செல்ல வசதியாய் முழங்கால் அளவு தன்னை வற்றிக் கொடுத்து பகவத் பாகவத ப்ரீதியைப்பெற்று ஆண்டாளால் **தூயபெருநீர்யமுனை** என்று மங்களாஸாசனமும் பெற்றாள். இருப்பினும், தயையே வடிவான கோதையார், கோதாவரியும் தோஷம் தீர்ந்து தூய்மை பெற தான் கோதை என்னும் திருநாமத்தை தாங்கி, இத்திருநாம சம்பந்தத்தால் கோதாவரியும் ஏற்றம் பெற அருளினாளன்றோ! என்று கொண்டாடுகிறார் ஸ்வாமி தேசிகன்.

## ஆண்டாளும் - மணவாள மாமுனிகளும்:

ஒரு சமயம் மணவாள மாமுனிகள் ஆழ்வார்திருநகரியிலிருந்து ஸ்ரீவில்லிபுத்தூருக்கு ஆண்டாள் நீராட்ட உற்சவத்திற்காக எழுந்தருளினார். அப்படி வரும் போது ப்ரயாண இடையூறினால் ஒருநாள் தாமதமாக, ஆண்டாள் நீராட்ட உற்சவம் (7 நாட்கள் நடக்கும்) 7ஆம் திருநாள் முடிந்து விட்டது. மாமுனிகள் ஆண்டாள் நீராட்ட உற்சவம் சேவிக்க முடியவில்லையே என்று மிகவும் வருத்தத்துடன் ஆண்டாளைப் பிரார்த்திக்க, ஆண்டாளும் கருணை கூர்ந்து திருவுள்ளம் இரங்கி, அவருக்கு விபவத்தில் சேவை சாதித்து, அவருக்காக 8ஆம் திருநாள் நீராட்ட உற்சவம் கண்டருளி (தை மாதம் சங்கராந்தி அன்று) அவர் மனத்தை உகப்பித்தருளினார். அவரும் மனமுகந்து, ***"எமக்காவன்றோ! இங்கு ஆண்டாள் அவதரித்தார்"*** என்று கொண்டாடி மகிழ்ந்தார். இன்றளவும் ஸ்ரீவில்லிபுத்தூரில் மட்டும் மார்கழி நீராட்ட உற்சவம் 8 நாட்கள் நடப்பதுடன், அன்றைய தினம் ஸ்ரீஆண்டாள் மாமுனிகள் சன்னதி வாயிலில் எழுந்தருள, மாமுனிகள் கைத்தலத்தில் எழுத்தருளி ஆண்டாளை மங்களாசாசனம் செய்ய, ஸ்ரீஆண்டாளும் அவருக்கு மாலை, பரிவட்டம், ஸ்ரீசடகோபன் சாதித்து, கற்பூரஹாரத்தியும் கண்டருளச் செய்து, அவருக்கு அருளும் அழகை கண்ணார கண்டு மகிழலாம்.

இதன் மூலம் ஸ்ரீஆண்டாள் இன்னமும் நம்முடன் ஜீவித்துக் கொண்டியிருக்கிறார் என்பது நிதர்சனம் ஆகிறது. ஸ்ரீஆண்டாள் இன்றளவும் பக்தர்கள் மனதில் எண்ணியவைகளையெல்லாம் உடனுக்குடன் நடத்திக் கொடுத்து சொன்ன வண்ணம் செய்யும் தாயாராய் எழுந்தருளி, நம்முடைய பாதகங்களைத் தீர்த்து பரமனடி காட்டுகிறார் என்பதில் எள்ளவும் சந்தேகம் இல்லை.

## கம்ப நாட்டாழ்வார் கண்ட
## கோதாவரியும் கோதையின் வரியும்

கம்பராமாயணத்தில், ஆரண்ய காண்டம், பஞ்வடி படலத்தில், "**கோதாவரி**" என்னும் தெய்வீக நதியின் பொலிவுகளை கம்பர் எவ்வாறு வர்ணிக்கிறார் என்பதைக் காணும் போது, எப்படி கோதையின் வரிக்கு அது ஒப்புமையாற்று! என்பதைப் பார்ப்போம்.

*புவியினுக்கு அணி ஆய், ஆன்ற பொருள் தந்து, புலத்திற்று ஆகி,*
*அவி அகத் துறைகள் தாங்கி, ஐந்திணை நெறி அளாவி,*
*சவி உறத் தெளிந்து, தண்ணென் ஒழுக்கமும் தழுவி, சான்றோர்*
*கவி எனக், கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்.*

**1. புவியினுக்கு ஆணி ஆய் :** "**சான்றோர்கள் கவி**"யானது இந்த பூமித்தாய்க்கு ஒரு அணிகலன் போல் இருக்க வேண்டும் என்று கவியின் இலக்கணம் தெரிவிக்கின்றது. ஆண்டாளின் திருப்பாவை என்பது இப்புவிநாயகனுக்கே ஆணியாக உள்ளபோது, இப்புவியின் அணி என்பதில் எந்த சந்தேகமும் கிடையாது. அதுவும் இதில் கையாண்டிருக்கும் அணிகள் மிகச் சிறப்பு வாய்ந்தவை. முக்கியமாக "**உவமை அணி**" மிகவும் தன்னேற்றம் பெற்று விளங்குகிறது இத்திருப்பாவையில். இவ்வணியே ஒரு முக்கியமான அலங்காரம் ஒரு இலக்கியத்திற்கு. திருப்பாவை புவியின் முக்கிய அலங்காரம் என்பதையும் அதை அணிந்து கொள்ளாதவர்களை இவ்வையகமானது சுமப்பதே வீண் என்பதைத் தெரியப்படுத்தும் பாசுரமாவது,

"***கோதை தமிழ் ஐயைந்தும் ஐந்தும்***
***அறியாத மானிடரை வையம் சுமப்பதாம் வம்பு***" என்பதாம்
(என்று இந்த முப்பது பாசுரங்களும் இந்த உலகத்தில் ஒவ்வொரு
மானிடருக்கும் ஆபரணம் என்கிறார்)

**2. ஆன்ற பொருள் தந்து :** அலங்காரம் மட்டுமல்லாமல், ஆழ்ந்த பொருளையும், அக்கவி கொண்டுள்ளதாய் இருக்கவேண்டும். அதன்படி இது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களையும் உள்ளடக்கியது. இவைகளை நல்ல முறையில் சொல்லி அனைவர் மனதிலும் படும்படி புகுத்தியிருக்கிறார். இதிலும் இத்திருப்பாவை சிறந்து விளங்குகின்றது. (உதாரணம்)

அறம் - "*ஐயமும், பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி*" 2ஆம் பாசுரம்
"*அம்பரமே, தண்ணீரே, சோறே அறம் செய்யும்,*" 17ஆம்பாசுரம்
பொருள் - "சூடகமே, தோள்வளையே,தோடே, செவிப்பூவே, பாடகமே
(இம்மைப்பொருள்) என்று அனைய பல்கலனும் யாமணிவோம்." -27ஆம்பாசுரம்
"மூட நெய் பெய்து முழங்கை வழிவார கூடியிருந்து
குளிர்ந்தேலோ ரெம்பாவாய்"

இன்பம் - "குத்துவிளக்கெரிய...எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்"
-19ஆம்பாசுரம்

வீடு "கோதை சொன்ன சங்கத்தமிழ்மாலை...எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்"

(எங்கும்) "இகத்திலும், பரத்திலும் (வீடு என்னும் மோக்ஷபலத்தை பெற்று) இன்புற்றிருப்பார்".
-30ஆம்பாசுரம்

**3.புலத்திற்று ஆகி:** ஐம்புலன்களையும், பொறிகளையும் கவியினுள் கையாளும் விதம்- ஆண்டாள் **"உந்து மதகளிற்றன்"** 18ஆம் பாசுரத்தில் ஐந்து இந்திரியங்களையும், பொறிகளையும் சொல்கிறார்.

**வந்துதிறவாய்** - கண்களுக்கு இரையிடுதல்;
**வளையொலிப்ப** - செவிகளுக்கு இரையிடுதல்;
**பேர்பாட** - நாவினுக்கு இரையிடுதல்;
**செந்தாமரைக் கையால்** - ஸ்பரிசநேந்திரியத்திற்கும் இரையிடுதல்;
**கந்தம் கமழும் குழலீ** - மூக்கினிற்கு இரையிடுதல்

மகிழ்ந்து, இப்படி எல்லா இந்திரியங்ளும் விடாய் தீர்வதைப் பார்த்து உன் மனம் குளிர்வதைக்கண்டு எங்கள் மனமும் உகந்து.

கீசு கீசென்றெங்கும் .....கேட்டிலையோ - செவிக்குணவு
குற்றமொன்றில்லாத ....போதராய் - கண்களுக்குணவு
கொற்றனர் .......வாய்திறவாய் - நாவினுக்குணவு

இப்படி இந்திரியங்களுக்கு கொடுக்கப்பட்ட விருந்தைப் பல இடங்களில் வர்ணிக்கிறார் ஆண்டாள்.

**4. அவிஅகத்துறைகள் தாங்கி:- (காமத்துப்பால்)** அகத்துறைதாங்கலின் உபலக்ஷணம் புறப்பொருள் - துறை, அதாவது புறத்துறையில் - அகத்துறைகளை உள்ளடக்கிப் பாடுதல் உம்.

1. அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி .... என்றென்றும் சேவகமே ஏத்தி - 24
2. மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதி தேவன். -8
3. புள்ளின் வாய் கீண்டானை பொல்லாரக்கனைக் கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடி -13.

**5. ஐந்திணை நெறி அளாவி:- புவியின் ஐந்து நிலைகளையும் அதன் தன்மைகளையும் விளக்குதல்:-**

மலையைச் சார்ந்த இடம் - குறிஞ்சி, பாலைவனத்தைச் சார்ந்த இடம் - பாலை, காடுகளைச் சார்ந்த இடம் - முல்லை, நிலத்தைச் சார்ந்த இடம் - மருதம், கடலைச் சார்ந்த இடம் - நெய்தல்.

1 குறிஞ்சி - (மலை) - மாரி மலை முழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் - 23.

2. பாலை - (பாலைவனம்) - செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா - 20

3. முல்லை - (காடுகள்) - (ஆயர்கள் காட்டில் மாடு மேய்ப்பவர்கள்)
கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்துண்போம்; - 28;
காசும் பிறப்பும்..... ஆய்ச்சியர் -7

4. மருதம் - (நிலம்) - ஓங்கு பெருஞ்செந் நெல்லூடு கயலுகள -3

5. நெய்தல் - (கடல்) - ஆழியுள்புக்கு முகந்து கொடு-4; வங்கக்கடல் கடைந்த - 30

5. சவி உறத்தெளிந்து:-

அ. **சுருங்கச் சொல்லுதல்** (உம்.)

"***நானேதானாயிடுக***" இந்த வார்த்தையுள் பாகவத லக்ஷணத்தை முழுவதுமாக உணர்த்துகிறார்.

ஆ. **விளங்க வைத்தல்** (உம்.)

"***இற்றைப் பறை கொள்வான் அன்று காண்***" **பறை** என்று கடைசிவரையில் சொல்லி, இதற்கு **நித்திய கைங்கர்யம்** என்று பொருள்; இதை பெறத்தான் நோன்பு நோற்றோம் என்கிறார்.-29

இ. **நவின் றோர்க்கினிமை** (சொல்வதற்கே இன்பமாயிருக்கும்) (உம்.)
"***குத்து விளக்கெரிய.... வாய்திறவாய்***" - 19.

ஈ. **நன்மொழி புணர்த்தல்** (நல்ல வார்த்தையை நயம்படஉரைத்தல்) (உம்.)

"***எற்றைக்கும் ஏழேழ்க் பிறவிக்கும்.....காமங்கள் மாற்று***" - 29.

உ. **ஓசையுடைமை** - (உம்) -"***நால்முற்றும்பாட இனிமையாயிருத்தல். ஸ்வாபதேசப்பொருளோடு கூடி இருப்பது***"

ஊ. **ஆழமுடைத்தாதல்**- (உம்) "***வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று***" - 13

எ. **முறையின் வைப்பு** - 1-5 பாயிரம்; 6-15 கோபிகைகளை உணர்த்துதல்; பிறகு கண்ணனையும், கண்ணனைச் சார்த்தவர்களையும் முறையோடு எழுப்பி, தான் வந்த காரியத்தை முறையோடு தெரியப்படுத்தி ஜெயித்தமையை, வழியோடு அமைத்திருப்பது.

ஏ. **உலகமலையாமை** - (உ.ம்.) "***செய்யாதன செய்யோம்***" (2) "***மேலையார் செய்வனகள்***" 26.

ஐ. **விழுமியது பயத்தல்** -(உ.ம்.) "***கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா***" 27.

ஒ. **விளக்கு உதாரணத்தது ஆதல்**- (உ.ம்.) "***புள்ளரையன் கோயிலில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ***"- 6. "***மத்தினால் ஓசைபடுத்த காசும் தயிரரவம் கேட்டிலையோ***" 7; "***உங்கள் ... கூம்பினகாண்***" - 14.

**6. தண்ணென் ஒழுக்கமும் தழுவி:-** பெரியாழ்வாரிடம் ஸ்ரீபாகவதக் கதையைக் கேட்டு, அன்று கோபிகைகள் கண்ணனை அடைய நோற்ற நோன்பை அறிந்து, இவைகள் அனைத்தும் சத்தியம் தானே! நாமும் அப்படி செய்து பார்ப்போமே என்று, "***மார்கழி நோன்பினை- (சுனை நீராடல்- தமிழர் நீராட்டத்தை)***" கோபிகைகள் போல் அநுகரித்து, கண்ணனை அடைந்து, அதன் சத்தியத்தை உலகத்தாருக்கு உணர்த்தி, தானும் அந்நெறி நின்று வெற்றி பெறுகிறார். அதன் வடிவமே **கோதாவரி** என்னும் **சங்கத்தமிழ்மாலை நூல்.**

இப்படி, ஒரு கவியின் லக்ஷணங்களை விவரிக்கும் கம்பன், இவையனைத்தும் தன்னகத்தே கொண்ட கவியை சான்றோர் கவி என போற்றிட அக்கவியை புண்ணிய நதியாம் கோதாவரிக்கு ஒப்பிடுகிறார். இவையனைத்தும் தன்னிடையே கொண்டது கோதையின் திருப்பாவை.

**கோதாவரியின் இழுக்கையே மாற்றிய, கோதை வரிக்கு கோதாவரியும் ஒப்புமையாமோ !**

(கோதாவரியின் விளக்கம் தேசிகரும் - கோதையும் என்ற விடத்தில் விளக்கப்பெற்றுள்ளது).

# சங்கத்தமிழ்மாலையும்- வாழ்வியல் புலவர்களான ஔவையார், திருவள்ளுவர் இவர்களுடன் ஒரு சிறு கண்ணோட்டம்

## ஔவையின் அரிச்சுவடியும் ; கோதையின் ஹரிச்சுவடியும்
## வள்ளுவனின் குறளும்; கோதையின் குரலும் (பாட்டு)

**ஔவையார்** **ஆண்டாள்**

அறம் செய விரும்பு- ஐயமும், பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
ஆறுவது சினம் - சில்லென்றுழையேன்மின்
ஓதுவது ஒழியேல் - சங்கத்தமிழ் மாலை முப்பதும் தப்பாமே
இங்கு இப்பரிசுரைப்பார்.

### திருவளளுவர்

1. *தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்*
*வானம் வழங்காது எனின்.* குறள் 19

### ஆண்டாள்

ஒங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால் தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து..... நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய். 3ஆம் திருப்பாவை.

### திருவள்ளுவர்

2. *அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது.* குறள் 8

### ஆண்டாள்

அம்பரமே, தண்ணீரே, சோறே அறம் செய்யும் எம்பெருமான் நந்த கோபாலா... ஏற்றகலங்கள் எதிர் பொங்கி......ஆற்றப்படைத்தான் மகனே...போற்றியாம் வந்தோம் புகழ்ந்து. 17ஆம் திருப்பாவை

# கோதை தமிழ் மூலம் ஒரு சிறுகணக்கோட்டம்

திருப்பாவை (30)- 3+0=3 ஆசார்ய சம்பந்தம் (கணித ஜோதிடத்தில் எண் 3 குருவின் ஸ்தானம்).
(ஆண்டாள் ஜகத்குருவின் பத்தினி)

1. நாச்சியார் திருமொழி - 143 1+4+3 = 8 (1) ஒற்றை எழுத்தான ப்ரணவத்தின் விவரமான (4) நான்கு வேத சாரத்தை (3) ஆசார்யன் அநுக்ரஹத்தின் மூலம் அறிந்தால், ப்ரணவாகார விமானத்தின் கீழ் எழுந்தருளியிருக்கும் (8) திருவெட்டெழுத்தின் பொருளான நாராயணனை அடையலாம்.

2. திருப்பாவை - 5X5+5=30; பஞ்ச பூதங்களின் சம்பந்தமுள்ள இந்த உடம்பில் (5) ஐம்புலன்களை, (5) ஐம்பொறிகளையும் அடக்கியாண்டால் (5) அர்த்த பஞ்சக ஞானம் சித்திக்கும்; இவை சித்தியானால் திருப்பாவையின் ஆழ்பொருளை உணரலாம்.

3. உயிர்பாட்டு - 15 எல்லே இளங்கிளியே; பாகவத சம்பந்தம்; 1+5=6 ஆண்டாள் சொன்ன உய்யும் 6படி நடந்தால் நாராயணனை அறியலாம், அடையலாம்.

4. உயிர்பாட்டு - 18 உந்துமதகளிற்றன்; ஆசார்யன் (ராமானுஜர்) உகந்த பாசுரம்

1+8=9 18ன் விசேஷம்: புராணம் - 18; கீதாசுலோகம் - 18; எம்பெருமானார் ஆசார்யனிடத்தில் ரஹஸ்யார்த்தம் கேட்கத் திருக்கோட்டியூர் சென்றது -18 முறை; பிள்ளைலோகச்சார் அருளிச் செய்த ரஹஸ்ய நூல்-18 (அஷ்டாதச ரஹஸ்யம்); ஆசார்ய ரத்தினமாலையில் ஆசார்யர்கள்- 18 (ஒராண்வழி) இப்படி வைணவ ரஹஸ்யங்களின் சம்பந்தகளை உடைய எண் 18. இது 1+8-(1) ஒற்றெழுத்தான ஓங்கார ப்ரணவ வாச்யனான திருவரங்கனை, (8) திருவஷ்டாக்ஷர மந்திர உபதேசத்தாலும், திருமந்திர ரஹஸ்யார்த்த காலக்ஷேபங்களாலுமே (முமுக்ஷுப்படி) தெளிவாக அறிந்து அவனைக் கிட்டமுடியும், என்று அறிந்து மகிழலாம். 1+8 = 9 இதன் மூலம் பகவானின் நவவித சம்பந்தத்தை அறிந்து ஆனந்திக்கலாம். இப்படி சங்கத்தமிழோடு கணக்கையும் கணித ஜோதிடத்தின் ஒரு துளியையும் இணைத்து சங்கத்தமிழ்மாலை எதற்கும் ஈடுகொடுப்பதை எண்ணி மகிழலாம்.

இயல் - 10

# சங்கத்தமிழ்மாலையும் - அதன் தாக்கமும் (தற்காலத்தில்)

தற்காலத்தில் சங்கத்தமிழான திருப்பாவையின் மேன்மையானது 1) கோவில்களிலும் 2) கலை அரங்குகளிலும், வெளிநாடுகளிலும்; 3) பொதுமக்களிடத்திலும் எப்படி சிறப்புற்றியிருக்கிறது என்று கீழே விவரிக்கப் படுகிறது.

## 1) திருப்பாவையின் தாக்கம் கோவில்களில்:-

இன்றும் வைணவக் கோயில்களில் கோதை தமிழ் ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை வையம் சுமப்பதுவும் வம்பு என்ற பூர்வர்களின் கருத்துப்படி திருப்பாவை சாற்றுமுறை தினமும் கோவில் அத்யாபகர்களால் (வேதம் விண்ணப்பம் செய்வார்) அநுசந்திக்கப்படுகிறது. இதில் விசேஷம் என்னவென்றால் திவ்ய பிரபந்தங்கள் சேவிக்கக் கூடாத அநத்யயான காலத்தில் கூட திருப்பாவையானது சேவிக்கப்படும். இதிலிருந்து பெருமான் எதைப் பிரிந்தாலும், ஸ்ரீ ஆண்டாளையும் அவளது திருப்பாவையையும் பிரிந்திரிக்க விரும்பமாட்டான் என்று தெரிகிறது. உத்ஸவ காலங்களிலும் திருப்பாவை சாற்றுமுறை முடிந்தால் மட்டுமே உத்ஸவம் முடிந்ததாகக் கொள்ளப்படும்.

மேலும் இன்றும் திருமால் கோவில்களில் மார்கழி மாதம் 30 நாட்களும் திருப்பாவை பாசுரத்தை சேவித்து, அன்றைய நாள் பாட்டையும் சேவித்து, கடைசி நாளன்று (சிற்றஞ்சிறுகாலை) ஆண்டாளையும், பெருமாளையும் சேர்ந்து போகி கல்யாண உற்சவமாகக் கொண்டாடுகிறார்கள். ஸ்ரீவில்லிபுத்தூரில் மாலே மணிவண்ணா என்ற பாசுரம் இரட்டைப் பாசுரமாக சேவிக்கப்படுகிறது. ஸ்ரீபெரும்பூதூரில் கீசு கீசெ தூமணி மாடம் என்ற பாசுரம் இரட்டைப் பாசுரமாக சேவிக்கப்படுகிறது. இவை விசேஷமானவை.

திருவேங்கடமலையில் ஸ்ரீநிவாஸனுக்கு திருமஞ்சன காலத்தில் (மூலவர்) திருவாபரணங்களையும் போது அகலகில்லேன் இறையுமென்று இருக்கும் வக்ஷஸ்தல தாயாரை கலையவேண்டிய நிர்பந்தத்தில் நாச்சியார் திருமொழியையும், திருப்பாவையையும் அநுசந்திக்கிறார்கள். இதை பகவான் மயங்கி கேட்டுக் கொண்டு இருக்கும் காலதிற்குள் திருமஞ்சனத்தை முடித்துவிட்டு திருமார்பு தாயாரை திருவேங்கடமுடையானுக்கு சாத்திவிடுகிறார்கள். இது மிகவும் ஆசர்யமானது.

ஸ்ரீவில்லிபுத்தூரில் மார்கழி மாதம், ஆண்டாள் நீராட்ட உற்ஸவம் 8 நாட்கள் கொண்டாடப்படுகின்றது. மற்றைய கோவில்களில் 7 நாட்கள் கொண்டாடப்படுகின்றது. (இதன் சிறப்பு மாமுனிகளின் ஐதிகத்தில் கொடுக்கப்பட்டுள்ளது). திருவல்லிக்கேணியில் இந்த நீராட்ட உற்ஸவத்தில ஒவ்வொரு ஆழ்வாரும் தனித்தனியாக ஆண்டாளுக்கு சீர் (சீர்வரிசை) வைப்பது விசேஷம்.

எல்லா வைணவ கோவில்களிலும் ஸ்ரீஆண்டாளின் அவதார உற்சவமான திருவாடிப்பூர உற்சவம் 10 நாட்கள் மிகவும் வைபவமாக நடக்கிறது. அதுபோல போகி கல்யாண உற்சவமும் நடக்கிறது.

## அ) பகவான் ஆண்டாளுக்குக் கொடுத்திருக்கும் ஏற்றம்:-

திருமாலிருஞ்சோலை அழகர் சித்திரா பௌர்ணமி உற்சவத்தில் குதிரை வாகனத்தில் எழுந்தருளும் முன், ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து வரும் ஸ்ரீஆண்டாளின் புடவையும், மாலையும் அணிந்து கொண்ட பிறகே எழுந்தருளுவார்.

திருவேங்கடமுடையான் புரட்டாசி மாதம் ப்ரம்மோற்சவத்தில் நாச்சியார் திருக்கோலத்தில் எழுந்தருளும் முன், ஆண்டாளின் மாலையையும், வஸ்தரத்தையும் அணிந்துகொண்டுதான் எழுந்தருளுவார்.

ஸ்ரீவில்லிப்புத்தூரில் திருஆடிப்பூர உற்சவம் 7ஆம் திருநாளன்று (க்ருஷ்ணன் கோவிலில்) ஆண்டாள் மடியில் ரங்க மன்னர் படுத்துக்கொண்டிருக்கும் சயன உற்சவமம் எங்கும் காண அரிதான காட்சியேயாகும்.

இப்படி, சூடிக்கொடுத்த நாச்சியாரின் சூடிக்கொடுத்த மாலையையும், உடுத்துக்களைந்த பீதகஆடையையும் பகவான் போக்யமாக ஏற்றுக் கொண்டு ஆண்டாளுக்குதான் பரதந்திரனாய் இருப்பதை, வெளிப்படுத்திக் கொண்டு இருக்கும் அழகை இன்றளவும் 1. திருமாலிருஞ்சோலை 2. திருவேங்ககடம் 3. திருவில்லிபுத்தூர் ஆகிய திவ்யதேசங்களில் காணலாம்.

## ஆ. பாகவதர்கள் ஆண்டாளுக்குக் கொடுத்திருக்கும் ஏற்றம்:-

அது மட்டுல்லாமல் ஆழ்வார்கள் கோஷ்டியைச் சேர்ந்த ஆண்டாள், அவர்களிலும் விஞ்சிய தன்மையளாய் பகவானைத் திருமணம் புரிந்து கொண்டு, அனைத்து வைணவ திருத்தலங்களிலும் தனி சன்னதியாகக் கோயில்கொண்டு தன் அவதார உற்சவத்தையும் அனைத்து பக்தர்கள் மூலம் விமரிசையாக நடத்திச் கொண்டு (திரு ஆடிப்பூர உற்சவம்) பகவானுடன் வீதி உலாவி தனக்கு நிகர் தானே என்று பவனி வருகிறாள். ஸ்ரீஆண்டாளின் (திருவடியான) சடாரி அனைத்து ஆழ்வார்களுக்கும் (இவர் காலத்திற்கு முன்பு அவதரித்த ஆழ்வர்களுக்கும், ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வார் உட்பட அனைவருக்கும்) சாதிக்கப்பெறுகின்றது. ஆண்டாளின் தனித்து (பகவானுடன் இல்லாமல்) மானிடப்பிறவியாய் அவதரித்து, இப்படி ஒரு மகத்தான ஏற்றம் பெற்று. பகவான், பக்தர்கள் அனைவருக்கும் மிகவும் பிரியமுள்ள மதிப்புடைய சோலைக்கிளியானாள் ஸ்ரீஆண்டாள்.

மனனார்குடி ராஜகோபால ஸ்வாமி



ராஜகோபால ஸ்வாமி விரும்பி சாற்றிக்
கொள்ளும் 'ஸ்ரீ ஆண்டாள் திருக்கோலம்'

திருவில்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதிப் பெருமாள்



**சரமஸ்லோகம்**

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம்வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ: மோக்ஷயிஷ்யாமி மாசுச:

இதிலிருந்து பிராட்டியாகவும், பக்தையாகவும் இருக்கும் ஸ்ரீஆண்டாளின் மீது பெருமாள் எவ்வளவு ப்ரீத்தி வைத்திருக்கிறான் என்று தெரிகிறது. மேலே சொன்னவை அனைத்தும் அவற்றை வெளிப்படுத்துகிறது. பக்த பராதீனான பகவான் தன் பாரதந்திரியம் தோற்ற எல்லா கோவில்களிலும் ஸ்ரீஆண்டாளுடன் எழுந்தருளி அருள் பாலிக்கிறான்.

ஆழ்வார்களின் காலத்திலேயே மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வாரின் பாசுரங்களை **குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித் திரிவனே** (கண்......2) என்கிறபடி தாளத்துடன் பாடி பரப்பியதாகத் தெரிவிகிறது. திருமங்கையாழ்வாரும், திருநெடுந்தாண்டகம் என்னும் ப்ரபந்தத்தை திருவரங்கன் முன்னிலையில் அபிநயத்துடன் பாடி அவரை ஆனந்தம் அடையச் செய்தார். அந்த ஆனந்தத்தினால், அன்று முதல் திருவரங்கன் தன் சன்னிதியில் தமிழ் வேதத்தை (திவ்ய ப்ரபந்தம்) தான் கேட்கும்படி சேவிக்க செய்தார்.

ஸ்ரீமந் நாதமுனிகள் நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களிலுள்ள இசைப்பாவில் அமைக்கப்பட்டுள்ள பகுதிகளுக்கு ராகம், தாளம் அமைத்து அதற்கு தேவகானம் என்று பெயரிட்டு பாடிப் பரப்பியதாகத் தெரிகிறது. மேலும் இவரே, நாலாயிர திவ்யப்ரபந்தங்களை பகவான் முன்னிலையில் அத்யாபகர்கள் மூலம் கோவில்களில் இயல் கோஷ்டியாக சேவிக்கும் பந்ததியையும், இசைப்பாக்களை அரையர்கள் மூலம் அபிநயத்துடனும், தாளத்துடனும், இசையுடனும் பகவான் முன்னிலையில் சேவிக்கும் பந்ததியையும் ஏற்படுத்தினார் என்றும் தெரிகிறது. இன்றளவும், திருவரங்கம், திருநாராயணபுரம், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய திவ்ய தேசங்களில் இயல், இசை, நாடக ரூபமாக அரையர் சேவையில் திருப்பாவை உட்பட மற்றைய பிரபந்தங்களும் பெருமாள் முன்னிலையில் அரையர்களால் சேவிக்கப்படுகின்றன. இந்த அரையர் சேவை மிக ஆச்சர்யமாக நடைபெற்று வருகிறது.

## 2) திருப்பாவையின் தாக்கம் கலை அரங்குகளில்:-

அ) **சங்கத்தமிழ் மாலை வளர்ச்சியில் இசை கலைஞர்களின் பங்கு:** பிற்காலத்தில் திவ்ய ப்ரபந்தங்களில் உள்ள சில பகுதிகளான திருப்பாவை, வாரணமாயிரம், பெரியாழ்வார் திருமொழியல் உள்ள தாலாட்டு, திருமாலை இவைகளை பலர் பரவலாக இசையோடு பாடி வருகிறார்கள்.

இதில் முக்கியமாக 1952 ஆம் வருடம் ஸ்ரீவில்லிபுத்தூரில் திருப்பாவை, முப்பது பாசுரங்ளுக்கும் ராகம் அமைத்து சங்கீத ரத்னாகர சிகாமணி திரு. அரியக்குடி இராமானுஜ ஐயங்கார் ஸ்வாமிகள் ஸ்ரீஆண்டாள் ரங்கமன்னார் முன்னிலையில் முதன் முதலில் பாடினார். அதற்கு பிறகு, திருப்பாவையை மேடை கச்சேரிகளிலும் அதிகமாக பாடினார். அதற்கு பிறகு, அவரது சிஷ்யரான கே.வி. நாராயண ஸ்வாமி,

அரியக்குடி ஸ்வாமியின் ஸ்வர அமைப்பிலிலேயே திருப்பாவையை பாடி ஒலி நாடா கொடுத்திருக்கிறார். M.L வஸந்தகுமாரி அவர்களும் திருப்பாவை முப்பது பாட்டுகளுக்கு 30 ராகங்கள் இட்டு ஒலிநாரட மூலம் நம் நாட்டிலும், வெளி நாடுகளிலும் பரப்பினார்.

## அடியேனுடைய சங்கீதாச்சார்யரான ஸ்ரீராம பாரதியின் இசைத் தொண்டு:-

அரியக்குடி ராமாநுஜ ஐய்யங்கார் ஸ்வாமியின் சிஷ்யரான V. V. சடகோபன் ஸ்வாமி திருப்பாவையை பாமர ஜனங்களும் அறிந்து பாடவேண்டுமென்று ராகங்கள் அமைத்து குடும்பப் பெண்கள் பலருக்கும் சொல்லிக் கொடுத்தார். அவருக்குப் பிறகு அவருடைய அந்தரங்க சிஷ்யரான ஸ்ரீராம பாரதி ஸ்வாமி திருப்பாவையின் அர்த்த விசேஷங்களுக்கேற்ப ராகங்களை தொகுத்து ஸ்வரப் படுத்தி, பாடி, பொதுமக்களிடத்தில், பல நூதன வழிகளில் (வீடியோ, ஆடியோ மூலம்) பரப்பி பெருந் தொண்டாற்றி வருகிறார். இவரும் பல குடும்பப் பெண்களுக்கு திருப்பாவையையும், திவ்யப்பிரபந்தங்களையும் இசையுடன் சொல்லிக் கொடுத்து அவர்களை குழாங்களாய் அமைத்து பல நாச்சியார் கோஷ்டிகளை உருவாக்கி அவர்கள் மூலம் ஆண்டாள், ஆழ்வார்கள் ப்ரபந்தங்களைப் பாடியும், ஆண்டாள் வழியைப் பின்பற்றி பல தொண்டுகளை ஆற்றுமாறு செய்வித்து வருகிறார். இவருடன் இவருடைய தர்மபத்தினியான சௌபாக்யலக்ஷ்மியும் இணைந்து தொண்டாற்றுகிறார். இது ஒரு மகத்தான தெய்வீகப் பணி.

ஆ) **சங்கத்தமிழ் மாலை வளர்ச்சியில் நடன கலைஞர்களின் பங்கு:** இதில் கலாஷேத்ரா முக்கிய பங்கு வகுக்கிறது திருமதி. ருக்மணி அருண்டேல் **ஆண்டாள் சரித்திரம்** என்னும் நாட்டிய நாடகத்தை பலமுறை மேடைகளில் நாட்டிய நிகழ்ச்சிகள் மூலம் பரப்பியுள்ளார். திருமதி வைஜயந்திமாலா அவர்களும் **சங்கத் தமிழ் மாலை** (திருப்பாவையை) என்னும் தலைப்பில் நடன நிகழ்ச்சியை மார்கழி மாதங்களில் பல அரங்குகளில் நடத்தி பரப்பியுள்ளார். பள்ளிக்கூடங்களிலும் பல குழந்தைகள் ஆண்டாள் திருக்கல்யாணம், என்று நாட்டிய நாடகமாக நடத்திக் களிக்கின்றனர். இப்படி ஆண்டாளின் சரித்திரத்தையும், ஆண்டாளின் ப்ரபாவங்களையும், ஆண்டாள் கல்யாணம் என்கிற தலைப்புகளிலும் இயல், இசை, நாடகமாக - நாட்டிய கலைஞர்களும், திருப்பாவையை இசைக்கலைஞர்களும் உலகெங்கிலும் பரப்பி பெருந்தொண்டாற்றி வருகின்றார்கள். அதற்கு நல்ல வரவேற்பும் உள்ளது.

## 3) திருப்பாவையின் தாக்கம் பொதுஜனங்களிடத்தில்:-

பக்தர்கள் பலர் கோவில்களிலும், அரங்குகளிலும் "**ஹரிகதா**" காலக்ஷேபமாக ஆண்டாள் வைபவத்தையும்; பல வைணவப் பெரியோர்கள் உபன்யாசமாக திருப்பாவையின் சாரத்தையும், திருப்பாவையின் பெருமையையும், அவள் சொன்ன வாழ்க்கை நெறியையும் மக்களிடையே

பரப்பி வருகிறார்கள். நாச்சியார் கோஷ்டிகளாக பல குடும்பப் பெண்கள் இத்திருப்பாவையை இசையோடு பல இடங்களிலும், வீடுகளிலும், சுபநிகழ்ச்சிகளிலும் (கல்யாணம்) பாடி, ஆண்டாள் கல்யாணம் செய்து ஒரு விழாவாகக் கொண்டாடி, இதன் மூலம் ஸ்ரீஆண்டாளின் பெருமைகளைப் பரப்புகிறார்கள்.

ஜாதி மதபேதமின்றி அனைத்துப் பெண்களும் சிறுமியர்களும், மார்கழி மாதம் முழுவதும் எல்லா கோவில்களிலும் அதிகாலையில் குளித்துவிட்டு நெற்றியில் நெற்றித் திலகத்தை தீர்க்கமாக அணிந்து கொண்டு கூட்டம் கூட்டமாக திருப்பாவை சொல்லும் அழகைப் பார்க்கும் போது இதன் முழு பெருமையும் ஆண்டாளைச் சேர்ந்ததன்றோ! என்னும் அளவில் நம்மை வியக்க வைக்கின்றது.

"க்ருஷ்ணாந்வயேந.......கோதே விகஸ்வரதியாம் பவதீ காடக்ஷாத் வாசஸ் ஸ்புரந்தி மகரந்தமுச: கவீநாம்"

கோதாஸ்துதி ஸ்லோகம் 4 .

ஸ்வாமி தேசிகன், ஆண்டாளுடைய திவ்ய ஸூக்திகளில் ஆழங்கால் படுவார்க்கு அவளுடைய கடாக்ஷமே அடியாக, நல்ல புத்தி கொழுந்து விட்டோங்கிப் படருமென்றும், அன்னவர்களும், தேனிலும் இனிய செஞ்சொற்கவிகளை இயற்றும் வல்லமை பெறுவார்களென்று சொல்கிறார். இப்படி மாபெரும் கவியான ஸ்ரீஆண்டாளிடம் பூரணமாக ஈடுபட்டவர்களையும் கவிஞர் ஆக்கக் கூடிய ஏற்றம் அவளுக்கும், அவள் திருப்பாவைக்கும் உண்டு என்பது நிதர்சனம். அவளை அண்டின பாமரனும் பரம கவியாகிவிடுவான். எத்தனையோ பெண்கள் (ஆண்டாள் பக்தைகள்) சிறந்த கவிஞர்களாக விளங்குவதே இதற்கு எடுத்துக்காட்டு. என்னே அவள் அருள்!

**இதுவும் ஒரு தாக்கமே!** நாச்சியார் கோஷ்டிகள் பலர் பெருமாளுக்கு திருவாபரணம் சமர்ப்பித்தும், பூமாலை பாமாலை சமர்ப்பித்துமான பல கைங்கர்யங்களை வைணவத் திருத்தலங்களில் நடத்தி வருகின்றனர். இதில் முக்கியமாக அடையாரில் இயங்கி வந்த அடியோங்களுடைய **பக்தாஞ்சலி "நாச்சியார் கைங்கர்ய கோஷ்டி"** மூலம், ஒரு பெருமாள் சன்னதியை கைங்கர்ய ஸ்வீகாரம் செய்து கொண்டு, **ஆண்டாள் ஆராதனா உற்சவ**த்தை மிக விமரிசையாக நடத்தியும், சன்னிதியில் பல ஆண்டாள் கைங்கர்யங்களை நடத்தியும் வந்தது. அதுபோல ஸ்திரிகள் குழாங்களாய் அமைத்துக் கொண்டு, பக்கத்தில் உள்ள கோவில்களை ஸ்வீகாரம் செய்து கொண்டு, கைங்கர்யங்களை செய்து ஆண்டாளிடம் நம் க்ருதாஞ்சலியை தெரியப்படுத்தலாம். (ஸ்ரீவில்லிப்புத்தூரில் இன்றும் திருஆடிப்பூ

உற்சவத்தில் 10 நாட்கள் அரங்கமைத்து பல கலை நிகழ்ச்சிகள் தேவஸ்தானத்தின் மூலம் நடைபெற்று வருகின்றன).

இன்றும், திருமணமாகாத குழந்தைகளுக்கு முதன் முதலில் ஜாதகம் எடுக்கும் போது அவாகள் வீடுகளிலும், வீடுகட்டி "**க்ரஹப்ரவேசம்**" செய்யும் இடங்களிலும் ஆண்டாள் திருப்பாவை, நாச்சியார் திருமொழி இவற்றை கோஷ்டியுடன் இயலாக சேவித்தோ, இசையாகப் பாடியோ ஸ்ரீஆண்டாளின் விசேஷ அருளைப் பெறுவது வழக்கத்தில் உள்ளது நம்நாட்டில்.

செவ்வாய் - பூமிகாரகன்; அவருடைய மற்றொரு பெயர் பௌமன் - பூமிபுத்திரன்: ஸ்ரீஆண்டாள் - பூமிப்பிராட்டியின் அம்சம் - ஆகையால்:-

ஒருவருடைய ஜாதகத்தில் செவ்வாய் தோஷமிருந்தாலோ, சுக்கிரதோஷமிருந்தாலோ, சொத்துக்களான நிலம், வீடு வாங்க வேண்டியிருந்தாலோ அவ்விடங்களில் பூமிப்பிராட்டியான ஆண்டாளின் பாசுரங்களை சேவித்து, ஆண்டாள் மன்னாரை பூஜித்து, ததியாராதனை செய்ய வேண்டும். இப்படி, பூமிப்பிராட்டியை கொண்டாடுவதால் பூமிக்காரகன் (பூமிப்புத்திரன்) செவ்வாய் மனமகிழ்ந்து "***மங்கள செவ்வாயாக மாறி***" அவர்களுக்கு நல்ல பலன்களை தருவதோடு ஆண்டாள் மன்னார் அருளும் கிடைக்கும் என்பது கண்கண்ட உண்மை.

★ ★ ★ ★

# ஆய்வாளரின் முடிவு

இப்படிப்பட்ட ஆண்டாளின் திவ்ய சரித்திரமும் ஆண்டாளின் சங்கத்தமிழ் மாலையையும், ஆன்மிகத்தில் உள்ள அனைவரும் படித்துணர்ந்து இப்பாமாலையின் ஏற்றத்தை, குழந்தைகள் அறிய பள்ளிகளிலும், ஸம்சாரிகள் அறிய இல்லங்களிலும், உலகமறிய அரங்குகளிலும், திருவிழாக்களில் பல விதமாக பரப்பி ஆண்டாளாக்கு அந்தரங்க கைங்கர்யபரர்களாய் மாறி இந்த ராஜயோகத்தை (பகவானை காண்பிப்பது - ராஜயோகம்) அனைவரும் அடையும்படி செய்யவேண்டும். இதை படிக்கும் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவரும் திடசங்கல்பம் கொண்டு அப்பணியை நம் சிர பூஷணமாய் அணிந்து அந்த ஆண்டாள் ரெங்க மன்னார் திவ்ய தம்பதிகளின் திவ்ய கடாக்ஷத்தினால் அப்பணியை தொடங்க வேண்டும் என்பது அடியேனுடைய கரம் குவித்த விஞ்ஞாபனம்: வாழ்க சூடிக்கொடுத்த நாச்சியாரின் புகழ்! வளர்க எம்பெருமானர் தரிசனம்!

# ஆய்வின் முடிவு

**பொதுநிலை முடிவுகள்:-**

1. ஸ்ரீமந் நாராயணின் உபய நாச்சியார்களில் ஒருவரான பூமிதேவியின் அம்சமே ஸ்ரீஆண்டாளாக அவதரித்திருக்கிறார் என்று காட்டப்பெற்றுள்ளது.

2. பெரியாழ்வார் மற்றைய ஆழ்வார்களைக் காட்டிலும் மங்களாஸாசனத்தில் விஞ்சி நிற்கும் தன்மையரானவர் என்பது பற்றியும், அவருடைய பக்தி நிலையை எம்பெருமானும் பிராட்டியும் எப்படி மிகவும் விரும்பி ஏற்றிருக்கிறார்கள் என்பது பற்றியும், இதில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆண்டாள் பெரியாழ்வார் திருமகளாக அவதரிக்க நேர்ந்ததிலிருந்தும் அவர் ஏற்றம் காட்டப்பெற்றது.

3. வராஹ க்ஷேத்ரமான ஸ்ரீவில்லிபுத்தூரை ஆண்டாள் தேர்ந்தெடுத்ததிலிருந்தும், பெருமாள், ஆண்டாள், ஆழ்வார் (அ.உ.ம) தோற்ற எழுந்தருளியிருப்பதிலிருந்தும் அவ்வூர் எப்படி சிறப்பு வாய்ந்தது என்று காட்டப்பெற்றது.

4. இவருடைய இரண்டு ப்ரபந்தங்களிலும், சமுதாய உணர்வும், பக்தி நெறியும், வாழ்க்கை நெறியும் அமைந்த முறையும் காட்டப்பெற்றது.

5. ஆழ்வார்கள் பரம்பரையில் பக்திசாரர், மதுரகவி அதற்கடுத்த படியாக ஆண்டாள் எப்படி குரு- சீடர் பரம்பரையை அமைத்துள்ளார், மற்றைய இருவரைக் காட்டிலும் இவர் ஒருவரே ஆசார்யன் பெயரோடு தம் பெயரை முத்திரையில் பதித்துள்ளார் என்றும் காட்டப்பெற்றது. (பட்டர்பிரான் கோதை சொன்ன - தாஸநாம முத்திரை) தந்தை, மகள் இருவருக்கும் ஞானப்பிரான்தான் குரு. இது ஒரு அதிசயம்.

**சிறப்புநிலை முடிவுகள்:-**

1. சாதி, மத வேறுபாடின்றி, அனைவரும் ஒரே தொண்டர்குலம் என்றும், (அவரவர்கள் பிறந்திருக்கும் இடத்துக்குச் சேர, அவரவர்களுக்கு இட்ட பணியை, பகவானின் ஆஞ்யா கைங்கர்யமாய்ச் செய்தால் போதும். அதுவே கர்ம யோகம் என்று) அதற்கு ஆண்டாளே எடுத்துக்காட்டாக வேயர் குலத்தில் பிறந்து ஆயர் குலப் பெண்ணாய் (தொண்டர்குலமென்பதால்) அநுகரித்துக் காட்டியதை எடுத்துக் காட்டப்பெற்றது.

2. ஆண்டாள் போதித்த கருத்துக்கள் யாவும் (ஆற்றுப்படை ) சமுதாயத்திற்கு வழிகாட்டுகின்றன என்பதும் உணர்த்தப்பெற்றது.

3. அர்ச்சாவதாரப் பெருமானை தன் பக்தியால் இயங்கும்படி செய்து, அவருடன் தன் திருக்கல்யாணத்தை நடத்திக் கொண்டு, இன்றைக்கும் சாட்சியாய் எல்லா திவ்ய தேசங்களிலும் பெருமாள் பக்கலில் "தாயாராய்" எழுந்தருளியிருப்பது காட்டப்பெற்றது.

4. சமயக் காழ்ப்பின்றி உயர்ந்த நிலைகளான பக்தி, ப்ரபத்தி, வைணவ தத்துவம் ஆகியவற்றை விளக்கி, ஜீவாத்மாவிற்கும் - பரமாத்மாவிற்கும் உள்ள உறவினை உணர்த்தி ஒழுக்கங்களையும், வாழ்க்கை நெறிகளையும் வெளியிட்டிருப்பதால், இந்த ப்ரபந்தம் மக்களிடையே மிகவும் உயர்ந்ததாகப் போற்றப்பெறுகின்றது என்பது காட்டப்பெற்றது.

5 இவருடைய பாசுரங்களில் திருமாலின் சிறப்பை எடுத்துக்காட்டுவதோடு, ஜீவாத்மாவின் சக்தியையும், செயலாற்றலையும் வெளிப்படுத்தி, மக்களுக்கு பக்தி, ப்ரபத்தி யோகத்தை முறையாகத் தெரியப்படுத்தி, அதன் மூலம் மக்களை ராஜயோகத்தையும் (பகவானை அறிதல்), சகஜ யோகத்தையும் (பகவானை சகஜமாக அறிதல்), அனுஷ்டிக்குமாறு தன் உபதேசம் மூலமாகச் சொல்வதோடு, செய்து காண்பித்தார் என்பது எடுத்துக்காட்டப் பெறுகிறது.

இத்துடன், திருப்பாவையோடு - மற்றைய அனைத்து சாஸ்திரங்களும் ஒப்பிட்டுக் காட்டப்பெற்றுள்ளன. திருப்பாவை எப்படி அனைத்து ரஹஸ்யங்களையும் தன்னிடத்திலே கொண்டுள்ளது என்றும், பிற்காலத்தில், சமுதாயத்தில் அதன் தாக்கம் எப்படி இருந்தது என்றும் காட்டப்பெற்றது.

***இனி இவ்வாய்வுச் சிந்தனைகள் மூலம் வருங்கால ஆய்வாளர்களுக்குக் குறிப்பிடத்தகுந்தவையாக அமைந்தவை:-***

திருப்பாவையில் ஆண்டாளின் உபதேசங்களை ஆய்வு செய்து, அதன் மூலம் கல்வித்துறை, மணவியல் துறை, ஆட்சித்துறை, மனைவியல் ஆகியவற்றில் உலகம் சிறப்பாக அறிந்து கொள்ளுமாறு தொகுத்து வழங்க வேண்டும்.

தற்போது பரவலாகப் பரவிவரும் யோக வகுப்புகளுக்கு, இதை ஆய்வு செய்து இதன் மூலம், ராஜயோகத்தைப் பயிற்றுவிக்க வழிவகுக்க வேண்டும். ஆண்டாள் சொன்ன ராஜயோகத்தை வாழ்க்கையோடு இணைந்து செயல்படுமாறு நடைமுறைப்படுத்தும்படி செய்ய வேண்டும்.

இத்திருப்பாவையை தினசரி அநுஸந்தானம் செய்ய வேண்டும் என்று நம் பூர்வர்கள் வகைப்படுத்தியதிலிருந்தே, அவர்கள் யோக ரகசியத்தை அறிந்தவர்கள் என்றும் அந்த ரகசியம் இத்திருப்பாவையில் எப்படி அமைந்துள்ளது என்றும் அறிந்தவர்கள் என்பது தெரிகிறது.

**சுபமஸ்து**

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 (பதிப்புரை) | 24 | செங்கன் | செங்கண் |
| 3 | 27 | தூளினி | தூளனி |
| 7 | 10 | இராமானுஜர் காலத்திற்கு | இராமானுஜர்-தன் காலத்திற்கு |
| 7 | 11 | அவர் | Delete |
| 9 | 17 | முழுங்கி | முழங்கி |
| 14 | 3 | ஸ்ரீஆண்டாள் | Delete |
| 14 | 4 | என்று | Delete |
| 14 | 6 | என்று | Delete |
| 14 | 27 | கொண்டு | Delete |
| 15 | 23 | இச்சிக்கிறார்கள் என்ற | இச்சிக்கிற |
| 25 | 17 | விஞ்சியதாய் | விஞ்சிய |
| 27 | 13 | யானினே | யானிலேன் |
| 32 | 3 | ஒருவனை | ஒருவனையே |
| 32 | 8 | தீக்குறளைச் | தீக்குறளை |
| 38 | 25 | வாத்ஸலனும் | வத்ஸலனும் |
| 40 | 28 | திருமுகத்தை | திருமுகத்துச் |
| 42 | 15 | தொடர்களால் என்று | தொடர்களால் |
| 42 | 17 | மாமலுருத்தி | மாமலருந்தி |
| 42 | 23 | ஆதி | Delete |
| 42 | 26 | கீழ் எழுலகமும் | கீழ் ஏழுலகமும் |
| 45 | 25 | என்று | என்றும் |
| 45 | 27 | ப்ராமாணமான | ப்ரமாணமான |
| 46 | 19 | ஏற்றும் | ஏற்றம் |
| 50 | 30 | மாயனாான | மாயனான |
| 50 | 32 | ப்ராரப்த் | ப்ராரப்த |
| 51 | 32 | ஆராய்ந்தருளுவான் | ஆராய்ந்தருள் |
| 59 | 14 | சிவத்தாம்பின் | சிறுத்தாம்பின் |
| 62 | 22 | பெய்யவதற்காக | பெய்வதற்காக |
| 63 | 28 | பராசுரபட்டர் | பராசரபட்டர் |
| 67 | 27 | நிஷ்கலங்கமான | நிஷ்களங்கமான |
| 78 | 4 | இதிலிருந்து தெரிவது | Delete |
| 78 | 21 | இடம் ஒரு | இடம்; அங்கு ஒரு |
| 78 | 24 | பகவத்ஸம்பந்தத்தால் | அது பகவத்ஸம்பந்தத்தால் |

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 78 | 25 | க்ருஷ்ணனே | இது க்ருஷ்ணனே |
| 82 | 14 | ஒரு ஊருக்குச்செல்பவன் | ஒரு ஊருக்கு |
| 85 | 28 | என்றும் | என்று |
| 87 | 22 | இடைய | இடை |
| 95 | 3 | புற்ரவல்குல் | புற்றரவல்குல் |
| 97 | 29 | அப்பால் | அப் பால் |
| 102 | 34 | பாவத | பாகவத |
| 108 | 25 | போது போக்கால் | போது போக்காய் |
| 108 | 29 | பகவதனுபவம் | பகவதனுபவத்தை |
| 109 | 11 | தனிமத்தை | தனிமையை |
| 111 | 9 | ஸ்வருபசிகைக்ஷ | ஸ்வரூபசிகைக்ஷ |
| 113 | 1 | விம்பி | விம்மி |
| 113 | 19 | ஆசார்யர்பத்தினி | ஆசார்ய பத்தினி |
| 117 | 5 | க்ருபையையும் | க்ருபையைப்பெற |
| 117 | 6 | பற்றிவனை | பற்றியவனை |
| 119 | 4 | ஒட்டாமல் கிடக்கிற | ஒட்டாமல் - - தடுத்துக்கிடக்கிற |
| 126 | 36 | தர்மபத்நீயாய் | தர்பத்நியாய் |
| 127 | 8 | உபேயந்திரங்களையும் | உபேயாந்திரங்களையும் |
| 127 | 9 | பராபகங்களும் | ப்ராபகங்களும் |
| 129 | 28 | சிறதாக | சிறிதாக |
| 129 | 32 | காடாக்ஷத்தால் | கடாக்ஷத்தால் |
| 130 | 24 | சேஷமம் | க்ஷேமம் |
| 135 | 4 | காப்பிடுகிறோம் | பாடுகிறோம் |
| 137 | 4 | அறுஞ்சுவையாய் | அருஞ்சுவையாய் |
| 137 | 20 | சேஷனான | சேஷபூதனான |
| 141 | 33 | வாச்யனான | வாச்யமான |
| 141 | 38 | புத்தியும் | புத்தியையும் |
| 142 | 1 | புத்தியும் | புத்தியையும் |
| 147 | 11 | அர்த்தித்து | அருத்தித்து |
| 147 | 25 | அடையவதற்கான | அடைவதற்கான |
| 149 | 12 | கிருஷ்ணன் | கிருஷ்ணம் |
| 149 | 13 | என்கிறப்படி | என்கிறபடி |
| 153 | 18 | நோற்றுர் | நோற்று |
| 158 | 1 | அனுககரித்து | அனுகரித்து |

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 159 | 127 | பெருமமையையும் | பெருமையும் |
| 176 | 28 | எழுந்தருளும் | எழுந்தருளியிருக்கும் |
| 179 | 11 | ஆணி ஆய் | அணி ஆய் |
| 179 | 14 | ஆணியாக | அணியாக |
| 179 | 23 | சுமப்பதூம் | சுமப்பதும் |
| 180 | 14 | ஸ்பாரிசநேந்திரியத்திற்கும் | ஸ்பர்சேந்திரியத்திற்கும் |
| 180 | 21 | கொற்றளர் | கொத்தலர் |
| 180 | 32 | ஐந்தினை | ஐந்திணை |
| 181 | 26 | ஏழேழ்க் | ஏழேழ் |
| 181 | 34 | சார்த்தவர்களையும் | சார்ந்தவர்களையும் |
| 182 | 8 | ஓசைபடுத்தகாசும் | ஓசைபடுத்த |
| 185 | 14 | அநத்யயான | அநத்யயன |
| 185 | 27 | திருவாபரணங்களையும் | திருவாபரணம் களையும் போது |
| 185 | 28 | கலைய வேண்டிய | களைய வேண்டிய |
| 186 | 38 | ஆண்டாளின் | ஆண்டாள் |
| 186 | 41 | ஸ்ரீ ஆண்டாள் | Delete |
| 187 | 2 | ப்ரீத்தி | ப்ரீதி |
| 187 | 4 | பராதினான | பராதீனனான |
| 187 | 6 | மதுரககி | மதுரகவி |
| 187 | 8 | தெரிவிகிறது | தெரிகிறது |
| 188 | 3 | ஒலி நாரட | ஒலிநாடா |
| 190 | 31 | எம்பெருமானர் | எம்பெருமானார் |
| 20 | படம் | அறுத்து ஓங்கி உலகளந்த | அம்பரம் ஊடறுத்து ஓங்கி - உலகளந்த |
| 177 | படம் | மணவாள மாமுணிகள் | மணவாள மாமுனிகள் |

தவறுகளை மன்னிக்கவும். வரும் பதிப்பில்
இத்தவறுகளைதவிர்க்க முயற்சிக்கிறோம்.



